# கல்கி தீபாவளி மலர் '99 இலவசம்!

ஆம்; இலவசமேதான்!

கல்கிக்கு இரண்டாண்டு சந்தாத் தொகை ரூ.500/- அனுப்புபவர்களுக்கு, வாரா வாரம் கல்கி இதழ் இல்லம் தேடி வருவதோடு, இவ்வாண்டு கல்கி தீபாவளி மலரும் இலவசமாக வழங்கப்படும்!

ஒரே ஒரு கண்டிஷன்: இரண்டாண்டு சந்தாத் தொகையை 25.10.99க்குள் அனுப்பி வைக்க வேண்டும்.

கல்கி தீபாவளி மலர் '99 பதிவு அல்லது கூரியர் தபால் மூலம் அனுப்பி வைக்கப்படும்.

கல்கிக்கான இரண்டாண்டு சந்தாத் தொகை ரூ.500/- ஐ கல்கி பெயருக்கு மணியார்டர் மூலமாகவோ டிடியாகவோ அனுப்பலாம். வெளியூர் செக்குகளை ஏற்பதற்கில்லை.

மானேஜர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை – 600 097

கல்கி இண்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com | ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

ஹர்ஷத் மேத்தாவின் பெயர் மீண்டும் செய்தித்தாள்களில் அடிபட ஆரம்பித்திருக்கிறது. அவர் மீது ஏராள மான வழக்குகள். ஒரு வழக்கின் விசா ரணை முடிந்து நீதிபதி தீர்ப்பளித்திருக் கிறார். ஐந்து வருடம் கடுங்காவல் தண் டனை!

மாருதி கார் தயாரிக்கும் மாருதி உத்யோக் லிமிடெட்டின் பணம் சுமார் 40 கோடி ரூபாயை சட்டவிரோதமாகக் கையாண்டிருக்கிறார் ஹர்ஷத் மேத்தா. மாருதியின் அதிகாரிகள் சிலரும் இதற்கு உடந்தை!

மாருதி நிறுவனத்திடமிருந்த உபரித் தொகையை (அப்போது மாருதி கார் களுக்கு கிராக்கி இருந்ததால் டெபாசிட் தொகை குவிந்தது) கிரிண்ட்லேஸ் வங்கி யிலிருந்த தமது சொந்தக் கணக்குக்கு மாற்றச் செய்து, அதைக் கொண்டு பங்குச் சந்தையில் விளையாடினார்!

வங்கிகளுக்கிடையே நடக்கும் பண மாற்று போல் இதைத் தோன்றச் செய்து ஊர் உலகத்தையே ஹர்ஷத் மேத்தா கூட் டணி ஏமாற்றியதாகக் குற்றச்சாட்டு.

வழக்கை விசாரித்த நீதிபதி குற்றம் நிரூபிக்கப்பட்டதாகச் சொல்லி தண்டனை வழங்கியிருக்கிறார்.

ஒரு தனிப்பட்ட நபர் ஒரு பெரிய கம்பெனியை இந்த மாதிரி ஏமாற்ற முடிந்தது என்று நினைக்கும்போது அதிர்ச்சியாக இருக்கிறது. அந்தக் கம்பெனி யின் சட்டதிட்டங்கள் எல்லாம் என்ன வாயின? அந்த 40 கோடி நஷ்டம் அந்தக் கம்பெனிக்கு தனிப்பட்ட முறையில் ஏற்பட்டிருந்தால் அதை அந்தக் கம்பெனி தாங்க முடியும். ஏனென்றால் அந்த நஷ்டத்தை கார்களின் விற்பனை விலை யில் உயர்த்திக் கொள்ளலாம். ஆனால் இந்த ஹர்ஷத் மேத்தா 1992-ல் பங்கு மார்க் கெட்டில் புகுந்து விளையாடி ஆயிரக் கணக்கான நடுத்தர வர்க்கத்தினர்களின் ஆசையை கிளப்பிவிட்டு அவர்கள் தங்கள் வாழ்நாளில் சேர்த்து வைத்திருந்த சேமிப்பை எல்லாம் இழப்பதற்குக் காரண மாக இருந்தார்.

ஹர்ஷத் மேத்தா மும்பை பங்குச் சந்தையில் ஒரு சாதாரண அங்கத்தினராக இருந்தவர். பங்குச் சந்தையில் தினசரி நடக்கும் பேரங்களைக் கூர்ந்து கவனித்து, அதிலிருக்கும் பலவீனமான அம்சங்களைப் புரிந்து கொண்டு அதையே தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டார்.



பங்குச் சந்தையில் எல்லோரும் ஏமாறும் வகையில் பெரிய அளவில் பேரங்களை நடத்தினார். குறிப்பிட்ட நிறுவனங்களின் பங்குகளுக் குக் கூடுதல் விலை தந்து ஏராளமாக வாங்கினார். அதனால் திடீரென்று பல பங்குகளின் விலைகள் செயற்கையாக உயர்ந்தன. ஹர்ஷத் மேத்தாவின் பெயரும் எல்லாருடைய வாயிலும் புறப்பட்டுக் கிளம்பியது. 'இதோ, பங்குச் சந்தையில் ஒரு அற்புதத்தை நடத்துகிறார் இவர். அவர் தொட்டதெல்லாம் துலங்குகிறது. அவர் எந்த ஒரு கம்பெனியின் பங்கினை வாங்கினாலும் அவை உடனடியாக விலை

# பங்குச் சந்தையைப் பந்தாடியவர்!

ஏறுகின்றன' என்ற பேச்சு வளைய வந்தது. அதனால் ஹர்ஷத் மேத்தா எந்தப் பங்கில் பணம் போடுகிறாரோ அதே பங்கில் மற்றவர்களும் பணம் போட ஆரம்பித்தார்கள், அந்தப் பங்குகளின் விலை ஏறும் என்று!

ஒரு வருட காலத்திற்கு மேலாகவே பல பங்குச் சந்தையில் புகுந்து விளையாடி எல்லோரையும் – அனுபவம் உள்ளவர்களையும் கூட ஏமாறும்படி செய்தார். 'அப்பொழுது நிதி அமைச்சராக இருந்த டாக்டர் மன்மோகன் சிங்கும் பங்குச் சந்தை நடவடிக்கைகள் குறித்துச் சொல்லும்போது தங்களுடைய நிதி நிர்வாகம்தான் பங்குச் சந்தையின் விலை ஏற்றத்திற்குக் காரணம் என்று பெருமிதம் கொண்டார். உண்மையில், சம்பந்தப்பட்ட நிறுவனங்களின் லாபகரமான இயக்கத்தினால் பங்குகளின் விலை ஏறவில்லை; அவற்றுக்கு ஹர்ஷத்மேத்தாவால் ஏற்படுத்தப்பட்ட செயற்கையான கிராக்கியினால்தான் ஏறியது!

இந்தச் செயற்கையான விஷயம் எத்தனை நாளைக்குத்தான் இயற்கையானது போல் காட்சியளிக்க முடியும்?

எனவே, நீர்க்குமிழி ஒருநாள் வெடித்து விட்டது. கடன் வாங்கிய தொகையையும் சேமிப்புகளையும் பங்குச் சந்தையில் போட்டிருந்த பல்லாயிரக்கணக்கான நடுத்தரவர்க்கத்தினர் ஏமாந்து விட்டோம் என்று தெரிந்து கொண்டார்கள். அவர்களுடைய பங்குகளின் விலை ஒரே நாளில் சரிந்து விட்டது! என்ன செய்வார்கள், அரசு உடனடி கண்துடைப்பு நடவடிக்கையாக சில சட்ட திட்டங்களைக் கொண்டு வந்தது. இருந்தாலும் போன பணம் போனதுதான்.

ஆனால், ஹர்ஷத் மேத்தா, தாம் வாங்கிய பங்குகளை, தாம் ஏற்றிவிட்ட செயற்கை விலையுயர்விலேயே விற்றுப் பணமாக்கிக் கொண்டதால், இதுவொரு நீண்ட கால முதலீடு என்று நினைத்துப் பங்குகளில் முதலீடு செய்த பொதுமக்களே நஷ்டமடைந்தார்கள்!

அன்று பங்குச் சந்தையில் நம்பிக்கை இழந்த பொது மக்கள் இன்னும் அந்த நம்பிக்கையைப் பெறவில்லை. அரசும் பங்குச் சந்தை நிர்வாகிகளும் எவ்வளவோ முயற்சி செய்தும் பொது மக்களின் நம்பிக்கையைப் பெற முடியவில்லை. இதற்கெல்லாம் ஒரு தனிப்பட்ட மனிதரின் சாகசங்கள்தான் காரணம்!

நமது நிர்வாகத்தில் அவ்வப்போது இந்த மாதிரியான குறைபாடுகள் நிகழ்கின்றன. சமீபகாலத்தில் சில நிதி நிறுவனங்கள் முதலீட்டாளர்களைத் தவிக்கச் செய்தது எல்லோருக்கும் தெரியும். சில பிரசித்தி பெற்ற நிதி நிறுவனங்கள் கூட டெபாசிட் பணத்தை உரிய காலத்தில் திருப்பித் தராமல் தகிடுதத்தம் செய்கிறார்கள்.

ஹர்ஷத் மேத்தா தண்டனை பெற்றிருப்பது ஒரே ஒரு வழக்கில்தான். இன்னும் பல வழக்குகள் அவர் பேரில் உள்ளன.

இந்த ஒரு வழக்குக்கே ஐந்தாண்டுகள் என்றால் மற்ற வழக்குகளையும் சேர்த்தால் எத்தனை ஆண்டுகளோ?

தமது தண்டனையை எதிர்த்து உச்சநீதி மன்றம் வரை சென்று போராடும் வலிமையும் வசதியும் இன்று ஹர்ஷத் மேத்தாவுக்கு இருக்கிறது. அந்த வசதியை அவர் எப்படி அடைந்தார் என்பது அவர் மனச்சாட்சிக்குத் தெரியாதா!

— வி. கோபாலன்

ஜகத்குரு சகடபுரம்
**ஸ்ரீ சங்கராச்சாரியார் ஸ்ரீ கிருஷ்ணானந்த தீர்த்த மஹா ஸ்வாமிகள், சாதுர்மாஸ்ய விரதத்தை அனுஷ்டிப்பதற்காக சென்னையில் எழுந்தருளியிருக்கிறார். அவரிடம் நாட்டு நடப்புகளைப் பற்றிப் பேசினோம். சிக்கலான பிரச்னைகளுக்கும் எந்தத் தயக்கமும் இல்லாமல் பதில் சொன்னார்கள் மஹா ஸ்வாமிகள்...**

# மற்ற மதத்தினரைத் தாக்குபவன் இந்துவே...

"இன்றைய உலகம் மிகவும் அவசர மயமாகவும் இயந்திரகதியாகவும் உள்ளது. கணவன் - மனைவி என்று இருவருமே வேலை பார்க்கும் குடும்பங்களில்கூட பணப்பிரச்னை இல்லாவிட்டாலும் பல காரணங்களால் அமைதி பறிபோகிறது. சதா பறந்து கொண்டிருக்கும் மனிதர்களுக்குக் கடவுளை நினைத்து மனத்தை ஒருமுகப்படுத்த சிறிது கூட அவகாசம் கிடைப்பதில்லை. இந்த நிலை எங்கு கொண்டு போய் விடும்?"

"பாரத பூமி புண்ணிய பூமி. ஹிந்து தர்மத்தைப் போற்றி வளர்த்த பூமி. ஹிந்து தர்மம் என்பது வாழ்க்கை நெறிகளைப் போதிப்பவை. வாழ்க்கைக்கு பணம் தேவைதான். ஆனால் பணத்தை விட தர்மம் முக்கியம் என்பதை நாம் உணர வேண்டும். தர்மத்தை ஒதுக்கும்போது ஜனங்களுக்குக் கஷ்டம், மனச் சங்கடம் எல்லாம் வருகின்றன. அந்த தர்மத்தை விட்டு விட்டு போகம்தான் உண்மை, முக்கியம் என்று கிளம்பியதால்தான் அமைதியற்றுப் போயிருக்கிறார்கள். அந்த கஷ்டத்தை விட்டு கண்டிப்பாக வெளியே வர முடியும். கடவுளை நினைத்துப் பார்க்க நேரம் இல்லை என்பதையெல்லாம் ஒப்புக் கொள்ள முடியாது. டீவி பார்க்க நேரம் கிடைக்கிறதே அது எப்படி? அவசர உலகில், பூஜை செய்வதற்கென்று தனியாக நேரம் ஒதுக்குவது சிரமமாக இருந்தால், கடமைகளுக்கு இடையிலும் கடவுளையும், ஆச்சார்யனையும் நினைத்து அதன் மூலம் அமைதியடைய முடியும். அதற்குக் கண்டிப்பாக நேரமும் கிடைக்கும். இவையெல்லாமே நாம் நேரத்தை வகுத்துக் கொள்ளும் முறையில்தான் அடங்கியிருக்கின்றன."

"இந்தக் கம்ப்யூட்டர் காலத்திலும் சகுனம் பார்ப்பவர்கள் இருக்கிறார்கள். வெளியே கிளம்பும்போது பூனை குறுக்கே வந்தால், கணவனை இழந்த பெண் எதிரே வந்தால் சகுனத் தடையாக நினைக்கிறார்கள்!"

"இந்த சகுனம் பார்ப்பதெல்லாம் மூட நம்பிக்கை என்பதில் சந்தேகமில்லை. ஒரு சம்பவம் ஞாபகம் வருகிறது. இது போன்று சகுனங்களில் நம்பிக்கையுள்ள ஒருவர் ஒரு திருமணத்திற்குக் கிளம்பினார். எதிரே சகுனத் தடையாக ஒரு பூனை போயிற்று. திரும்ப வீட்டிற்குள் வந்து விட்டார். இது போல் ஒவ்வொரு முறை கிளம்ப யத்தனித்த போதும் ஏதோ ஒன்று குறுக்கே வர, கடைசியில் அவர் மாலையில்தான் திருமணத்திற்குச் செல்ல முடிந்தது. அங்கே மண்டபத்தில் சாப்பாடு எல்லாம் முடிந்து போய், கிளம்புவதற்குத் தயாராய் இருக்கிறார்கள். சமையல் அறையில் ஒன்றும் இல்லை. 'மாமாவுக்கு வெள்ளரிக் காயில் உப்புப் போட்டுக் கொடுங்கப்பா' என்றார்களாம். சகுனம் பார்த்ததால் வந்த வினை! காரிய சித்தி என்பது சகுனம் பார்ப்பதில் இல்லை."

"சகிப்புத்தன்மைக்குப் பெயர் பெற்ற மதம் இந்துமதம். ஆனால் இப்போது நாட்டில் நடக்கும் சம்பவங்களைப் பார்க்கும்போது குறிப்பாக சிறுபான்மை மக்கள் தாக்கப்படுவதும் - அவமானப்படுத்தப்படுவதும் - இந்து மதத்திற்குச் சிறுமை சேர்க்கும் செயல்களாகத்தானே இருக்கின்றன. 'இந்து மதப் பெரியவர்கள் யாரும்

இவற்றைக் கண்டித்ததாகத் தெரியவில்லையே?"

"இதுபோன்ற செயல்களைப் பற்றிக் கேள்விப்படும்போது மனத்துக்கு மிக மிகச் சங்கடமாகவே இருக்கிறது. இந்தச் செயல்கள் முட்டாள்தனமானவை. இந்து தர்மத்திற்கு விரோதமானவை. இதுபோன்ற செயல்களில் ஈடுபடுபவன் இந்துவே அல்ல. மற்றவர்களைத் தாக்குவதும், அவமானப்படுத்துவதும் இந்து தர்மத்தை அனுஷ்டிப்பவன் செய்யும் காரியம் அல்ல. உங்கள் பத்திரிகை மூலமே இதுபோன்ற சம்பவங்களைக் கண்டிக்கிறேன். ஆனாலும் மற்றொரு விஷயம்; இதுபோன்ற சம்பவங்களில் ஈடுபட்டவர்கள் இந்துக்கள்தான் என்பது நிரூபணமாகி விட்டதா? ஆள்கின்றவர்களை பிரச்னைகளில் சிக்கவைப்பதற்காக யாரேனும் இப்படிச் செய்து விடுகிறார்களா?"

"இந்து மதத்தில் இன்னமும் சில பிரிவினரைத் தீண்டத்தகாதவராகச் சிலர் பார்ப்பதால்தான், மற்ற மதத்தைச் சேர்ந்தவர்கள் மத மாற்றத்தில் ஈடுபடுவது சுலபமாக இருக்கிறது. எனவே இந்து மதத்தை விட்டு, யாரும் போகாமலிருக்கும் சூழ்நிலையை உருவாக்குவதில் தங்களைப் போன்ற மடாதிபதிகளுக்குப் பொறுப்பு இருக்கிறதே!"

"நாங்களெல்லாம் முன்பு போல் மடங்களில், உயர்ந்த பீடங்களில் மட்டும் உட்கார்ந்து கொண்டிருக்கவில்லை. நாடெங்கும் திக்விஜயம் செய்து எல்லோரையும் சந்திக்கிறோம். யாரையும் பார்த்து எந்த ஜாதி என்று கேட்பதில்லை. எல்லோருக்கும் தீர்த்தம் கொடுக்கிறோம். சமீபத்தில் உத்தரப்பிரதேசம் சென்றோம். நீங்கள் குறிப்பிடும் தாழ்த்தப்பட்டோர்தான் எங்களுக்கு வரவேற்புக் கொடுத்து ஏற்பாடுகள் செய்தார்கள். இந்துமதத்தில் உள்ள அனைத்துப் பிரிவினரையும் ஒன்றுபடுத்த நாங்கள் முயல்கிறோம். ஆனால் அரசியல்வாதிகள்தான் வோட்டுக்காக அவர்களைப் பிரிக்கிறார்கள். பிற்படுத்தப்பட்டவர்களும், தாழ்த்தப்பட்டவர்களும், முன்னேறக் கூடாது என்பதில் அரசியல்வாதிகள்தான் குறியாக இருக்கிறார்கள். ஏனென்றால் அவர்கள், படித்து, விவரம் தெரிந்து முன்னுக்கு வந்தால் அரசியல்வாதிகள் பாடு ஆபத்தாகி விடுமே!"

# ...இல்லை!

"வெறும் ஆன்மீக சேவை மட்டுமின்றி, 'மக்கள் சேவையே மகேசன் சேவை' என்கிற ரீதியிலும் தங்கள் மடம் பணியாற்றுகிறதா?"

"மடத்தின் பக்தர்கள் பல தர்ம காரியங்களில் ஈடுபட்டு வருகிறார்கள். மடத்தில் அன்னதானமும் உண்டு. மனித சேவையே... மாதா சேவை; ஜனசேவை ஜனார்த்தன சேவை! இந்த மடம் ரொம்பவும் ப்ராச்சீனமான மடம். இடையில் கொஞ்சம் க்ஷீணமாகப் போய் விட்டது. ஸ்ரீமடத்தின் பாரம்பரியத்தைக் காப்பாற்றும் பெரிய பொறுப்பு நமக்கு இருக்கிறது. எதிர்காலத்தில் ஆயுர்வேத சிகிச்சைக்கான கேந்திரம் அமைக்கும் இட்டம் இருக்கிறது."

சந்திப்பு : **ப்ரியன்**
படம் : **வெங்கடேஷ்**



• சா. கந்தசாமிக்கு பாராட்டு

# இலக்கியவாதிகள் பார்த்த படங்கள்!

**வாசகர் திருவிழா என்றால் புத்தகங்கள் நிறைந்திருக்கும். புகழ் மிக்க இலக்கியவாதிகள் அப் புத்தகங்களின் அருமை பெருமைகள் பற்றி உணர்ச்சி மேலிடப் பேசுவார்கள். ஆனால் இதற்கு விதிவிலக்காக இந்த வருட வாசகர் திருவிழாவை நடத்திய 'கோவை விஜயா பதிப்பகம்' டாகுமெண்ட்ரி படங்களைத் திரையிட்டுக் கதையையே மாற்றியிருந்தது!**

● எழுத்தாளர் சா. கந்தசாமி இயக்கித் தயாரித்த 'ஜெயகாந்தன், பிரபஞ்சன், அசோக மித்ரன்' படங்கள் கடந்த வாரம் கோவை வர்த்தக சபைக் கட்டடத்தில் 'வீடியோ ஸ்கோப்' மூலம் திரையிடப்பட்டபோது அரங்கு கொள்ளாக் கூட்டம். நாஞ்சில் நாடன், ஞானி, சி.ஆர். ரவீந்திரன், ஜீவா, சூத்ர தாரி, சுப்ரபாரதி மணியன் என உள்ளூர் இலக்கிய முகங்கள் மட்டுமல்லாது கவிஞர் புவியரசு, நெல்லைக் கண்ணன், அறிவுமதி என்று வெளியூர் பிரபலங்களும் 'சர்ப்ரைஸ் விசிட்' செய்து அசத்தியிருந்தனர். சரியாக ஒன்னரை மணி நேர டாகுமெண்ட்ரி பிலிம் ஓட்டம். இடைவேளை கிடையாது. இருக்கையில் ஆணியடித்தது போல் உட்கார்ந்திருந்தனர் பார்வையாளர்கள்.

● படத்தில் – பாரதி சொன்னது போல் 'ரௌத்திரம் பழகும்' சுபாவமுள்ள ஜெயகாந்தன் படுபவ்யமாய்ப் பேசியது பலருக்கும் ஆச்சர்யம். அதிலும் குறிப்பாக 'இங்கே விளையாடினோம்' 'அந்த மரக்கிளையில் எதிரெதிரே அமர்ந்து படித்தோம்' 'படித்துறையில் குளித்தோம்' என ஜெயகாந்தனை முன்னிறுத்தி தமது பால்ய நினைவுகளை திராவிடர் கழக கி. வீரமணி சொன்னபோது ஜெயகாந்தன் தலையை ஆட்டிக் கொண்டே வெகு நேரம் கேமாராவுக்குள் இருந்ததைப் பற்றி பல பேரிடம் பலவிதமான சிலாகிப்பு. பிரபஞ்சனைப் பொறுத்தவரை 'அதிக மேக்கப். ஒரு இஞ்ச் இருக்குமா?' 'ம்கூம். கூடவே இருக்கும்!' 'அசோகமித்திரனை இன்னும் கூடுதலாய் 'எக்ஸ்போஸ்' பண்ணியிருக்கலாம் என்றெல்லாம் படம் முடிந்ததும் சிலர் பேசிக் கொண்டார்கள்.

● "எப்படி மனதில் தோன்றுவதைக் கதையாக எழுதினேனோ – எழுதுவேனோ அதே போலத்தான் இந்த டாகுமெண்ட்ரியையும் எடுத்தேன். சினிமா தோன்றி நூறு ஆண்டுகள் முடிந்து விட்டன. முதலில் தோன்றியது டாகுமெண்ட்ரிதான். சினிமா பொழுது போக்கானது என நினைப்பதே என்னைப் பொறுத்தவரை தவறு. அரசு 'சுடு மண் சிற்பங்கள்' குறித்து டாகுமெண்ட்ரி செய்யச் சொல்லி எடுத்தபோதே தொலைக் காட்சியில் ஆறு படங்கள் செய்தேன். நான் ஓர் எழுத்தாளன். நான் சார்ந்த துறையை யாரும் கையிலெடுக்காத சூழலில் எனக் கெட்டின வரை படம் எடுக்கத் துணிந்தேன். அதில் எனக்குப் பிடித்த எழுத்தாளர்களை மட்டுமே எடுத்துக்கொண்டேன். யாருடைய ஒத்தாசையும் இல்லாமல் – யாரிடமும் எதுவும் எதிர்பாராமல் எங்கள் குடும்பமே இந்தப் படங்களை எடுத்தது. எனக்கு 'இந்தப் படத்தை இலட்சம் பேர் பார்க்க வேண்டும்' என்று ஆசையில்லை. ஒரே ஒருவர் விரும்பிப் பார்த்தாலே நிறைவு. ஆனால் நீங்கள் இவ்வளவு பேர் வந்து பார்த்து எனக்கு சந்தோஷமளித்ததற்கு நான் பெருத்த நன்றி சொல்ல வேண்டும்." என்று புளகாங்கிதப்பட்டுப் பேசினார் சா. கந்தசாமி. கடைசியாக "கல்கியைப் பற்றி – கல்கி நூற்றாண்டு விழா கொண்டாடி முடிந்த இத் தருணத்தில் – அவர் பற்றிய டாகுமெண்ட்ரியையும் விரைவில் வெளியிடப் போகிறேன். பாதி வேலை முடிந்து விட்டது!" என்றார்.

தொகுப்பு, படம்: **கேயெஸ்வி**

# தங்கத்துக்கு வந்த புது வாழ்வு!

கடந்த வாரம் நகைக் கடைகளுக்குப் போன வாடிக்கையாளர்கள், கடைக்காரர்களிடம் தவறாமல் கேட்ட கேள்விகள் இரண்டு. அவை : 1. ஏன் இப்படி திடீரென்று தங்கம் விலை உயர்ந்து விட்டது? 2. இன்னும் எத்தனை நாளுக்கு இப்படி விலை ஏறிக் கொண்டேயிருக்கும்? இந்த இரண்டு கேள்விகளுக்குமே மிகச் சரியான விளக்கத்தை நகைக் கடைக்காரர்களால் சொல்ல முடியவில்லை. காரணம், இந்தக் கிடுகிடு விலை ஏற்றம், சற்றும் எதிர்பாராத ஒன்று. ஏதோ, தமிழ்நாட்டுக்கு மட்டுமானதோ அல்லது இந்தியாவிற்கு மட்டுமோ உரியதில்லை இந்த விலை உயர்வு. உலகம் தழுவிய ஒரு விலை ஏற்றம் இது. இதுபோல அகில உலக மார்க்கெட்டில், தங்கத்தின் விலையில் ஏற்றமோ அல்லது சரிவோ சமீப காலத்தில் நிகழவே இல்லை.

இந்தத் திடீர் விலை ஏற்றத்தின் காரணமாக நகைக் கடைகளில் வியாபாரம் ரொம்பவும் பாதிக்கப்பட்டிருப்பதைக் கண்கூடாகக் காண முடிந்தது. நம் ஊரில் கல்யாண சீசன். வட இந்தியாவிலோ தீபாவளி சீசன். வழக்கத்தைப் போல மூன்று, நான்கு மடங்கு வியாபாரம் நடக்க வேண்டிய சீசன் இது. ஆனால் வழக்கமான வியாபாரத்தில் பாதி கூட இப்போது இல்லை என்பதை நகைக்கடைக்காரர்கள் பகிரங்கமாக ஒப்புக் கொள்கிறார்கள்.

திடீரென்று தங்கத்துக்கு மவுசு வர என்ன காரணம்? இங்கிலாந்து அரசு கஜானாவிலிருந்து ஆண்டுக்கு இரண்டாயிரம் டன் வீதம் ஏலத்தில் தங்கம் விற்பனை செய்யப்படுவது வழக்கம். இதனால் தங்கத்தின் விலை கட்டுப்பாட்டில் இருந்து வந்தது. ஆனால் ஐரோப்பிய வங்கிகள், ஆண்டுக்கு ஒரு தடவை மட்டுமே, தங்கம் விற்பனை செய்யப்பட வேண்டும் என்றும், அதுவும் நானூறு டன்னுக்கு மேல் விற்பனை செய்யக்கூடாது என்றும் கட்டுப்பாட்டை விதித்து விட்டன. இதன் காரணமாக, உலக தங்க மார்க்கெட்டிலேயே, தங்க வரத்து, கணிசமாகக் குறைந்து விட்டது. சப்ளை குறைந்து விட்டதன் காரணமாக, டிமாண்டு அதிகரித்து விட்டது. இதனால் தங்கத்தின் விலையும் அதிகரித்து விட்டது'' என்று விளக்கம் தருகிறார் சென்னை தங்கம் மற்றும் வைர வியாபாரிகள் சங்கத்தின் துணைத் தலைவரான பாண்டுரங்கம்.

''அண்மைக் காலமாக, நம் நாட்டில் உள்ள தேசியமயமாக்கப்பட்ட வங்கிகள் சில, தங்கக் கட்டிகளை, தங்களுடைய பிரத்யேக கவுண்டர்கள் மூலமாகவே விற்பனை செய்யத் தொடங்கியிருக்கின்றன. ஆக, இந்தியாவைப் பொறுத்தவரை, தங்கத்தின் வரத்து அதிகரித்துத்தானே இருக்கிறது. அப்புறம் எப்படி சப்ளை குறைச்சல் என்று சொல்ல முடியும்?'' என்று லலிதா ஜுவல்லரியின் சேர்மன் சுந்தசாமியைக் கேட்டபோது, ''இதற்கு முன், மும்பையிலுள்ள மொத்த வியாபாரிகளிடமிருந்து தங்கத்தை வாங்கிப் பயன்படுத்திக் கொண்டிருந்தோம். இப்போது, இங்கேயே வங்கிகளில் வாங்கிக் கொள்கிறோம். ஆக, தங்க சப்ளைதான் பரவலாக்கப்பட்டு இருக்கிறதேயொழிய, மார்க்கெட்டில் தங்கத்தின் வரத்து கூடுதலாக இல்லை'' என்று கூறிவிட்டுத் தொடர்ந்தார்...

''அண்மையில், பாங்க் ஆஃப் இங்கிலாந்து தன் வசமிருந்த தங்கக் கையிருப்பிலிருந்து, இருபத்தைந்து டன் தங்கத்தை விற்பனை செய்யப் போவதாக அறிவித்தது. அதன் பேரில், ஐரோப்பிய நாடுகளில் உள்ள சில பெரிய வங்கிகள், அந்த தங்கத்தை வாங்கிக் கொள்ள விருப்பம் தெரிவித்து, தாங்கள் வாங்குவதற்குத் தயாராக இருக்கும் விலையையும் குறிப்பிட்டன. இந்த விலை, பாங்க் ஆஃப் இங்கிலாந்து எதிர்பார்த்த விலைக்குக் கூடுதலாக இருந்தது. இதைக் கண்டவுடன், தங்கத்துக்கு மவுசு கூடியுள்ள இந்தச் சூழ்நிலையில், அவசரப்பட்டு தன் வசமுள்ள தங்கத்தை விற்று விட வேண்டாம் என்று அது முடிவு செய்து, தங்கம் விற்கிற எண்ணத்தைத் தாற்காலிகமாக நிறுத்தி வைத்து விட்டது.



அதிகரிக்கும் சீசன் என்பதால், விலை உயர்வு பெரும் பரபரப்பூட்டியுள்ளது."

"இந்த விலை உயர்வு இன்னும் எத்தனை நாளுக்கு இருக்கும்?"

"விலை உயர்வு எத்தனை நாட்களுக்குத் தொடரும்? எப்போது ஸ்திரப்படும்? அதன்பின் மறுபடி குறைவதற்கு வாய்ப்பு உண்டா? போன்ற கேள்விகளுக்கெல்லாம் இப்போது பதில் சொல்ல இயலாது. காரணம், அகில உலக மார்க்கெட் நிலவரம்தான் இதையெல்லாம் நிர்ணயம் செய்கிறது. எந்தப் பொருளானாலும் தாறுமாறாக விலை உயர்ந்து கொண்டே போக இன்றைய உலகச் சந்தையில் வாய்ப்பு இல்லை. எனவே, இன்னும் சில தினங்களில், விலை ஸ்திரப்பட்டு விடும். இன்றைக்கு (செப்.30) விலைச் சரிவு தொடங்கி விட்டதே!"

"இந்தத் திடீர் விலை உயர்வு பற்றி உங்கள் கருத்து என்ன?" என்று நகை வாங்க வந்திருந்த ஜெயலட்சுமியிடம் கேட்டபோது, "எங்கள் வீட்டுக் கல்யாணத்துக்காக நகை வாங்குகிறேன். பத்து நாள் முன்னதாக வாங்கியிருந்தால், சீப்பாக முடிந்திருக்கும். எங்கள் துரதிருஷ்டம்! தவற விட்டு விட்டோம். அதற்காக வாங்காமல் இருக்க முடியுமா? அதிக விலை கொடுத்து வாங்க வேண்டியதுதான்" என்று அவர் சொல்கிறபோது, குரலில் லேசான சோகம்.

நகை வாங்க வந்திருந்த ஜெயந்தியின் கருத்து, ஒரு மாறுபட்ட கோணத்தைக் காட்டியது. "விலை ஏறிக் கொண்டே போகிறது. இன்னும் இரண்டு நாள் தள்ளிப் போட்டால், இன்னும் ஏறி விடுமோ என்று நினைத்துத்தான் நான் நகை வாங்குவதை ஒத்திப் போடாமல், இப்போதே வாங்கி விட்டேன்" என்கிறார் இவர்!

"இப்போது வியாபாரம் டல் என்பது உண்மைதான். ஆனால், தங்கம் என்பது, நம் ஜனங்களுடன் பின்னிப் பிணைந்து விட்ட ஒரு சமாசாரம். எனவே, விலை உயர்வு இருந்தாலும் கூட, விலை ஸ்திரப்பட்டவுடன், மறுபடி வியாபாரம் சூடு பிடித்து விடும்" என்று நம்பிக்கையுடன் சொல்கிறார் கந்தசாமி!

"இதன் காரணமாக, பாங்க் ஆஃப் இங்கிலாந்துக்கும், அதனிடமிருந்து தங்கம் வாங்க விரும்பிய வங்கிகளுக்கும் இடையே சிறு பிரச்னை உருவாகியுள்ளது. அதனால், அகில உலக அளவில், தங்க மார்க்கெட்டில், தங்கத்தின் சப்ளை பாதிக்கப்பட்டிருக்கிறது. அது இந்தியாவிலும் எதிரொலிக்கிறது. இந்தியாவில், இது தங்க விற்பனை

— எம். பாரதி

# நாமக்கல் கவிஞரின்
# திருக்குறள் புது உரை
## முதலான ஐந்து நூல்கள்

வீட்டிற்கொரு நூல் நிலையம் தான் அமைக்க முடியாது! இந்த ஐந்து நூல்களையாவது வாங்க முடியாதா ? இவை வாழ்க்கைக்கு வழிகாட்டி அல்லவா?

**வர்த்தமானன்பதிப்பகம்**
வழங்கும்
**முன்வெளியீட்டுத் திட்டம்**

**விலை ரூ.300.00. சலுகை விலை ரூ.190 மட்டுமே.**

வானமும் வையமும் வளர்ந்த வான்புகழ் வள்ளுவரின் திருக்குறள் தோன்றி இரண்டாயிரம் ஆண்டுகள் முடியப் போகின்றன.

**இதுவரை திருக்குறளை யாராவது சரியாகப் புரிய வைத்தார்களா?**

600 ஆண்டுகளுக்கு முன் பத்துப் பேர் உரை வகுத்தனர். அந்தப் பதின்மரில் பரிமேலழகர் உரை சிறந்தது எனப் போற்றப்படுகிறது. இந்த நூற்றாண்டில் திருக்குறள் உரைகள் பல எழுந்தன. அவற்றுள் செல்வாக்கு மிக்கது மு.வ. அவர்களின் திருக்குறள் தெளிவுரை. மேலும் ஆராய்ச்சிக் கட்டுரைகள், விளக்கங்கள் எனப் பலப்பல எழுந்தன ! 'நானும் உரை எழுதினேன்' ! எனப் பலர் உரை வரைந்தனர். இவற்றுள் ஒன்றேனும் திருவள்ளுவரின் உள்ளத்தை - உயரிய சிந்தனையை உணர்த்துகின்றதா?

இந் நிலையில் நாமக்கல் கவிஞரின் திருக்குறள்-புதுஉரை முதலான ஐந்து நூல்களும் தோன்றின. 'விழு மணி மாசு மூழ்கிக் கிடந்தது' போல் இந்த உரை விளக்க நூல்கள் கவனிப்பார் அற்றுக் கிடந்தன. இவை ஞாயிறு போல் ஒளிவிட்டு மக்கள் மன இருள் போக்கத் தற்போது மீண்டும் வெளி வருகின்றன!

நாமக்கல் கவிஞரை ஒரு காந்தியக் கவிஞர் என்றுதான் தமிழகம் அறியுமே தவிர அவர், அடியார்க்கு நல்லார், நச்சினார்க்கினியர் போன்ற உரையாசிரியர் என அறியவில்லை.

என்ன அற்புதமான உரை விளக்கம்! பரிமேலழகரைச் சாடு சாடெனச் சாடும் உரைத் திறம்! பரிமேலழகருக்குப் பரிந்து வந்து கண்டனம் புரிந்த ஈழத்துப் புலவர்களைச் சண்ட மாருதம் எனத் தாக்கித் தகர்த்தெறியும் வாதத் திறம்!

'குடி செயல் வகை'க்குத் தரும் புது விளக்கம்! போர் வீரனுக்காவது காலம் என்று ஒன்று உண்டு; குடும்பத் தலைவனுக்கு ஏது பருவம்! அவன் எல்லாக் காலத்திலும் உழைத்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான்! 'குடிசெய்வார்க்கு இல்லை பருவம்!' - இதன் உரை விளக்கம் ஒவ்வொருவரும் நினைவில் கொள்ள வேண்டியது அல்லவா? இதனை முன் குறளோடு தொடர்பு படுத்தும் அழகே அழகு! இது போல் 1330 அருங் குறள்களையும் முன்னும் பின்னும் தொடர்புபடுத்துகிறார். நாமக்கல்லார். இந்த முறையை இதுவரை யாரும் பின்பற்றவில்லை

"பரிமேலழகர் உரையுடன் முற்றிலும் மாறுபட்டுத் 'தவம்' என்னும் அதிகாரத்துக்குத் தரும் பொருத்தமான உரை விளக்கம்! காமத்துப் பாலுக்கு முக்கியத்துவம் தரும் இன்பத்துள் இன்பம்! 'இரத்தலும் ஈதலே போலும்!' என்பதற்குத் தரும் வியத்தகு விளக்கம்!

இப்படி ஒன்றா இரண்டா? 2 முதல் 5 வரை உள்ள நான்கு நூல்களும் முதல் நூலின் சிறப்புக்களைக் 'குறிப்பிடுவனவே! பரிமேலழகர் உரை எவ்வளவு தவறாக இருக்கிறது எனத் தகுந்த ஆதாரத்தோடு இந்நான்கு நூல்களும் வரையப்பட்டுள்ளன.

| | |
|---|---|
| 1. திருக்குறள் -புது உரை | ரூ.220.00 |
| 2. திருவள்ளுவர் திடுக்கிடுவார் | ரூ. 20.00 |
| 3. வள்ளுவரின் உள்ளம் | ரூ. 20.00 |
| 4. திருவள்ளுவர் இன்பம் | ரூ. 20.00 |
| 5. திருக்குறளும் பரிமேலழகரும் | ரூ. 20.00 |
| | ரூ.300.00 |
| முன்வெளியீட்டுச் சலுகை ரூ. 60 + வர்த்தமானன் அறக்கட்டளையின் உதவி ரூ. 50 | ரூ.110.00 |
| | **ரூ.190.00** |

ஆயிரத்து இருநூறு பக்கம் அகன்றிருக்கும் **திருக்குறள்-புது உரை** நூல் பதவுரை, பொழிப்புரை, விளக்கம் என்னும் முறையில் பாமரரும் படித்துணரும் வண்ணம் அமைந்துள்ளது :

## இதன் பெருமை குறித்துச் சான்றோர் கருத்துக்கள்

**ராஜாஜி :** ''மிகவும் நுட்பமான கருத்துக்களை வெகு ஜாக்கிரதையாகச் சொல்லியிருக்கிறீர்கள். இந்த விஷயத்தில் என்னை விட அறிவுடைய நீங்கள் எழுதிய நூலுக்கு முன்னுரை எழுத நான் யார்? மேலும் தங்களுடைய நூலுக்கு இன்னொருவருடைய முன்னுரை எதற்கு? உங்கள் நூல் யாருடைய சிபார்சும் இல்லாமல் புகழுடன் நிலவத் தக்கது''.

**தமிழ் முனிவர் திரு.வி.க. :** ''கெழுதகை நண்பர் நாமக்கல் கவிஞர் இராமலிங்கனார் திருக்குறளுக்கு உரை கண்டனர் என்று கேட்டு மகிழ்வெய்துகிறேன். உரை என் முன்னிலையில் படிக்கப்பட்டது. (திரு.வி.க. கண் பார்வை இழந்தபோது) கவிஞரை ஈன்ற மணி வயிற்றின் தவமே தவம்''.

'கலைக்களஞ்சியம்' ஆசிரியர் **ம.ப. பெரியசாமிதூரன் :** ''இதுவரை யாரும் கூறாத பல அரிய விளக்கங்கள் அவர் உரையிலே காணப்படுகின்றன''.

''சொல்லின் செல்வர்' **ரா.பி. சேதுப்பிள்ளை** ''முந்தையோர் உரைகளையெல்லாம் ஆராய்ந்து தம் புது உரையை மிக்க திறம்பட உரைக்கின்றார். எல்லாரும் அறிதற்குரிய எளிய நடையில் எடுத்துரைக்கும் கவிஞருடைய புதிய உரைக்குத் தமிழகத்தார் நன்றி என்றும் உரியதாகும்''

**பேராசிரியர் அ.சீனிவாசராகவன் :** ''கவிஞர் உள்ளத்தைக் கவிஞரே உணரக்கூடும் என்பது எவ்வளவு உண்மையானது என்பதை இவ்வுரையால் நான் நன்றாக அறிந்தேன். வள்ளுவர் பெருமையில் இதுவரை நமக்குத் தோன்றாத பல புதிய அம்சங்கள் கவிஞர் உரையால் புலனாகின்றன''

**இந் நூல்களைப் பெற :**

**தபாலில் :** ரூ.190. மட்டும் **M.O/D.D** மூலம் VARTHAMANAN PATHIPPAGAM என்ற பெயரில் 31.10.99 க்குள் அனுப்புக. நூல்கள் 1.12.99 முதல் பணம் வந்த வரிசைப்படி VPP யில் அனுப்பி வைக்கப்படும்.தபால்காரரிடம் தபால் மற்றும் கட்டுச் செலவிற்காக ரூ.35 மட்டும் செலுத்தி நூல்களைப் பெறலாம்.

**நேரில் :** ரூ.190 மட்டும் ரொக்கமாக எமது அலுவலகத்தில் (31.10.99 க்குள்) செலுத்தி உரிய ரசீது பெறலாம். ரசீதினில் குறிப்பிடும் நாளில் நேரில் வந்து நூல்களைப் பெறலாம். (நேரம் காலை 9.30 முதல் மாலை 6.30 வரை. உணவு இடைவேளையின்றி. ஞாயிறு வார விடுமுறை.)

முக்கிய குறிப்புகள் : 1.MO/DD அனுப்புவோருக்கு நூல்கள் தபால் மூலம் தான் அனுப்பப்படும். நேரில் தரப்படமாட்டாது. 2. காசோலை ஏற்கப்படமாட்டாது. (உள்ளூர் காசோலை உள்பட)

பணம் அனுப்ப வேண்டிய முகவரி :

**வர்த்தமானன் பதிப்பகம்,** ஏ.ஆர்.ஆர். வளாகம்,

1 41, உஸ்மான் ரோடு, தியாகராயநகர், சென்னை -17. பனகல் பூங்கா அருகில்.

● ஜெயலலிதா, நவீன வசதிகளைக் கொண்ட தமது தேர்தல் பிரசார வேனை வேறொருவரின் உபயோகத்துக்கும் கொடுத்திருந்தார். அந்த வேறொருவர் யார் தெரியுமா? மார்க்சியப் பாதுகாவலர் ஹர்கிஷண் சிங் சுர்ஜீத்தான்! தேர்தல் முடிவுகளுக்குப் பிறகு மூன்றாவது அணி, முப்பதாவது அணி என்று ஏதாவது ஏற்படுமானால் அதில் தாம் உதவிப் பிரதமராக வேண்டும் என்கிற ஆசையால்தான் ஜெ இப்படி 'வேன் உதவி' ஐடியா செய்தாராம்!

● வெளியுறவுத் துறையிலும் பிரதமர் அலுவலகத்திலும் ஒரே பரபரப்பு. காரணம், நவாஸ் ஷெரீப்பின் 'கிச்சன் கேபினட்' உறுப்பினர்களில் ஒருவரான - பாகிஸ்தான் வெளியுறவுத் துறைச் செயலாளர் நியாஸ் நாயக் வெளியிட்ட அறிக்கைதான். டெல்லிக்கு வந்து திரும்பியதும் காஷ்மீரில் தங்களுடைய ஊடுருவல் ராஜ தந்திரம் வெற்றி பெறுகிற நிலையில்தான் கார்கில் வெடித்தது என்று அறிக்கை விட்டார் நாயக். கொதித்தெழுந்தனர் நமது ராஜதந்திரிகள். வாஜ்பாயுடன் அவர் பேசிய போது, காஷ்மீர் குறித்து எதுவுமே பேசவில்லை; வாஜ்பாயின் செயலாளர் ப்ரஜேஷ் மிஷ்ராவுடன்தான் பேசினார் என்றனர். வாஜ்பாயைச் சந்தித்த மிஷ்ரா, "தேர்தல் வெற்றிக்கு எங்கள் வாழ்த்துக்கள்!" என்றாராம் சுத்தமான உருதுவில். வாஜ்பாய் பதிலுக்கு, "எங்கள் தேர்தல்கள் எங்கள் தலைவலி. நீர் முதலில் கார்கிலை விட்டு வெளியேற நடவடிக்கை எடும்!" என்று அதே சுத்தமான உருதுவில் கூறினாராம். இது ஒரு புறமிருக்க, ஷெரீப்புக்கு எதிராக எதிர்பார்க்கப்படும் ராணுவப் புரட்சியை முறியடிக்க, வாஜ்பாயின் ஆதரவை எதிர்பார்க்கிறார்களாம் இஸ்லாமாபாத் ராஜ தந்திரிகள். இந்தியா உதவாவிட்டால், அக்டோபர் 15-ம் தேதியன்று இஸ்லாமாபாத்தில் ராணுவப் புரட்சி நடக்கும் என்றும் பேசப்படுகிறது.

ராஜ்தர்பார்

● 'சமூக சேவகிகள்' என்கிற பெயரில் டெல்லியில் சில நாரீமணிகள் இருக்கிறார்கள். தங்கள் வீடுகளில் சில வி.ஐ.பி.களுக்கு சோம பான சுரபான பார்ட்டிகள் கொடுப்பதன் மூலம், தங்கள் இல்லங்கள்தான் பல முடிவுகள் எடுக்கப்படுகிற முக்கியமான இடங்கள் என்கிற ஒரு சமூக மாயையை ஏற்படுத்தி, அதன் மூலம் பிரபலமாகும் பெண்மணிகள் இவர்கள். திருமதி சாவ்லா என்பவர் இவர்களுள் ஒருவர். சோனியாகாந்தியின் பேட்டியை பி.பி.சி.க்கு ஏற்பாடு செய்ய முடியும் என்று சவடால் விட்டார். தகவல் கிடைத்ததும் திருபர் டேவிட் லோமாக்ஸ் லண்டனிலிருந்து தமது பரிவாரங்களுடன் பறந்து வந்தார். காங்கிரஸ் அலுவலகம் சென்றார். "யார் இந்த சாவ்லா? பத்திரிகையாளர் பிரபு சாவ்லாவின் மனைவியா?" என்று குழம்பிப் போய் விட்டனர் சோனியா கட்சியினர். "இல்லை, டூபிகா சாவ்லா!" என்றார் திருபர். "அப்படி ஒருவரையும் எங்களுக்குத் தெரியாதே!" என்று கையை விரித்து விட்டனர் கட்சிக்காரர்கள். பாவம் ஏமாற்றத்தோடு விமானமேறியது பி.பி.சி. குழு.



• சுஷ்மா ஸ்வராஜ்தான்

● பி.ஜே.பியில் தேர்தல் பிரசார ஸ்டா

என்று இப்போது புலனாயப் படுகிறது.

● பி.ஜே.பி.யின் பல தலைவர்களில் நரேந்திர மோதியும் ஒருவர். எளிமையான ஆர்.எஸ்.எஸ்.காரர் என்று வர்ணிக்கப்படுபவர். கட்சிக்காரர்களுக்குப் பிடித்த அபிமான தொலைக்காட்சி முகம் இவருடையது. கட்சிக்காரர்களுக்கு, தினசரி இவரது முகத்தை டீவியில் பார்க்க ஆசை. பஞ்சாப், ஹரியானா, ஹிமாசல பிரதேசம் ஆகிய மாநிலங்களின் கட்சிப் பணிகளைக் கவனிக்கும் பொறுப்பு இவருடை



# உதவியும் அதன் பின்னணியும்!

யது என்பதால், பஞ்சாப், ஹரியானா மாநிலங்களின் தலைநகரான சண்டிகருக்கும் ஹிமாசல பிரதேசத்தின் தலைநகரான சிம்லாவுக்கும் அடிக்கடி இவர் பயணிக்க வேண்டிய நிலை. அதனால் தினசரி டீவியில் வர முடியாத சூழல். இதற்கும் ஒரு வழி கண்டுபிடித்தனர் கட்சிக்காரர்கள். ஆம்; தினசரி சண்டிகருக்கும், சிம்லாவுக்கும் விமானத்தில் பறந்து சென்று கட்சிப் பணிகளைக் கவனித்து விட்டு, மாலையில் தில்லி திரும்பி டீவி கேமரா முன் ஆஜராகி விடுகிறார் மோதி.

● இந்தத் தேர்தல் களேபரங்களுக்கிடையில் சென்னையிலுள்ள அப்பலோ மருத்துவமனையில் சிகிச்சைக்காகச் சேர்ந்தார் முன்னாள் ஜனாதிபதியான சங்கர் தயாள் சர்மா. இவர் இருதய நோய்க்காரர். மருத்துவமனையில் சிகிச்சை பெறும்போது, தம்மை யாரும் வந்து பார்க்கவில்லையே என்று மிகவும் வருத்தப்பட்டாராம் சர்மாஜி.

ராக இருந்தவர் சுஷ்மா ஸ்வராஜ்தான். அத்வானியை விடவும் இவருக்குத்தான் அதிக டிமாண்ட். பெல்லாரி தேர்தல் முடிந்து வந்ததும் பல மாநில கட்சிக்காரர்களும் இவரிடம் தேதி கேட்டு கியூவில் நிற்க ஆரம்பித்து விட்டார்கள். அதனால், இவருக்காக ஒரு ஸ்பெஷல் விமானத்தையே ஏற்பாடு செய்திருந்தது கட்சி.

● உ.பி.யைப் பொறுத்தவரை நடந்த தேர்தல் என்பது கல்யாண்சிங் Vs வாஜ்பாய் தான். கல்யாண்சிங் தேர்தல் பிரசாரம் செய்தபோது, வாஜ்பாயின் படத்தைக் கூடப் பயன்படுத்தவில்லை. கல்யாண்சிங்கின் பாதுகாவலர் அத்வானி என்று சொல்லப்படுவதால், கல்யாண்சிங்கின் இந்தத் தேர்தல் பிரசார பின்னணியில் அத்வானி இருக்கிறாரா

— இந்த்ரப்ரஸ்தன்



# தேர்தல் ஜனநாயகத்தில்

## ரிசல்ட் : ஃபடா ஃபட்!

**வா**க்கு எண்ணிக்கை நாளன்று, வாக்குப் பெட்டிகளிலிருந்து வாக்குச் சீட்டுகளைக் கொட்டி, குறிப்பிட்ட எண்ணிக்கையில் கட்டுகளாகக் கட்டி, ஒவ்வொரு வேட்பாளரும் பெற்ற வாக்குகளைப் பிரித்து எண்ணி முடித்தபின், யார் வெற்றி பெற்றார் என்பது தெரியவரும். ஆனால் இந்தத் தேர்தலில் சில பாராளுமன்றத் தொகுதிகளில், எலெக்ட்ரானிக் வாக்குப் பதிவு இயந்திரம் பயன்படுத்தப்பட்டுள்ளது. இந்தத் தொகுதிகளில் வாக்கு எண்ணிக்கை எப்படி நடைபெறும்? மின்னணு வாக்குப் பதிவு இயந்திரத்தை உருவாக்குவதில் முக்கிய பங்குவகித்த எழுத்தாளர் சுஜாதா இதற்கு விளக்கம் தருகிறார் :

"மின்னணு வாக்குப் பதிவு இயந்திரங்களில், சீல் வைக்கப்பட்ட ஒரு பகுதி இருக்கும். வாக்கு எண்ணிக்கை மையங்களில், வேட்பாளர்களின் பிரதிநிதிகள் முன்னிலையில் இப் பகுதியின் சீல் பிரிக்கப்படும். இதனுள்ளே 'ரிசல்ட்' என்று ஒரு பட்டன் இருக்கும். அதனை அழுத்தியவுடன், வேட்பாளர் வாரியாக, வோட்டு விவரம் தெரிந்து விடும். தொகுதி முழுக்க பயன்படுத்தப்பட்ட இயந்திரங்கள் காட்டுகிற வேட்பாளர்கள் ஒவ்வொருவரும் பெற்ற வாக்குகளின் எண்ணிக்கையைக் கூட்டினால், ரிசல்ட் தெரிந்து விடும். எலெக்ட்ரானிக் வாக்குப் பதிவு இயந்திரங்கள் பயன்படுத்தப்பட்ட தொகுதிகளில், வாக்கு எண்ணிக்கைப் பணி ஆரம்பித்த அரை மணி நேரத்துக்குள்ளாகவே முடிவு தெரிந்து விடும். ரொம்ப குவிக்; ரொம்ப சிம்பிள்.

''ஒரு தொகுதியில் பயன்படுத்தப்படும் அனைத்து மின்னணு வாக்குப் பதிவு இயந்திரங்களையும் இணைப்பதும் சாத்தியம். அப்படிச் செய்யும்பட்சத்தில் பொத்தானை அழுத்தினால், அடுத்த விநாடி, தொகுதி முழுவதற்குமான ஒட்டு மொத்த முடிவு தெரிந்துவிடும். ஆனால், இந்த டெக்னாலஜி இப்போதைக்குத் தேவையில்லை என்று அரசாங்கம் முடிவு செய்துள்ளது."

புதிர் :
படத்தில் பிரியங்காவுடன் இருப்பவர் யார் தெரியுமா? பிரியங்காவின் மைத்துனி. ஆம்; கணவர் ராபர்ட் வதேராவின் சகோதரி. பெயர் : மிசிலி. அமேதியில் தேர்தல் பிரசாரத்தின் போது எடுத்த படம்.

## கேள்வி நேரம்

கேள்வி : வாக்குப் பதிவு முடிந்து சுமார் ஒரு மாதம் கழித்துத்தான் வாக்கு எண்ணிக்கை. ஒரு வேட்பாளர் என்கிற முறையில், இந்த சஸ்பென்ஸ் பற்றி என்ன

நினைக்கிறீர்கள்?

**முன்னாள் ஐ.ஏ.எஸ். அதிகாரியும், இந்தத் தேர்தலில் அ.தி.மு.க. வேட்பாளருமான மலைச்சாமி :** ஒரே நாளில் அல்லது இரண்டு தினங்களில் நடத்தி முடித்திருக்க வேண்டிய தேர்தல் ஐந்து கட்டங்களாக நடத்தப்படுகிறது. வாக்குப் பதிவு முடிந்து, சுமார் ஒரு மாதம் கழித்துத்தான் ரிசல்ட் தெரியும் என்பது ஒரு கொடுமையான விஷயம். இந்த காலதாமதம் தேவையில்லாதது. நான் தேர்தலில் ஜெயிப்பது உறுதி என்பதால் டென்ஷன் இல்லாமல், ரிசல்ட் இன்று வந்தால் என்ன, நாளை வந்தால் என்ன என்று அமைதியாக இருக்கிறேன். வெற்றி தோல்வியை உறுதியாகச் சொல்ல முடியாத இழுபறி நிலைமை உள்ள தொகுதியில் நிற்கும் வேட்பாளரின் மனநிலை மிகவும் பதைபதைப்புடன் இருக்கும் என்பதில் ஐயமில்லை.

## இருபது கோடி விளம்பர பட்ஜெட் வேஸ்ட்?

**பா**.ஜ.க., காங். இரண்டு கட்சிகளும், இந்தத் தேர்தலில், பத்திரிகை விளம்பரங்களுக்காக மட்டும் தலா பத்துக் கோடி ரூபாய் பட்ஜெட் ஒதுக்கீடு செய்தன. இந்த விளம்பரங்களை உருவாக்கவும், அவற்றை இந்தியிலும், பிற இந்திய மொழிகளிலும் மொழிபெயர்த்து வெளியிடவும் பெரிய விளம்பர நிறுவனங்களின் சேவை பயன்படுத்தப்பட்டது.

ஆனால், இருபது கோடி ரூபாய், விளம்பரங்களுக்காகச் செலவழித்ததில், அவற்றை வெளியிட்ட பத்திரிகைகளுக்குக் கணிசமான வருமானம் கிடைத்தது என்பதுதானே தவிர, அரசியல் கட்சிகளுக்குப் பெரிதாய் பயன் ஒன்றுமில்லை என்று விளம்பரத் துறையில் விவாதிக்கப்படுகிறது. 'இந்த விளம்பர நிறுவனங்களில் அமர்ந்து சிந்திக்கிற மூளைகளுக்கு, சோப்பை எப்படி விற்பது என்கிற யுக்திதான் தெரியுமேயொழிய, இந்திய வாக்காளரை எப்படிக் கவருவது என்கிற டெக்னிக் தெரியாது. தவிர, இந்த விளம்பரங்களை வெளியிடுகிற ஆங்கிலம், இந்தி மற்றும் பிற இந்திய மொழிப் பத்திரிகைகள் சென்றடையாத பகுதிகள் இந்த நாட்டில் ஏராளம்' என்பதாக விமர்சனங்கள் எழுந்துள்ளன.

'கட்சி அபிமானம், ஜாதி அடிப்படையில் வாக்களிக்கிற வாக்காளர்கள் மத்தியில் இந்த விளம்பரங்கள் சற்றும் எடுபடாது என்பது நிஜம். எந்தக் கட்சிக்கு வாக்களிப்பது என்று முடிவெடுத்து விட்ட வாக்காளரை, மனம் மாற்றும் சக்தியோ, வாக்களிப்பு பற்றி முடிவெடுக்காதவரை, முடிவெடுக்கத் தூண்டவோ செய்ய இந்த விளம்பரங்களால் முடியாது' என்று கட்சிகளுக்குள்ளேயே ஒருவித கருத்து நிலவுகிறது.

ஆனாலும், தேர்தலுக்கு அரசியல் கட்சிகள் செலவழிக்கும் பணத்தில் இந்த இருபது கோடி என்பது தூசுதான்!

ஊரான பணம்!

## மந்தம் இப்போதுதான்!

**ச**ராசரியாக ஐம்பது சதவீத வாக்குப் பதிவுதான் இந்தத் தேர்தலில் நடந்துள்ளது என்பது உண்மையில் விசனத்துக்குரிய விஷயமே! இதுவரை நடந்த தேர்தல்களில் வாக்குப் பதிவு சதவிகிதம் இதோ :

| | |
|---|---|
| 1952–ல் | 61.2% |
| 1957–ல் | 62.2% |
| 1962–ல் | 55% |
| 1967–ல் | 61.3% |
| 1971–ல் | 55.3% |
| 1977–ல் | 60.5% |
| 1980–ல் | 56.9% |
| 1984–ல் | 64% |
| 1989–ல் | 62% |
| 1991–ல் | 61% |
| 1996–ல் | 57.9% |
| 1998–ல் | 61.97% |

## 'மை'யின் மகிமை

*விரலில் மை உலர்ந்ததும்*
*மக்கள், அரசியலை மறந்தாச்சு*
*அரசியல்வாதிகளும்*
*மக்களை மறந்தாச்சு!*

– போக்ரோடு புதுக்கவிஞன்.

தொகுப்பு : **மௌலி**



காதில் விழுந்தவை

# சி.எஸ்ஸுக்குத் தடை!

● யாழ்ப்பாணம் பல்கலைக் கழகம், மகாராஷ்டிர முன்னாள் ஆளுநர் சி. சுப்பிரமணியத்திற்கு டாக்டர் பட்டம் அளிக்க முடிவு செய்தது. 'நேரில் வந்து எங்களை கௌரவிக்க வேண்டும்' என்று அந்தப் பல்கலைக் கழகத்தின் துணை வேந்தரும் சி.எஸ்.ஸிடம் கேட்டுக் கொண்டார். சி.எஸ்.ஸூம், கொழும்பு வழியாகச் செல்வதில் பிரச்னை இருந்ததால் இரண்டு, மூன்று கல்வியாளர்கள் மற்றும் பத்திரிகையாளர்களை அழைத்துக்கொண்டு தனி விமானத்தில் நேரடியாகவே யாழ்ப்பாணம் செல்லத் திட்டம் போட்டு, மத்திய அரசிடம் முறைப்படி அனுமதி கேட்டார். ஆனால் 'ஸ்ரீலங்காவில் நிலைமை சரியில்லை, பாதுகாப்பு இருக்காது' என்று மத்திய அரசு அனுமதி மறுத்து விட்டதாம். இப்போது சி.எஸ். நேரடியாகச் செல்லாத நிலையில்தான் டாக்டர் பட்டம் வழங்க பல்கலைக் கழகம் முடிவு செய்திருக்கிறது.

● அண்டை மாநிலங்களில் சிமெண்ட் விலை மூட்டையொன்றுக்கு நூறு ரூபாய் அல்லது நூற்றுப் பத்து ரூபாய் என்று விற்கப்பட, தமிழகத்தில் மட்டும் மூட்டையொன்று நூற்று எண்பது ரூபாய்க்கு விற்கப் படுகிறது. சிமெண்ட் விலை பற்றிய சர்ச்சை, பெரிய விவகாரமாக உருவாகலாம் என்கிறார்கள். தமிழகத்திலுள்ள சிமெண்ட் உற்பத்தியாளர்கள் ஒரு 'குழு' போல் அமைத்துக்கொண்டு, 'விலையைத் தங்கள் விருப்பப்படி ஏற்றி விட்டதாகச் சொல்லுகிறார்கள். 'அண்டை மாநிலத்தில் உற்பத்தியாகி தமிழகம் வரும் சிமெண்டையும் தாங்கள் விற்கும் அதே விலைக்குத் தான், விற்க வேண்டும்' என்று தமிழக சிமெண்ட் உற்பத்தியாளர்கள் கட்டுப்பாடு விதித்திருப்பதாகச் சொல்கிறார்கள். தமிழக சிமெண்ட் உற்பத்தியாளர்களுக்கு தமிழக அரசின் முழு ஆதரவும் இருக்கிறதாம். அது மாறவே மாறாதாம். சிமெண்ட் விலையுயர்வைப் பற்றி முதல்வரைக் கேட்டபோது 'தக்க நடவடிக்கை எடுக்கப்படும்' என்று சொல்லியிருந்தாலும், 'விலை அவ்வளவு சுலபத்தில் இறங்காது' என்று விவரம் அறிந்தவர்கள் சொல்கிறார்கள்.

● தமிழகத்திலுள்ள கத்தோலிக்க பேராயர்கள உட்பட சில முக்கிய கிறித்துவப் பிரமுகர்கள் தமிழக முதல்வரைச் சமீபத்தில் சந்தித்தார்கள். "சிறுபான்மையோரின் அரணாகவும், பாதுகாப்புக் கோட்டையாகவும் கலைஞர் விளங்கி வருவதாக சந்திப்பின் போது அவர்கள் குறிப்பிட்டார்கள். இந்தச் சந்திப்பு ஆளும் கட்சி வட்டாரத்தில் மிகுந்த வியப்பை ஏற்படுத்தி இருக்கிறது. "தேர்தலுக்கு முன்னர் சந்தித்து இது போன்று சொல்லி ஆதரவு தெரிவித்திருந்தாலும் தேசிய ஜனநாயக முன்னணிக்கு உதவியாக இருந்திருக்கும். ஆனால் இப்போது சந்தித்திருப்பதற்குக் காரணம் என்ன என்று சிந்திக்க வேண்டியிருக்கிறது'' என்கிறார் ஓர் ஆளும் கட்சிப் பிரமுகர். மத்தியில் மீண்டும் பா.ஜ.க. மற்றும் அதன் கூட்டணிக் கட்சிகளே ஆட்சியைப் பிடிக்கும் என்று கருத்துக் கணிப்புகள்-பலமாகச் சொல்லி வரும் நிலையில் "ஆளும் கட்சியை விட்டு விலகி நிற்பது கிறித்துவ சமூகத்துக்கு நல்லது அல்ல" என்று சமீபத்தில் தி.மு.க.வில் இணைந்த ஒரு பேச்சாளர் கிறித்துவ பிரமுகர்களிடம் சொல்லி இப்படியொரு சந்திப்புக்கு ஏற்பாடு செய்ததாகவும் சொல்கிறார்கள்.

● பகுத்தறிவு பகலவனின் சொத்து மற்றும் கொள்கைகளுக்கு வாரிசான அவரது அமைப்பு, சில அரசியல்வாதிகளின் பணத்தை வெளிநாடுகளில் முதலீடு செய்ய உதவி வருவதாக மத்திய புலனாய்வு ஏஜென்ஸிகள் கருதுகின்றன. பா.ஜ.க. கூட்டணி மீண்டும் ஆட்சிக்கு வரும்போது விசாரணை தீவிரமாகலாம்.

— சஞ்சயன்

தில்லானா தில்லானா

தகதிமி
தகதிமி ! தை..! தா..!

பேட்டை ராப்..! ராப்...
பேட்டை. ராப்... !

ஆணழகன்
போட்டி
ஜோர் !

சபாஷ்!



1999 அக்டோபர் 10
பிரமாதி புரட்டாசி 23
மலர் : 58
இதழ் : 11

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## அழகிப் போட்டிக்கு அவலட்சண எதிர்ப்பு!

பரோடாவில் நடக்கவிருந்த அழகிப் போட்டியைத் தடுத்து நிறுத்தியதில் பெருமை கொள்கிறார்கள் பஜ்ரங் தள், வி.எச்.பி. தொண்டர்கள். இந்தியப் பண்பாட்டை மேற்கத்திய ஆதிக்கத்திலிருந்து காப்பாற்றிய ரக்ஷகர்களாகத் தங்களை அறிவித்துக் கொள்கிறார்கள்!

இதைப் போன்ற அறியாமை வேறென்ன இருக்க முடியும்!

அழகிப் போட்டிகள் நடத்தப்படுவதாலும் அவற்றில் பெண்கள் மேலை நாகரிகப்படி உடுத்தி வருவதாலும் இந்தியப் பண்பாடு அச்சுறுத்தப்படுகிறது என்று நம்புகின்றன இந்த அமைப்புகள்.

இந்திய சினிமாக்களில் இவர்கள் கண்டு ரசிக்கும் கதாநாயகிகள் அணிந்து வரும் உடைகளை விடவும் அழகிப் போட்டி உடைகள் அநாகரிகமாகப் போய் விடவில்லை என்பது ஒருபுறமிருக்க, அழகிப் போட்டிகளுக்கு எதிர்ப்புத் தெரிவிக்கிற உரிமையை நாம் மதிக்கிறோம். ஆனால் தடியெடுத்து தண்டல்காரனாக மாறுவதை அனுமதிக்க முடியாது. சாத்விக முறையில் எதிர்ப்புத் தெரிவிப்பதை வரவேற்கலாம். ஆனால் வன்முறையைக் கையாண்டு அழகிப் போட்டிகளைத் தடுத்து நிறுத்துவது குற்றமாகும்.

கொள்கை அளவிலும் தார்மிக ரீதியிலும் அழகிப் போட்டிகள் நமக்கு ஏற்புடைய நிகழ்ச்சி அல்ல. எனினும், தேசிய எல்லைகள் தகர்ந்துபோய், உலகமே ஒரு கிராமமாகி வருகிற அசுரவேக யுகத்தின் தவிர்க்க முடியாத பாதிப்புகளுள் ஒன்று. ஜனநாயக அமைப்பில், தனிமனித சுதந்தரம் உறுதிசெய்யப்பட்டுள்ள நிலையில், இத்தகைய பாதிப்புகளையும் பரிமாற்றங்களையும் அரசு




தடைசெய்வது சாத்தியமில்லை.

வி.எச்.பி., பஜ்ரங்தள் போன்ற அமைப்புகள் அழகிப் போட்டிகளை ஏற்கத் தயாராய் இல்லை என்கிற நிலையில், அவை தெரிவிக்கும் எதிர்ப்பு அர்த்தமுள்ளதாகவும் அவற்றின் மதிப்பை உயர்த்துவதாகவும் அமைய வேண்டும்.

வெறித்தனமாக அரங்கில் நுழைந்து, பலவந்தமாக நிகழ்ச்சியைத் தடுத்து நிறுத்துவது, பஜ்ரங் தள், வி.எச்.பி. அமைப்புகளின்பால் கவனத்தை ஈர்த்து, அவற்றின் 'பராக்கிரமத்தை' எடுத்துக்காட்டலாம். அவை பி.ஜே.பியின் ஆசியைப் பெற்று ஆட்டம் போடுகின்றன என்பதை நிரூபிக்கலாம். ஆனால் இதனாலெல்லாம் இந்தியக் கலாசாரம் காப்பாற்றப்படப் போவதுமில்லை; புனருத்தாரணம் பெறப் போவதுமில்லை. அதற்கு ஆக்கபூர்வமான அணுகுமுறை தேவை.

வன்முறை என்பது நீசர்களின் ஆயுதம். திட்டமிட்ட வன்முறை என்பது நாசக்கார நீசர்களின் அணுகுமுறை. ஹிந்து அடிப்படைவாத அமைப்புகள் இந்த அணுகுமுறையை மேற்கொண்டு, இந்தியாவை மயானபூமியாக்கி வருகின்றன.

அழகிப் போட்டியில் புகுந்து இடைஞ்சல் செய்வதென்பது குஜராத்தில் இதோடு மூன்று முறை நடைபெற்று விட்டது. (பரோடா, சூரத், அகமதாபாத்)

பிற மத துவேஷத்தை வெளிப்படுத்தும் கொடூரமான நிகழ்வுகளும் மீண்டும் மீண்டும் வடமாநிலங்களில் நடைபெற்று வருகின்றன. ஹிந்து தீவிரவாத அமைப்புகளின் முஸ்லிம் விரோத போக்கைத் தொடர்ந்து, அவர்களது கிறிஸ்தவ விரோதப் போக்கும் சமீபகாலமாக கோர தாண்டவம் ஆடுகிறது.

பீஹாரில் ஆட்டோ ரிக்ஷா ஏறிப் பயணம் செய்த கன்யா ஸ்த்ரீக்கு இழைக்கப்பட்ட கொடுமை மன்னிக்க முடியாதது; ஒவ்வோர் இந்தியனுக்கும் தலைகுனிவை ஏற்படுத்துவது. கடந்த ஆண்டு பி.ஜே.பி. கூட்டணி ஆட்சிக்கு வந்தது முதல் நிகழ்ந்து வருகிற கொடூரங்களின் வரிசையில் இடம்பெற வேண்டிய சம்பவம்தான் இது.

இவற்றுள் எந்தச் சம்பவமும் பிரதமரின் நேரடியான, உடனடியான கண்டனத்துக்கும்




தலைமீட்டுக்கும் உள்ளாகவில்லை என்பது வருத்தத்துக்குரிய உண்மை. இது, ஹிந்துமத அடிப்படைவாதிகளின் பிடியில் பி.ஜே.பி. சிக்கித் தவிக்கிறது என்ற குற்றச்சாட்டுக்கு வலிமை சேர்க்கிறது.

ஒரிஸ்ஸாவில் ஸ்டெயின்ஸும் அவரது இரு குழந்தைகளும் உயிரோடு எரிக்கப்பட்டதை யடுத்து நிறுவப்பட்ட வாத்வா கமிட்டி தந்துள்ள ஆய்வறிக்கை கூட, குற்றவாளியாகக் கருதப்பட டும் தாராசிங், ஹிந்து அடிப்படைவாத அமைப்பைச் சேர்ந்தவன் அல்ல என்று சிரமப்பட்டு நிரூபிப்பதில்தான் அதிக அக்கறை காட்டியிருக்கிறது.

பிற மதத்தினருக்கு இழைக்கப்படும் கொடூரங்களுக்கு, ஹிந்து அமைப்புகளும் அவை விசிறி விடும் வெறுப்பும்தான் காரணம் என்பதில் சந்தேகமே இல்லை.

இந்தத் தேர்தலிலும் பி.ஜே.பி. கூட்டணி ஜெயித்து ஆட்சிக்கு வருமானால், இந்தியாவின் பண்பாட்டுக்கே ஆணிவேரான சகிப்புத்தன்மைக்கு என்ன கதி நேரும்? 'பாபரி மசூதிக்குக் கிடைத்த மரியாதைதான் சகிப்புத்தன்மை என்கிற ஒப்பற்ற பண்புக்கும் தரப்படுமோ?' என்கிற அச்சம் எழுகிறது.

பிரதமர் வாஜ்பாய் இத்தகைய நமது அச்சத்துக்கு இடம் தராமல் செயல்பட வேண்டும். ஹிந்து தீவிரவாத அமைப்புகளின் அட்டூழியங்களைக் கண்டும் காணாமலிருக்கும் போக்கி லிருந்து மாறி, இரும்புக் கரம் கொண்டு அவற்றை ஒடுக்க வேண்டும். பிரதமரை இப்போதைய போக்கிலேயே நீடிக்கவிடாமல், தேசிய ஜனநாயக முன்னணியின் இதர கட்சிகள் முனைந்து செயல்பட வேண்டும்.

வாஜ்பாய் தலைமையில் தேசிய ஜனநாயக முன்னணிதான் அடுத்து ஆட்சி அமைக்கும் என்று கருத இடமிருக்கிறது. அது சிறுபான்மையினரின் நலன் காக்கும் அரசாகவும் மாற்றுக் கருத்துக்களையும் மதிக்கும் அரசாகவும் விளங்க வேண்டுமே தவிர, சில மதத் தீவிரவாதி களின் அராஜகத்தைக் கட்டவிழ்த்து விடும் அரசாக இருந்துவிடக் கூடாது. ●

# வட்டமேஜை

✉ 'பண்டிகையா – பலப்பரீட்சையா' என்ற தலையங்கத்தைப் படித்தவுடன், இதிலுமா வன்முறை என்று மனம் வேதனைப்பட்டது. எதெதெற்குத்தான் வன்முறை என்ற விவஸ்தையே இல்லாமல் போச்சே. பிள்ளையாரப்பா நீதாண்டாப்பா இந்த நாட்டையும், மனித வர்க்கத்தையும் காப்பாத்தணும்!
விழுப்புரம் – 2, வை. வெங்கடேசன்.

✉ அப்துல் கலாமின் சுயசரிதையிலிருந்து தந்த அந்தத் துணுக்குச் செய்தியில் சமத்துவத்தின் முழுப் பரிமாணத்தையும் கண்டேன். அந்தக் காலத்திலேயே மதப் பிணக்கு இல்லாமல் வாழ்ந்த மக்கள் மிக உயர்ந்தவர்கள்.
அனுப்பானடி, இரா. கல்யாணசுந்தரம்.

✉ வாக்கு சதவீதம் குறைந்து வருவதைப் பற்றிய இரா. செழியன், சோ போன்றவர்களின் கருத்துகள் உண்மையாகவும் அனைத்துத் தரப்பினரும் ஏற்றுக் கொள்ளக் கூடியதாகவும் இருந்தன.
குட்டலாடம்பட்டி, கே. மூர்த்தி.

✉ பாதிரியார் அருள்தாசுக்கு இழைக்கப்பட்ட கொடுமை மனித நேயத்திற்குக் கொடுக்கப்பட்டுள்ள சவுக்கடி. நாம் எங்கோ சென்று கொண்டிருக்கிறோம் என வேதனையே மிஞ்சியது!
வடபழனி, சி. மகேஷ்.

✉ 'சிகர விழா' கட்டுரை வெகு அருமை.

## சிகர விழாவை நேரில் காட்டிய கட்டுரை!

என்னைப் போல் பலர் அவ் விழாவில் கலந்து கொள்ளாத ஏக்கம் இக்கட்டுரை, படங்கள் மூலம் நிவர்த்தி செய்து விட்டீர்கள். நிகழ்ச்சிகள் திரைப்படம் போல் கண் முன்னே ஓடின!
வேலூர் – 1, நா. தேவன்.

✉ அமரர் குண்டுமணிக்கு அஞ்சலி செலுத்திய விதம் கண்களில் கண்ணீரை வரவழைத்து விட்டது. மனம் கனத்தது! கல்கி நூற்றாண்டு விழாவை அனுபவித்துவிட்ட நிறைவுடன் 'ரா.கி'யுடன் ஒன்றி விட்டார் போல!
மேற்கு மாம்பலம், டி. சௌந்தரராஜன்.

✉ என்னது 'சினிமாவுக்கு' ரமேஷ் அரவிந்த் ரொம்ப நாள் லீவ் போட்டு விட்டாரா? ஹலோ... கன்னடத்தில் அவர் டாப் ஹீரோ என்பது தெரியாதா உங்களுக்கு?
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ ஈரோடு தமிழன்பனின் மறுபிறவி நெஞ்சை அடைக்கத்தான் செய்தது. இருந்தாலும், கட்டுரையில் விளையாடிய அழகுத் தமிழை ரசிக்காமல் இருக்க முடியவில்லை. வார்த்தைக்கு வார்த்தை கொஞ்சு தமிழ் அணி வகுப்பு செய்து தமிழன்பனின் கவி முகத்தை வெளிச்சம் போட்டுக் காட்டியிருந்தது!
மொரட்டுப்பாளையம், சு.நா. இராஜேஸ்வரன்.

✉ கவிஞர் தமிழன்பனுக்கு அக்கி வந்ததை கல்கியில் இரண்டு பக்கத்திற்கு விளக்க வேண்டியது அவசியம்தானா?
மதுரை -1, பி.ஆர். சத்தியபிரகாஷ்.

✉ ஈரோடு தமிழன்பன் 'மங்கலம் பாட' இப்படி ஒரு நோயா...? கேள்விக் குறியோடு... மறுபிறவியை வடித்த மை... 'மீண்டும் தமிழன்பன் செய்தி வாசிக்கிறார்' என்பதை படித்ததும் அவரது வாழ்க்கைப் போராட்ட எதிர்நீச்சலை... உணர முடிகிறது! வாழ்க ஈரோடு தமிழன்பன்.
சேத்துப்பட்டு, இரா.பார்த்திபன்.

✉ 26.9.99 கல்கி இதழில் அஞ்சல் துறையின் வாடிக்கையாளர் சேவை பற்றிய செய்தியை வெளிவிட்டமைக்கு நன்றி. ஆவடி, எண்ணூர், தாம்பரம் பகுதிகளிலிருந்து புகார்கள் பெற்றுச் செயல்படுவதாகக் குறிப்பிட்டுள்ளீர்கள். சென்னை மாநகர எல்லைக்குள் எழும் புகார்கள் மட்டுமின்றி புறநகர்ப் பகுதிகளான தாம்பரம், ஆவடி, எண்ணூர் வரையுள்ள எல்லைக்குட்பட்ட புகார்களையும் பெற்று நடவடிக்கை எடுக்கிறோம்.
சென்னை – 2,
ஏ.எஸ். முத்துகுமாரசாமி,
துணை இயக்குநர்,
அஞ்சல் துறை வாடிக்கையாளர் நல மையம்,

✉ ஹர்கிஷண் சிங் சுர்ஜித் முன்னாள் தேச பக்தர் தான் என்பது வேறு விஷயம். அவர், 'பொது எதிரி' என்று குறிப்பிடும் பி.ஜே.பியுடன் முன்பு இணைந்து செயலாற்றியவர்தான். வோட்டுக்காக ஜெயலலிதாவுடனும், லல்லுவுடனும் சேரும் அளவுக்கு இறங்கிவிட்டது மார்க்சிஸ்ட். அதோடு முன்பு எதிர்த்த காங்கிரசை, இன்று ஒரு மாநிலத்தில் எதிர்ப்பது, ஒரு மாநிலத்தில் ஆதரிப்பது என்று கேலிக்கூத்து நடத்துகிறது மார்க்சிஸ்ட். சித்தாந்தங்களை விட்டு விட்ட மார்க்சிஸ்ட், இந்தியாவில் நிலையான ஆட்சி அமையவிடாது கெடுப்பதில் இன்று முதல் பங்கு வகிக்கிறது என்பதுதான் உண்மை!
கோவை – 43, எஸ். திருமலை.

✉ கா. புவனேஸ்வரியின் 'அந்தமானைப் பாருங்கள் அழகு' படித்து மிகவும் ரசித்தேன். சிரித்தேன், மகிழ்ந்தேன், பாராட்டினேன். அந்தமான் போய் வந்தவர்கள் பலரையும் கேட்டதற்கு அங்கு என்ன இருக்கிறது; வெறும் கடல்தான் என்றார்கள். ஆனால் இக்கட்டுரையைப் படித்தபின் எனக்கும் அங்கு போய் வர வேண்டும் என ஆவல் பொங்குகிறது!
சென்னை – 40, க. கலையரசி.

# வந்தார்கள், கண்டார்கள், சென்றார்கள்!

• அதிகாரிகள் குழு பார்வையிட்டபோது...

• குளம் போல மேட்டூர் அணை

**பிரதமரால் அனுப்பப்பட்ட 'மத்திய நீர்வள–ஆய்வுக் குழு' அசுர வேகத்தில் கர்நாடக நீர்நிலைகளை ஆராய்ந்த கையோடு. மேட்டூர் அணைக்கும் வந்தது. அதுசமயம் நாமும் அங்கு சென்றிருந்தோம்.**

சி.எம். வருகையை விடவும் ராஜ மரியாதை அதிகாரிகளுக்கு. 'வீதியில் எந்த மினிஸ்டர் போறாப்பல?' என மிஸ்டர் பொதுஜனம் சிலாகிக்கிற அளவு முன்னால் பத்து வாகனம். பின்னால் பத்திருபது ஜீப், வேன்கள். மாலை மரியாதை, வரவேற்பு தடபுடல்கள்.

"என்ன செய்வது? மனிதர் வாஜ்பாய்க்கு ஒரு வரி மேட்டூரில் 'நீர்நிலை நன்னா இருக்கு'ன்னு கிறுக்கி வச்சுட்டாப் போச்சே!" சக நண்பருடன் சிலாகிக்கும் ஓர் உள்ளூர் அதிகாரி.

"நேற்று வரை இருந்த ஒன்பது டி.எம்.சி. நீரைத்தான் இப்போது விநியோகித்துக் கொண்டிருக்கிறோம். இதை 3.2 டி.எம்.சி. வரைக்கும் விடுவதாக ஏற்பாடு. இப்போதைய நிலவரப்படி உடனடியா 17 டி.எம்.சி. வாட்டர் வேணும்."

– என்று சகஜமாக ஹசனிடம் விளக்கும் தமிழ்நாடு தொழில்நுட்பக் குழுத் தலைவர் மோகனகிருஷ்ணன். மண்டலத் தலைமைப் பொறியாளர் என். பொன்னுச்சாமி.

மத்திய நீர்வளத் துறைச் செயலர் இசட்–ஹாஸன் தலைமையிலான குழு வந்திறங்கியபோது மணி சரியாக 11:20. உபரி நீர்க் கண்மாய்ப் பகுதியில் பத்து நிமிஷம் செலவிடுகிறார்கள் குழுவினர். 'கவர்னர் வியூ பாய்ண்டில்' நின்று மேட்டூர் அணை வரலாற்றைப் படித்து விவரம் கேட்டவாறு ஒரு பத்து நிமிஷம், வலதுகரையின் நீர் அளவிடும் பகுதியில் விளக்கம் கேட்டபடி பதினைந்து நிமிஷம்,

பழைய அணை, நீர்மின் நிலையம், மின் நிலையத்தின் சுரங்கப் பகுதி என சுமார் மதியம் 12:50 வரை சுற்றிப் பார்த்த அதிகாரிகள் நேரே சென்றது - பொதுமக்களைச் சந்திக்க அல்ல. 'கெஸ்ட் ஹவுஸிற்கு'. அங்கே நீண்ட நேரம் உள்ளூர் அதிகாரிகளுடன் கலந்தாலோசிப்பு. பத்திரிகையாளர்களின் காத்திருப்பு.

"பாதிக்கப்பட்ட விவசாயிகளை, டெல்டா பகுதிகளைப் பார்ப்பதாக முதலில் கூறப்பட்டதே. போகவில்லையா? ஏன்?"

"நாங்கள் நீர்நிலை பற்றி ஆராயவே வந்துள்ளோம். இரண்டு மாநில நீர் நிலைகளிலும் தேவையான விவரங்கள் சேகரித்தும் விட்டோம். தவிர இவற்றை ஓரிரு நாட்களில் ஆய்வு செய்து அறிக்கையை பிரதமரிடம் ஒப்படைப்புச் செய்ய வேண்டியிருப்பதால் காவிரி டெல்டா பகுதிக்குச் செல்லவில்லை!"

"இரண்டு மாநிலத்தில் நீர்நிலை மிக மோசம் என எங்கு கட்டிக்காட்டுவீர்கள்?" குறுக்கில் ETVயின் கேள்வி.

"இரண்டு மாநிலங்களிலும் நீர் நிலைமை ரொம்ப மோசம்தான். அது எந்த அளவு என்று இரண்டுக்குமான ஒப்பீட்டை நான் இங்கு தர முடியாது!"

ரத்தினச் சுருக்கான பிரஸ் மீட் கலைந்து போக, அந்த அமளியிலும் அடித்துப் பிடித்து ஹசனிடம் மனுகொடுக்க ஒரேயொரு விவசாயி வந்திருந்தார். மனு கொடுத்த கையோடு, "ஒரு அஞ்சு டி.எம்.சியாவது, அவங்களை விடச் சொல்லுங்களே ஐயா. உங்களுக்கு புண்ணியமாப் போவும்."

பதிலுக்கு சின்ன சிரிப்பு மட்டும் 'ஐயா'விடம். முகத்தில் ஈயாடாது வந்த அந்த மனு கொடுத்த விவசாயியை அணுகினோம்... மனிதர் பொறிந்து தள்ளி விட்டார்.

"தேர்தலுக்கு முந்தியே - பன்னிரெண்டாம் தேதியே பாக்கறவங்களையெல்லாம் பார்த்து விண்ணப்பம் கொடுத்தோம். 'ம்'ன்னு ஒரு வார்த்தை யாராவது கேட்க வேணுமே. எல்லாம் அதிகாரிகள் ராஜ்யம். அங்கே முதலமைச்சரும், இங்கே கலைஞரும் கூட இந்த அதிகாரிகள் தர்ற விவரத்தை வச்சுத் தானே பேசறாங்க. என்னத்தைச் சொல்லி என்ன செய்யறது? ஏதோ கருக்கல் கட்டிக் கிட்டு வருது. வருணபகவான் கண் திறந்தாத்தான் உண்டு!"

முழுசாக இல்லாவிட்டாலும் அரைக்கண் திறந்திருக்கிறார் வருணபகவான். விவசாயிகளின் பிரார்த்தனையை விட பிரதமரின் பிரார்த்தனை பலமாக இருந்திருக்கும் போலும்!

— கேயெஸ்வி



• விழா மேடையில்...

## ஜீயர் பொழிந்த தமிழ் மழை!

இந்த வருடத்துக்கான, இராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் விருதை, தமிழ்ப் பேராசிரியர் சி. ஜெகந்நாதாசாரியாருக்கும், டாக்டர் எம்.ஏ. சிதம்பரம் செட்டியார் விருதை ஓவியர் கோபுலுவுக்கும் வழங்கியது எம்.ஏ.சி. அறக்கொடை.

ஐம்பதாயிரம் ரூபாய்க்கான காசோலை வைத்த வெள்ளிப் பேழைகளை இருவருக்கும் கொடுப்பதற்கு முன்னால், தலைமைவகித்த ஸ்ரீபெரும்புதூர் ஸ்ரீமத் ஸ்ரீ வரத யதிராஜ ஜீயர் சுவாமிகள் ஒரு தமிழ் மழை பொழிந்து தீர்த்தார். சங்கத் தமிழ், தங்கத் தமிழ், கன்னித் தமிழ், பொன்னித் தமிழ், தீந்தமிழ், செந்தமிழ், பைந்தமிழ், எந்தமிழ் என்று தமிழுக்குச் சுமார் இரண்டு டஜன் அடைமொழிகள் சொல்லி முடித்தபோது ஒரே கைதட்டல்! பிரபந்தமும், ஆண்டாள் பாசுரங்களுமாக அவர் கடகட வென்று பொழிந்த தமிழ் மழையில், ஏ.ஸி. ஹால் இன்னும் குளிர்ந்து போயிற்று. சைவ - வைணவப் பிணக்கம் இல்லாத இணக்கம் வளர, தமிழ் எப்படி உதவியது என்பதைச் சொல்லி, அந்தத் தமிழை வளர்த்த இராஜா சர் அவர்களையும், அவர்களின் வாரிசுகளையும் வஞ்சனையில்லாமல் வாயாரப் புகழ்ந்தார் ஜீயர்.

"தலைமைதாங்க வருமாறு அழைக்க வந்தனர் ஏ.ஸி. முத்தையாவும், அவர் மகன் அச்வின் முத்தையாவும். அரைமணி நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். என்னைக் கவர்ந்தது அவர்கள் எளிமைதான்!" என்றார் ஜீயர் சுவாமிகள்.

பேராசிரியர் ஜெகந்நாதச்சாரியாருக்கு வெள்ளிப் பேழை கொடுத்த கையோடு, 'தமிழ்ப் பெரு மாமுகில்' என்ற பட்டத்தையும், ஓவியர் கோபுலுவுக்கு 'கலைமாமுகில்' என்ற பட்டத்தையும் சூட்டி மகிழ்ந்தார் ஜீயர்.

— சித்தார்த்

கிராமத்தில் வறுமையை ஒழிக்க முடியுமா?

முடியும்!

கிராமப் பெண்களுக்கு எழுத்தறிவு புகட்ட முடியுமா?

முடியும்!

வீட்டுக்குள்ளே முடங்கிக் கிடக்காமல், வெளியே வந்து ஆண்களைப் போல, அரசு-வங்கி அதிகாரிகளைச் சந்தித்துப் பேச முடியுமா?

முடியும்!

சாலையைச் சீராக்குதல், தண்ணீர்க் குழாய்களைச் சுத்தப்படுத்துதல், சிறிதளவு கல்வி, சுகாதாரம் மூடப் பழக்கங்களைப் பின்பற்றாமை போன்றவற்றில் ஆர்வம்

* பால்மாடு வாங்க வங்கிக் கடனாகப் பத்தாயிரம்!



# வளர்ச்சிக்கு வழிகாட்டும் கிராமப் பெண்கள்

காட்ட முடியுமா?

முடியும்!

தங்கள் வருவாயில் சிறு சேமிப்புச் செய்து, அதன் அடிப்படையில் வங்கிக் கடன் பெற்று ஆடு மாடுகள் வாங்கி வளர்த்து, பால் விற்று, கோழி வளர்ப்பு, நெசவு என்று தொழிலில் ஈடுபட்டுச் சம்பாதிக்க முடியுமா?

முடியும்!

வாங்குகிற வங்கிக் கடனைத் திரும்ப அடைக்க முடியுமா?

முடியும். அதுவும் நூறு சதவிகிதம் முடியும்!

நம்ப முடிகிறதா?

விவரங்களைப் படித்தால் முடியும்! முடியும்! முடியும்! என்பீர்கள்:

நாம் மதுராந்தகம் அருகே உள்ள பரசநல்லூர்-பவிஞ்சூர் கிராமம் சுற்று வட்டாரத்திலுள்ள சுமார் 72 கிராமங்களிலிருந்து, லெட்ஜரும், நோட் புக்குமாக வந்திருந்தனர் பெண்கள். வரிசையாகவும், வட்டமாகவும் அமர்ந்து கொண்டு, சேமிப்புத் தொகையையும், வங்கிக்குக் கட்ட வேண்டிய தொகையையும், கடன் வாங்க வேண்டிய தொகையையும், சர்வ சகஜமாக வசூலித்துக் கணக்குகள் எழுதி முடித்தபோது நமக்குக் கொஞ்சம் வியப்பாகத்தான் இருந்தது!

இந்தக் கிராமத்துப் பெண்களை 15-20 பேர்களான குழுக்களாகப் பிரித்து, அவர்களுக்கிடையே சேமிப்புப் பழக்கத்தையும், சுயச் சார்புக்கான தன்னம்பிக்கையையும் ஊட்டி வளர்த்திருக்கிறது அசோசியேஷன் ஃபார் சர்வ சேவா ஃபார்ம்ஸ் (அசேஃபா) என்கிற தொண்டு நிறுவனம். இவர்களைக் கண்டறிந்து, கைகொடுத்தது பாரத ஸ்டேட் வங்கி.

கந்து வட்டியிலும், அதிக வட்டியிலும் சிக்கிக் கொண்டு மீள முடியாமல் தவித்த கிராமப் பெண்கள், இப்போது மாடுகள் வாங்கி, பாலை விற்று, பணத்தைச் சேமித்து, வங்கிக் கடனையும் தவறாமல் அடைத்து, தலை நிமிர்ந்து நடப்பதைப் பார்க்கிற எவரும் இதென்ன செப்பிடு வித்தை என்றுகூட நினைக்கக் கூடும்!

ஒவ்வொரு அமாவாசை தினத்தன்றும், அணைக்கட்டு கிராமத்தை ஒட்டிய பரசநல்லூர் கிராமத்தில் கூடும் இந்தப் பெண்

• பரசநல்லூரில் கூட்டம்

கள், ஒரு கடவுள் வாழ்த்துப் பாடலுடன் கூட்டத்தை ஆரம்பிக்கிறார்கள். 25 குழுக் களாக வந்திருக்கும் 432 பேரும், தங்கள் மாதச் சந்தா 2 ரூபாயையும், சேமிப்புப் பணம் பத்து ரூபாயையும் கொடுத்து ஏட்டில் பதிவு செய்கிறார்கள்.

தாங்கள் கறக்கும் பாலை பலிஞ்சூரி லிருந்து 23 கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் பூரியம்பாக்கத்துக்குக் கொண்டு சென்று பதப்படுத்த வேன் வாங்கியிருக் கிறார்கள். வேனுக்கான கடனை மாதம் 16,464 ரூபாயாகக் கட்டி வருகிறார்களாம். வேன் வாங்க நான்கு லட்ச ரூபாய் இந்த 25 குழுக்களுக்கும் சேர்த்து பாரத ஸ்டேட் வங்கி கடன் கொடுத்திருக்கிறது. "பாலை விற்றுக் கிடைக்கிற வருவாயில் மட்டுமே எப்படி கடனை அடைக்க முடியும்? அதுவும் தவிர வேனுக்கு டீசல், பராமரிப்புச் செலவு எல்லாம் இருக்குமே?"– கேட்டோம்.

பக்கத்துப் பக்கத்துக் கிராமங்களில் தரப்படும் பாலைப் பெற்றுக் கொள்ள வேன் கிட்டத்தட்ட தினசரி 400 கி.மீ. ஓடுவதால் வாடகைப் பணம் மட்டுமே தினம் சுமார் 1000 ரூபாய் கிடைக்கிறதாம்! "இந்தச் சுய உதவிக் குழுக்களுக்கும், வங்கிக்கும் இடையே பாலமாகச் செயல்படுகிறது தொண்டு நிறுவனமான அசேஃபா'' என்கிறார் இதன் திட்ட இயக்குனர் ஆரோக்கியசாமி.

"ஒரு நாளைக்கு எவ்வளவு லிட்டர் பால் சேமிக்கிறீர்கள்?''

"1250 லிட்டர்!"

கூட்டத்தில் சுகாதாரம் பற்றிப் பேசு கிறார் ஒரு பெண்மணி. தையல் இயந்திரங் கள் வாங்கிக் கொடுத்திருப்பதைச் சொல்லு கிறார். சிறப்பு போலியோ முகாம் ஒன்று நடத்தப்பட இருப்பதை அறிவிக்கிறார். யார் யாருக்குப் பண உதவி கடனாகத் தேவைப்படுகிறது என்று விசாரிக் கிறார். கொடுத்துவிட்டுப் பதிவு செய்து கொள்ளுகிறார்.

"இன்னும் யாருக்கும்மா?'' சீதா என்ற பெண் தனக்குத் தேவை இருப்பதாகச் சொல்லுகிறார். "உனக்கு எதுக்கும்மா?'' என்று தலைவி கேட்க, சிரித்தே வெட்கப்படுகிறார். ஊர்ப்



• லாபத்தில் ஓடும் பால் வேன்!

பெரியவர்களிடம் 36 சதவிகிதம் வட்டிக்கு அவசரத் தேவைகளுக்குக் கடன் வாங்கி வந்த அவலம் அடியோடு போய்விட்டதாக இந்தப் பெண்கள் தெரிவித்தார்கள்!

பங்களாதேஷில் இந்த மாதிரி சுய உதவிக் குழுக்கள் மிக வெற்றிகரமாக இயங்கி வருவதுதான் இம்முயற்சிக்குக் காரணமாம்.

திருச்சியிலிருந்து குளித்தலை வழியே போய் இடப்புறம் திரும்பி மணப்பாறை சாலையில் 53ஆவது கி.மீட்டரில் இருக்கிற பஞ்சப்பட்டியிலும் சரவணபுரத்திலும் நாம் பார்த்த போதும், இதே சுய உதவிக் குழுக்களின் வெற்றிக் கதைகள் தொடர்ந் தன!

222 சுய உதவிக் குழுக்கள் பெற்றிருந்த 68 லட்ச ரூபாய்க் கடனையும் திரும்பக் கொடுத்துவிட்டதாகத் தெரிவித்தனர் வங்கி அதிகாரிகள்.

ஆடு வளர்த்தல், பாய் முடைதல், பெட்டிக் கடை, க்ளீனிங் பவுடர் தயாரிப்பு, தையல், கூடை முடைதல், அரிவாள் செய்தல் என்று இந்தக் கிராமப் பெண்கள் சதா சுறுசுறு என்று இருக்கிறார்கள். LEAD என்ற தொண்டு நிறுவனம் இந்தக் கிராமப் பெண்களுக்கும் வங்கிக்கும் இடையே இணைப்பாகச் செயல்படுகிறது.

இதன் தலைவி ராதா சொன்னார்:

"புற்று நோய் காம்ப் ஒன்று மார்ச் மாதம், வங்கியின் திருச்சிக் கிளை ஆதரவுடன் நடந்தது. 65 பெண்களில் 9 பேருக்குப் புற்று நோய் இருப்பதாகக் கண்டறியப்பட்டது. ஐந்து பேருக்கான அறுவைச் சிகிச்சைச் செலவை வங்கி ஏற்றுக் கொண்டது. எழுதப் படிக்கத் தெரியாத நூறு பெண்கள், இப்போது எழுதப் படிக்கக் கற்றுக் கொண்டு விட்டனர். குடி தண்ணீர் இணைப்புப் பெற்றுக் கொண்டிருக்கிறார்கள். சுகாதாரம் பற்றி நன்றாகத் தெரிந்து கொண்டிருக்கிறார்கள். கொத்தடிமைகளாக இருந்தவர்களை மீட்டு கோவாபரேடிவ் சொஸைடி அமைத்துக் கொடுத்திருக்கிறார்கள்..."

கிராமமே சுத்தமாகத் தெரிந்தது. குழுக்களாக வந்திருந்த பெண்மணிகளும் நேர்த்தியாக உடுத்திக் கொண்டு, தங்கள் சொந்த வீட்டு நிகழ்ச்சி போல வந்திருந்தார்கள்!

அந்த மாதம் கூட்டத்துக்கு யார் தலைவியாகத் தேர்ந்தெடுக்கப்படுகிறாரோ அந்தப் பெண்மணி, வங்கிக்குப் போய், சேமிப்புப் பணத்தைக் கட்டிவிட்டு, வங்கிக்குக் கொடுக்க வேண்டிய கடன் தொகையையும் செலுத்திவிட்டு வருகிறார். "இவர்கள் எல்லாம் கிராமத்தைவிட்டு வெளியே வராதவர்கள். இவர்களே கிராமத்தை விட்டு வங்கிக்கு வந்து அதிகாரிகளைச் சந்தித்துப் பேசுகிறார்கள் என்றால் எத்தனை பெரிய முன்னேற்றம்!" என்கிறார் ராதா.

கடனில் வாங்கப்பட்ட ஆடுகள் அருகே மேய்ந்து கொண்டிருந்தன. ஆடு வளர்ப்பில் நல்ல லாபம் இருக்கிறதாம்! முன்பு பிரைமரி ஹெல்த் சென்டர் பாழடைந்து மூடிக் கிடந்தது. மாவட்ட சுகாதார அதிகாரியை நேரில் போய்ப் பார்த்து, "ஒண்ணு மூடிடுங்க. இல்லையா டாக்டருங்களை வையுங்க!" என்றார்கள் இந்தப் பெண்கள். இப்போது நான்கு டாக்டர்கள் வருகிறார்களாம்!

அருகில் பள்ளிக்கூடம்; குழந்தைகள் படிக்கிறார்கள்.

சாதி- சமயச் சண்டைகள் இல்லை. பரஸ்பரம் அன்பும் ஒத்துழைப்பும் கிராமப் பெண்களிடையே அதிகரித்திருக்கிறது. நம்முடைய அரசியல்வாதிகள் நுழையாத வரை கவலை இல்லை!

— எஸ்.வி.என்.




"குப்புசாமி சார்! லீவு லெட்டர்ல உண்மையான காரணத்தைத்தான் எழுதணும்னு நான் சொன்னது வாஸ்தவம்தான்; அதுக்காக, 'சமைக்கும் போது கால்ல கஞ்சி கொட்டிடுச்சு'ன்னெல்லாம் எழுதறது நல்லா இல்லே!"

— சீர்காழி வி. ரேவதி

# என்றென்றும் புதுமை...
# வற்றாத வளமை !

நமது வாழ்க்கையில் வளமை வளரவும், மற்றவர்க்கும் துணையாக நின்று உயர்த்தி விடவும் வழி வகுக்கும் அற்புதமான சேமிப்பு முறைதான் சீட்டுத் திட்டம். அன்றைய மன்னராட்சிக் காலம் முதல் இன்றைய இன்டர்நெட் காலம் வரை வாழ்வில் வசந்தம் வீச வழி வகுப்பவை சீட்டுத் திட்டங்களே !

ஸ்ரீராம் சீட்டுத் திட்டங்கள், உங்கள் வாழ்க்கையின் வசந்த வாசல்கள். 25 ஆண்டுகளுக்கும் மேலாக 17 லட்சம் குடும்பங்களில் குதூகலம் தவழ உதவி புரிந்துள்ள இத்திட்டங்களில் உங்களுக்குத் தேவை வரும் போது: கடன் பெறும் வசதியும் உள்ளது.

**உங்கள் விருப்பமே!**

உங்கள் விருப்பம் போல, மாதந்தோறும் குறிப்பிட்ட தொகையை சேமித்து வரலாம். தேவை ஏற்படும் போது, சேமித்த தொகையுடன், எதிர்கால சேமிப்பையும் இணைத்து, சீட்டுத் தொகையாக, தள்ளுபடி ஏலம் கேட்டு எடுத்துக் கொள்ளலாம். நீங்கள் சேமிக்கும் பணம்தான் நீங்கள் கடன்பெற உதவுகிறது என்பது இதன் சிறப்பம்சம்.

**ஆதாயம் உங்களுக்கே !**

சீட்டுத்தொகையை ஏலம் கேட்கும்போது, தள்ளுபடித் தொகையை நீங்களே நிர்ணயிக்கலாம். மற்றொருவர் அதிகமாகத் தள்ளி ஏலம் எடுத்தாலும், உங்களுடைய ஈவுத் தொகை அதிகமாகும். எப்படிப் பார்த்தாலும் உங்களுக்கு ஆதாயம்தான் !

**நடைமுறையில் எளிமை :**

ஏலம் எடுத்த தொகையை நீங்கள் பெறுவதற்கு உரிய நடைமுறைகள் மிக எளிதானவை. தெளிவானவை. வாருங்கள், வாழ்வில் வசந்தம் மலர வழி வகுக்கும் ஸ்ரீராம் சிட்ஸ் சீட்டுத் திட்டங்களில் சேர்ந்து சேமித்துப் பலன் பெறுங்கள்.




செப்டம்பர் 19 - அக்டோபர் 19



**ஸ்ரீராம் சிட்ஸ்**

ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்
சுப்ரமணியன் பில்டிங்,
1. கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை 600 002.
போன் : 8520700, 8520797, 8522651.
Visit us at : www.shriram.com

பெண்ணின் பெருமை போற்றுவோம்.

WORKS RAYS 901

# பெரியாருக்கும் வெங்காயத்துக்கும்

கொஞ்ச நாளா அடங்கியிருந்த கல்கி பகவான் அலை மறுபடியும் அடிக்க ஆரம்பிச்சிருக்கு. லாஸ்ட் வீக் ஒருநாள் அஷோக் பில்லர் பஸ் ஸ்டாண்ட்ல நின்னுட்டிருந்தப்ப திடீர்னு ட்ராஃபிக் ஜாம். ஈவினிங் சிக்ஸ் ஓ க்ளாக் இருக்கும். நடுரோடுல ராட்சஸ ஸ்கிரீன் வெச்சு ரஜினி படம் ரிலீஸ் பண்றாப்பல அப்படியொரு கூட்டம் முண்டியடிச்சிட்டு வெஸ்ட் மாம்பலம் சைடுலேருந்து வருது. முதல்ல காலாட்படை. அப்புறம் சைக்கிள் படை. பின்னால ஒரு மோட்டார் வெச்ச தேர்ல தாடி வெச்ச கல்கி பகவானோட லைஃப் சைஸ் போட்டோகிராஃப். அதைச் சுத்தி சுமார் நூறு பேர். லவுட் ஸ்பீக்கர் வெச்சு பாட்டுப் பாடிட்டே வராங்க. திடீர் திடீர்னு சிலர் பரவசத்தோட டான்ஸ"ம் ஆட ஆரம்பிக்கவே, ஆப்போஸிட் சைட் போற வண்டிகளெல்லாம் கூட நின்னு, மக்கள் வேடிக்கை பார்க்க ஆரம்பிச்சுட்டாங்க. லாரிகள், பஸ்ஸஸ், கார்ஸ்னு அப்படியே ஒரு வாகன மேளா மெயின் ரோடுல ஜாம் ஆகி நிக்க, இவங்க தக்க போலீஸ் பாதுகாப்போட பஜன்ஸ் பாடி மெதுவாக நகர்ந்து கேகே நகர் பக்கம் போய்ச் சேர்ந்ததுல சுமார் இருபது நிமிஷம் பூமிக்கு ரெஸ்ட்!

பீக் ஹவர்ஸ்ல இப்படிப்பட்ட ஊர்வலங்களுக்கு எப்படி பர்மிஷன் கொடுக்கறாங்கன்றது ஒரு பக்கம் இருக்க, அந்தக் கூட்டத்துல தொண்ணூறு பர்ஸன்ட் யங்ஸ்டர்ஸா இருந்ததுதான் எனக்கு ரொம்ப ஆச்சர்யம் தந்தது. நாட்டுல இத்தனை இளைஞர்களுக்கு உண்மையிலேயே ஆன்மிக நாட்டம், தோட்டமெல்லாம் இருக்கா என்ன! அப்புறம் எப்படி கள்ளவோட்டு பர்ஸன்டேஜ் தேர்தலுக்குத் தேர்தல் அதிகரிக்குது? தியேட்டர்கள்ல ப்ளாக் டிக்கெட் எப்படி விக்குது? காலேஜ் க்ளாஸ் ரூம்ஸ் மாட்னி டயத்துல காலியாறது?

ஊருக்கு ஒரு சினிமா தியேட்டர்னா, வீதிக்கு ஒரு சாமியார் முளைச்சிருக்கற தேசம் இது. ஒரு சாமியாரால ஒரு இளைஞர் அல்லது இளைஞி சீர்திருந்தறாங்கன்னு வெச்சிப்போம். அந்த ஒரு இளைய தலைமுறை பத்து சக தலைமுறையை சீர்திருத்தியிருக்கணும். (ஒரு தினத்தந்தியை பத்துப் பேர் படிக்கற லாஜிக் இதுக்கும் பொருந்தணும் இல்லையா?) அப்படிப் பார்த்தா, இந்நேரத்துக்கு விவேகானந்தர் கேட்ட நூறு இளைஞர்கள் என்ன, லட்சம் பேர் இல்லே கிடைச்சிருக்கணும்? எங்கே அவங்கள்ளாம்?



• வாலி

* * *

பெரியாருக்கும் வெங்காயத்துக்கும் என்ன சம்பந்தம்? பெரியாருக்கு வெங்காய சாம்பார்னா ரொம்பப் பிடிக்குமா? – இதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனா, பெரியார் அடிக்கடி 'வெங்காயம்'ங்கற வேர்டை யூஸ் பண்ணுவார்னு கேள்விப்பட்டிருக்கேன்.

இதுக்கு என்ன காரணம் இருக்க முடியும்? லாஜிக்கலா– அட் த ஸேம் டைம் – ஹ்யூமரஸா இங்க் பண்ணியிருக்கார் வாலி. அவரோட 'நிஜகோவிந்தம்'ங்கற கலெக்ஷன்ல இருக்கு அந்த பீஸ். சினிமாக் கவிஞர் வாலியை விட இந்த சிந்தனையாளர் வாலி

நம்மை ரொம்ப அட்ராக்ட் பண்றார். ரொம்பக் குறைவான சொற்கள்ல என்ன வேகமா வந்து விழுது பாருங்க அவரோட சிந்தனை :

தலையைச் சீவியவனின்
தாகத்தைத் தணிக்கிறது
இளநீர்.

ஆனால் –
தோலை உரித்தவனைக்
கண்ணீர் விடவைக்கிறது
வெங்காயம்.

இது
சுயமரியாதையைச்
சுட்டிக்காட்டுகிறதென்பது
பெரியாருக்கு மட்டுமே
புரிந்திருந்தது!

• • •



## சுமி சூப்பர் மார்க்கெட்

# என்ன சம்பந்தம்?

இந்த வருஷ தீபாவளிக்குக் கோடம்பாக்கத்தோட கொடை கொஞ்சம் ஜாஸ்திதான்னு நினைக்கறேன். அந்த உலகத்துல வொர்க் பண்ற என் ஃப்ரெண்ட்ஸ் கொடுத்த தகவல்படி மணிரத்னம், ராஜீவ்மேனன், ஷங்கர், பாரதிராஜா, கமல்னு அஞ்சு பெரிய ஸ்டார்ஸ் நேருக்கு நேர் களமிறங்கறாங்க. இது தவிரவும் சில மினிமம் பட்ஜெட் படங்களும் வருதாம். லாஸ்ட் ரெண்டு, மூணு வருஷ தீபாவளி ரிலீஸஸ் அவ்வோ சிறப்பா பேசப்படாத குறை இந்த வருஷம் நீங்கிடும்னு கோடம்பாக்க ஜோஸ்யாஸ் சொல்றாங்க. நீங்களும்.

பிகாஸ், எத்தனை கோடிகள் இன்வெஸ்ட் ஆறது தெரியுமா? தவிர, என்ன உழைப்பு! ஷங்கர் யூனிட் ஆசாமி ஒருத்தர்கிட்ட பேசினேன். முதல் நாள் ஷூட் பண்ணினதை அன்னிக்கு நைட்டே 'ரஷ்' பார்த்து, மறுநாள் காலை எடிட் பண்ணி, மத்தியானமே டப்பிங்குக்கு அனுப்பிச்சு ஈவினிங்ல ரெடி பண்ணிடறாங்களாம். 'ஒரு நாளைக்கு ஏன்தான் 24 மணி நேரம்னு வெச்சாங்களோ! இன்னும் ரெண்டவர் இருந்திருக்கக் கூடாதா'ங்கறார். தூக்கம், சாப்பாடு, குடும்பம் எல்லாத்தையும் விட்டுட்டு பேய் மாதிரி உழைக்கிறவங்களை – சரக்குக்காக இல்லாட்டியும் அந்த உழைப்புக்காகவாவது மதிக்கணும்னு நினைக்கறேன். கலை மேல ஒரு துளி மரியாதை இருந்தா திருட்டுக் கேபிள்ல படம்பார்க்க மாட்டோம். (நான் இப்ப வீர சபதம் பண்ணியிருக்கேன் தெரியுமா!)

• • •

ஒரு தனியார் தொழில் நிறுவனத்தோட கோல்டன் ஜூபிளி பத்தி தமிழ் பேப்பர்ல தலையங்கம் எழுதினாங்கன்னா நம்புவீங்களா? டி.ஐ. குருப் நிறுவனத்தோட பொன் விழா பத்தி தினமணியிலே எழுதியிருந்தாங்க. அந்த விழாவில பேசின எல்லாருமே அழகா அளவா பேசினாங்க. டி.ஐயோட தொழில் பிலாஸஃபி இதுதான்: உன்னோடு வியாபாரம் செய்பவரும் உன் ஊழியர்களும் நஷ்டப்படா விட்டால் நீயும் நஷ்டப்படமாட்டாய். (–இது சாணக்கியரோட அர்த்த சாஸ்திரத்துல இருக்காம்!) அதனால்தான் அன்னைக்கு விழாவுல பேச ஒரு கஸ்டமர், ஒரு பார்ட்னர், ஒரு ஷேர் ஹோல்டர்னு எல்லா தரப்பு பிரதிநிதிகளையும் இன்வைட் பண்ணியிருந்தாங்க. தலைமை : இந்தியத் தொழில் உலகத்தின் இன்றைய 'ப்ளூ ஐட் பாய்' ராஹுல் பஜாஜ்! இவருடைய நிறுவனம்தான் டி.ஐக்குச் சரியான போட்டி நிறுவனம். பரம்பரையாக ஒரு குடும்பத்தின் கட்டுப்பாட்டில் இருந்துவரும் பொதுத்துறை தொழில் நிறுவனங்களை அந்த ஃபாமிலி மெம்பர்ஸ்தான் நிர்வகிக்கணும்னு அவசியமில்லே... தகுதியுள்ள, ஆர்வமுள்ள நபர்கள் கையிலே பொறுப்பு தரப்படணும்னார். சொல்ற தகுதி ராஹுல் பஜாஜுக்கு உண்டு: அவருடையதும் குடும்ப நிறுவனம்தான்; ஆனால் அவர் ஹார்வர்ட் யூனிவர்சிடி எம்.பி.ஏ. பட்டாதாரி. அவர் நிறுவனம் இந்தியாவின் டாப் டென் நிறுவனங்கள்ல ஒண்ணு!

– சுமி

# குழந்தை வளர்ப்பில் கவனம் செலுத்துவது அம்மாதான்!

முன்பு சத்யா ஸ்டுடியோவாக இருந்த அந்த வளாகம் இப்போது டாக்டர் எம்.ஜி.ஆர். - ஜானகி மகளிர் கலை மற்றும் அறிவியல் கல்லூரியாக மாறிவிட்டிருக்க, அங்கு படித்த மாணவிகளில் நால்வர் உணர்ச்சிகரமாக தங்களுக்குள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

**மஞ்சுளா :** பயோடேட்டாவிலே எதற்காக அப்பாவோட பெயரை மட்டுமே கேட்கறாங்க? அம்மாவின் பெயர் தேவையில்லையா?

**ஸ்ரீதேவி :** என்னைக் கேட்டால் ஒவ்வொரு பெயருக்கு முன்னாலேயும் அப்பாவின் இனிஷியலுடன், அம்மாவின் இனிஷியலும் சேர்த்தேதான் வைக்கணும்னு சொல்வேன்.

**ப்ரியா :** எனக்கொரு சந்தேகம். பிறந்ததிலிருந்து நம்மை வளர்ப்பதில் நிறைய கவனம் செலுத்துவது அம்மாதான். ஆனால் கொஞ்சம் வளர்ந்தவுடன் பெண்கள் ஏன் அம்மாவுடன் ஏற்படும் நெருக்கத்தைக் குறைச்சுக்கறாங்க?

**ரம்யா :** பெண் குழந்தை வளர்ந்தவுடன், பெண் என்பதாலேயே கொஞ்சம் அதிகமான கட்டுப்பாடுகளை அம்மா விதிக்கறாங்க. தன் வேலைகளைத் தானே செய்யும் பழக்கத்தையும் வளர்க்க முயற்சி செய்கிறாள். போதாக் குறைக்கு அப்பா வேறு மகளின் சார்பாகப் பேசுகிறாரா, மகள் அப்பா கட்சிக்கு மாறி விடுகிறாள். ஆனால் அது கொஞ்ச காலம்தான், அப்புறம் அம்மாவோடு நெருக்கம் தொடருகிறது.

**ப்ரியா :** சமுதாயச் சூழலின் தன்மையை அம்மாதான் மகளுக்குச் சரியாக போதிக்க முடியும். காரணம் அவங்களும் அந்த கட்டத்தைத் தாண்டி வந்தவங்களாச்சே!

**ஸ்ரீதேவி :** சரியாத்தான் சொல்லியிருக்காங்க. சினிமா பாட்டிலே 'எந்தக் குழந்தையும் நல்ல குழந்தைதான் மண்ணில் பிறக்கையிலே, பின்பு நல்லவராவதும் தீயவராவதும் அன்னை வளர்ப்பதிலே'ன்னு.

**மஞ்சுளா :** அதெப்படி, சித்ராபதி தன் மகள் மாதவி தன்னைப் போலவே பிரபலமான கணிகையாகணும்னு ஆசைப்பட்டா. அது அப்படியா நிறைவேறிச்சு? ஆனால் மாதவி தன் மகள் மணிமேகலை மிக ஒழுக்கமானவளாக வளரணும்னு நினைச்சு வளர்த்தாள். அது

• ப்ரியா

• ஸ்ரீதேவி

• ரம்யா

அப்படியே பலிச்சுது.

ரம்யா : என்ன இருந்தாலும் அம்மாவுக்கு ஒரு சங்கடம்னு வரும்போது மகள் அவளை விட்டுக் கொடுக்க மாட்டா. அரசியலுக்கும் எனக்கும் சம்பந்தமில்லேன்னு சொன்ன ப்ரியங்கா இப்ப அம்மா சோனியாவுக்காக தேர்தல் பிரசாரத்தில் ஈடுபடலியா. அதே சமயம் சிசுவதை பற்றியெல்லாம் நியூஸ் படிக்கும்போது அம்மாவே பெண் குழந்தைக்கு எமனாயிடறாளேன்னு வருத்தமாயிருக்கு.

ப்ரியா : சமூக சூழலுக்கு அவங்களும் பலியாயிடறாங்கன்னுதான் சொல்லணும். இந்த நேரத்திலே பெண்களின் அறியாமையைப் போக்க பாடுபட்ட ருக்மணி லட்சுமிபதியின் நினைவு வருது. வேதாரண்ய சத்யாகிரகத்தில் ஈடுபட்டு சிறைக்கெல்லாம் போனவங்களாச்சே. அவங்களோட சேவை மனப்பான்மை அவங்க பெண், டாக்டர் இந்திராவிடமும் இருக்கு. மகளிர் மருத்துவத்திலே நல்ல பேர் எடுத்திருக்காங்க அவங்க.

இதைத் தொடர்ந்து "பிரபல அம்மா – மகள் ஜோடி" என்ற தலைப்பில் கல்கி வாசகர்களுக்காக கேள்விகளைத் தயாரிக்கத் தொடங்கினார்கள்.

* மஞ்சுளா

அருகே உள்ள கூப்பனில் கேள்விகளும் நீங்கள் 'டிக்' செய்து தேர்ந்தெடுக்க வேண்டிய பதில்கள் அடங்கிய தொகுப்பும் உள்ளன. அத்தனை கேள்விகளுக்கும் சரியான விடையை 'டிக்' செய்பவருக்கு ரூ. 200 பரிசு. பலர் செய்து விட்டால் குலுக்கல். ஜெராக்ஸ் கூப்பன் செல்லாது என்பதும் ஆசிரியர் தீர்ப்பே இறுதி என்பதும் தெரிந்த விஷயம்தானே?

கடைசி தேதி : 18.10.99

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள் : ஸ்ரீஹரி

## குவிஸ் கூப்பன் – 10

1. நடிகை காஜோலின் அம்மா இவர்.

☐ வகீதா ரஹ்மான் ☐ தனுஜா ☐ மதுபாலா

2. இவரது மகள் ஒரு மாநிலத் தலைவியாக இருந்தவர்.

☐ சத்யவதி ☐ சந்தியா ☐ பத்மாவதி

3. மேரி க்யூரியின் மகளான இவரும் நோபல் பரிசு வாங்கியவர்.

☐ ஷீபா ☐ ஐரிக ☐ க்ளாரா

4. இவரது மகள் உலகப் புகழ்பெற்ற பாடகிகளில் ஒருவர்.

☐ சண்முகவடிவு ☐ தனம்மாள் ☐ பிருந்தா

5. ஷோபனா ரவியின் மகளான இவரும் செய்தி வாசிக்கிறார்.

☐ ஸ்வேதா ☐ சௌம்யா ☐ ஐஸ்வர்யா

6. பிரபல பாடகி எம்.எல். வசந்தகுமாரியின் மகள்

☐ ஸ்ரீப்ரியா ☐ ஸ்ரீதேவி ☐ ஸ்ரீவித்யா

7. நடிகை பூஜாபேடியின் அம்மாவான இவர் வித்தியாசமான நாட்டியப் பள்ளி ஒன்றை நடத்தினார்.

☐ புஷ்பவல்லி ☐ புரோதிமா ☐ சைராபானு

8. நடிகை தேவிகாவின் மகள் இவர்.

☐ வனிதா ☐ ஐஸ்வர்யா ☐ கனகா

பெயர்: ........................................

முகவரி: ........................................

........................................

........................................

# கோலம் முதல்

தங்கள்
அன்பு மகள் திருமணத்திற்கு
சுவையான உயர்தர
சாப்பாடு டிபன்
வேளாவேளைக்கு காபி,
வைதீக ஏற்பாடுகள், பூ மாலை,
நாதஸ்வரம், பச்சபுடி சாமான்கள்,
சீர் பக்ஷணங்கள்,
தாம்பூல வகையறா,
நிச்சயதார்த்தம்
பழ தட்டுகள்,

# கூட்டு சாதம் வரை

சபைக்கு தேவையான அனைத்தும்
காண்டிராக்ட் முறையில் செய்து தர அணுகவும்

**S.R. RAGAVAN**

**SRI SAI MARRIAGE SERVICES**

35/4, TAYLOR ESTATE II ST,
KODAMBAKKAM
CHENNAI 600 024 Ph: 4840914

email: ragavan@rocketmail.Com

***We undertake Catering for smaller function also***



## "கிருஷ்ணாஸ் திவ்யகீத்" இன்னிசை மழை

பெற்றோர்கள் ராமசாமி ஐயர், அலமேலு அம்மாள். பூர்வீகம் திருவையாறு என்பதால் கிருஷ்ணனின் ரத்தத்தில் கர்நாடக சங்கீதம் ஓடிக் கொண்டிருந்தது. கோவையில் 9 வருடங்கள் கர்நாடக சங்கீதத்தைக் கற்றபின் இசைக் கச்சேரிகள் நடத்தத் தொடங்கினார் கிருஷ்ணன்.

ஒருமுறை காஞ்சி சங்கராச்சாரியார் முன்பு இசை நிகழ்ச்சி நடத்தும் அரிய வாய்ப்பை பெற்ற கிருஷ்ணன், அதற்குத் தங்கக்காசும் வெள்ளிக்காசும் பரிசாகப் பெற்றார்.

இதுமட்டுமல்லாமல் திருவையாறு தியாக பிரும்ம ஆராதனை விழாவில் தொடர்ந்து 7 வருடங்களுக்குக் கச்சேரி செய்யும் வாய்ப்பையும் பெற்றிருக்கிறார்.

சினிமாவில் பாட ஆசை பிறந்ததனால் சென்னைக்கு விஜயம் செய்த கிருஷ்ணனுக்கு சினிமா உலகத்தின் கதவுகள் உடனடியாகத் திறக்கவில்லை. ஆனாலும் சோர்ந்து போகாமல் சில நண்பர்களின் உதவியால் பிரபல காமேஷ்-ராஜாமணி குழுவில் சேர்ந்து மேடையில் பாட ஆரம்பித்தார்.

'திவ்யகீத்' என்ற தனது சொந்த இசைக் குழுவின் மூலம் உள்ளூரிலும் வெளியூரிலுமாக சுமார் 2005 இன்னிசை நிகழ்ச்சிகள் நடத்தி சாதனை புரிந்துள்ளார் இவர்.

**KRISHNA'S DIVYAGEET LIGHT MUSIC**
NO. 1, MUTHURAMAN STREET, MYLAPORE,
CHENNAI - 600 004. OPP. P.S. HIGH SCHOOL
PH: 493 5172

# Sai Kamal



**Exclusive Bengal Saree Shop at**

**price lower than Calcutta Market**

## GRAND NAVARATHRI SALE

**DISCOUNT 15%**

**1.10.99 TO 20.10.99**

தரமான, ஏராளமான பல
வகைவகையான வண்ணங்களிலும்
டிசைன்களிலும் பெங்கால்
சேலைகளை நியாயமான
விலையில் வாங்க சிறந்த ஸ்தாபனம்

- டாங்காயில்
- டாக்காய்
- புட்டி
- தொனியாகாலி
- ஜாம்தானி
- பாலுசேரி
- தரமான பிரிண்டட் காட்டன்
- முர்ஷிதாபாத் சில்க்

மற்றும் பல ரக பெங்கால் காட்டன்,
ஃபாஷன் சேலைகள், பாலி காட்டன் சேலைகள்,
கட்டிதார் துணிகள்.

**மொத்தமாகவும் சில்லறையாகவும்**

வாங்க சிறந்த இடம்.

# SAI KAMAL

MAYA'S PLAZA,
SHOP NO. 82, III FLOOR,
71, PONDY BAZAAR, T. NAGAR,
CHENNAI - 600 017. (NEAR PANAGAL PARK)
PH: 822 5065. TIME: 10.30a.m. To 8p.m.

SUNDAYS OPEN TILL DEEPAVALI

எங்களிடம் உயர்தரமான கல்கத்தா
பெட்டி கோட்ஸ் எல்லா அளவுகளிலும்,
நிறங்களிலும் கிடைக்கும்.

**JOIN OUR SAREE SAVINGS SCHEME AND GET BENEFITTED**

**CREDIT CARDS ACCEPTED**

# பள்ளிகள்; செய்திகள்



● கலைஞரின் மகள் செல்வி வருடத்திற்கொருமுறை சென்னையிலும், பெங்களூரிலும் புடைவைக் கண்காட்சி நடத்தி விற்பனையில் ஈடுபடுகிறார்.



● தேர்தல் முடிந்த கையோடு ஓய்வுக்காக ஐரோப்பா முழுவதும் குடும்பத்தோடு சுற்றுப் பயணம் செய்து விட்டுத் திரும்பியிருக்கிறார் முரசொலி மாறன்.



● தலித் எழில்மலை தொலை பேசியில் பேசும் போது, 'என் பெயர் தலித் எழில்மலை' என்று சொல்லித்தான் பேசத் துவங்குகிறார்.



● விடுதலைச் சிறுத்தை 'திருமாவளவன்' ஒரு தொகுப்பு போடுமளவுக்குக் கவிதைகள் எழுதி வைத்திருக் கிறார்.



● அடையாறு தியோசாபிகல் சொஸைட்டி வளாகத்தில் தினசரி காலையும், மாலையும் மனைவியோடு வாக்கிங் போகிறார் நெடுஞ்செழியன்.



● தோள் வலிக்காக கோயம்புத்தூரில் பதினைந்து நாள் கோட்டக்கல் ஆயுர்வேத வைத்தியம் பார்த்துக் கொண்டார் வை.கோ.

— ஆரெஸ்வி

படங்கள்: வெங்கடேஷ், சௌந்தர்ராஜன்



"சித்தவைத்தியத்திலும், ஆயுர்வேதத்திலும் கீழாநெல்லியின் திறனைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். விஞ்ஞானி என்கிற முறையில் அதற்கு மதிப்பும் மரியாதையும் செலுத்துகிறேன். சித்தா, ஆயுர்வேதத்தை மீறி நாங்கள் ஏதோ புதிய மருந்தைக் கண்டுபிடித்து விட்டதாகச் சொல்லவும் இல்லை. ஆனால் சித்தாவும், ஆயுர்வேதமும் ஒரு குறுகிய வட்டத்திலேயே இயங்கும் சூழல்தான் இன்றளவும் உள்ளது. வளர்ந்து வரும் விஞ்ஞான யுகத்தில் எந்தக் கண்டுபிடிப்புக்கும் விஞ்ஞான ரீதியில் விளக்கம் கொடுத்தால்தான் உலக அளவிலுள்ள விஞ்ஞானிகள் அதை ஒப்புக் கொள்வார்கள். அதைத்தான் நாங்கள் செய்திருக்கிறோம்."

"இந்த மாத்திரை, சித்தா - ஆயுர்வேத மருத்துவத்திலிருந்து எப்படி வேறுபட்டு நிற்கிறது எனச் சொல்ல

# மேலைநாட்டில் இடம்பெற்ற கீழாநெல்லி!

**மஞ்சள் காமாலை நோய்க்கு நம் உள்ளூர் நாட்டு வைத்தியர்கள் காலங்காலமாய்ப் பயன்படுத்தி வருவதுதான் கீழாநெல்லி மூலிகை. நீண்ட நெடுங்காலமாக இந்த மருத்துவ முறையை ஒப்புக் கொள்ளாத ஆங்கில மருத்துவம், தற்போது அதனை ஏற்றுக் கொண்டு மாத்திரை வடிவில் மருந்து கண்டுபிடித்திருக்கிறது. அண்மையில் கோவை வந்திருந்த கீழாநெல்லி மாத்திரை கண்டுபிடிப்பாளர் பேராசிரியர் டாக்டர் எஸ்.பி. தியாகராஜனிடம் பேசினோம்...**

முடியுமா?"

"தத்துவார்த்தமாகவே சித்தா - ஆயுர்வேதத்திலிருந்து இது வேறுபட்டதுதான். ஒரு வேதியியல் பொருளின் முழுமையான குணாதிசயங்களைத் தெரிந்து கொண்டு செய்வதுதான் ஆங்கில மருத்துவமுறை. கீழாநெல்லியில் என்னென்ன உட்பொருள்கள் உள்ளனவோ அவற்றை மட்டும் தனியாக எடுத்துக் கொண்டு, பாதிப்பு தரக்கூடிய பொருள்களை நீக்கிவிட்டுத் தயாரிக்கும் தயாரிப்பு முறை எங்களுடையது. இப்படி விஞ்ஞானபூர்வமாகச் செய்தால்தான் உலக அங்கீகாரத்தைப் பெற முடியும். அந்த முறையிலேயே செய்துள்ளோம்.

"1975-ல் ஆரம்பித்த ஆராய்ச்சியின் ஒரு கட்டத்தில், கீழாநெல்லி ஹெபடைடிஸ் - பி ('Hepatitis-B') வைரஸை அழித்தொழிக்கிறது என்பதை ஆராய்ச்சிபூர்வமாக நிருபித்தோம். பிறகு இதை நோயாளிக்குக் கொடுப்பதால் பக்கவிளைவுகள் ஏற்படாது என்பதையும் ஆராய்ச்சி பூர்வமாகக் காட்டினோம். இவற்றையெல்லாவும் கட்டுரைகளாக்கி இந்தியன் ஜர்னல் ஆஃப் மெடிகல் ரிசர்ச் என்கிற பதிப்பில் வெளியிட்டோம். பிறகு, எங்கள் கண்டுபிடிப்பு எந்த அளவுக்கு உண்மை? என்கிற ஆராய்ச்சியில் வெளிநாட்டவர்களும் ஈடுபட ஆரம்பித்து விட்டனர்.

ஹெபடைடிஸ் - பி வைரஸைக் கண்டு பிடித்தமைக்காக 'நோபல் பரிசு' பெற்ற விஞ்ஞானி டாக்டர் ஃபிளம்பேர்டு எங்கள் ஆராய்ச்சிக்கூடத்திற்கே வந்து விட்டார். 'ஹெபடைட்டிஸ்-பி'யால் பாதிக்கப்பட்ட வர்கள் பலரைப் பாதியாகப் பிரித்து, ஒரு பிரிவுக்குக் கீழாநெல்லி மாத்திரையையும் இன்னொரு பிரிவுக்கு சாதாரண 'பிளா ஸிபோ குரூப்' மாத்திரைகளையும் கொடுத்து, ஒரு மாதத்திற்குப் பிறகு அவர்களின் இரத் தத்தைப் பரிசோதித்தோம். கீழாநெல்லி மாத்திரை சாப்பிட்டவர்களில் 58 சதம் பேருக்கு பி-வைரஸ் சுத்தமாக மறைந்திருப் பதைக் கண்டு பாராட்டினார். இது உலக அளவில் மருத்துவ ஆராய்ச்சிகளைத் தாங்கி வரும் 'லேண்செட்' என்கிற மருத்துவ இதழில் வெளிவந்ததும் உலகமே இதில் ஆர்வம் காட்ட ஆரம்பித்தது.

''58 சதம் பேர் பயனடைந்தால் போதாது. நூறு சதம் வெற்றி பெற வேண் டும் என்று தொடர்ந்து நாங்கள் தீவிர ஆராய்ச்சி மேற்கொண்டோம். சைனா விலும், தாய்லாந்திலும் இதே போல் அங் குள்ள கீழாநெல்லியைப் பயன்படுத்தி ஆராய்ச்சி செய்து பார்த்தபோது, எங்களு டைய 'ரிசல்ட்' அவர்களுக்குக் கிடைக்க வில்லை. உடனே எங்கள் கண்டுபிடிப்பு தவறு என்றனர். பிறகு அவர்கள் சொன் னதுதான் தவறு என்பதை நிரூபிக்கவும் ஆராய்ச்சி செய்தோம்.

''பல நாடுகளிலிருந்தும் கீழாநெல்லியைக் கொண்டு வந்து பலவிதமான பரிசோத னைகளை மேற்கொண்டோம். அப்போது, சில இடங்களிலிருந்து கொண்டு வரப்பட்ட மூலிகைக்கு இந்த வைரஸ் எதிர்ப்புக் குணமே இல்லாதது தெரியவந்தது. அத னால் எந்த மாதிரியான கீழாநெல்லியை இந்த மருந்துக்கு உபயோகப்படுத்த வேண் டும் என்பதற்கும் ஓர் ஆய்வு தேவைப் பட்டது. எந்தவிதமான செடியை, எந்தக் காலகட்டத்தில் பறிக்க வேண்டும். செடியை எந்த மண்ணில் எவ்விதம் பயிரிட வேண் டும் என்பதையெல்லாம் விஞ்ஞானரீதியில் அணுகினோம். அதற்கென ஒரு தரக்கட்டுப் பாட்டுக் கொள்கையையும் உருவாக்கி னோம். அப்படி உருவாக்கி மருந்து தயாரிக் கும் முறையைத்தான் சென்னைப் பல் கலைக்கழகம் 'காப்புரிமை' செய்திருக்கிறது. சில மாதங்களில் மாத்திரைகளும் வெளிவர உள்ளது!'' என்றார்.

சந்திப்பு, படம் : **கேயெஸ்வி**

## அதிரடி அமலா!

**க**ல்யாணத்துக்குப் பின் ஹைதராபாதில், செட்டில் ஆகிவிட்ட முன்னாள் நடிகை அமலா, அண்மையில், தமது அதிரடி நடவடிக்கை ஒன்றின் மூலம் ஹைதராபாதில் பெரும் சர்ச்சைக்குள்ளாகி யிருக்கிறார். பிரச்னை இதுதான் :

இப்போது கான்சர் நோயாளிகளுக்குத் தேவை யான மருந்து ஒன்று இறக்குமதி செய்யப்பட்டு, ஆயிரத்து முந்நூறு ரூபாய்க்கு விற்கப்படுகிறது. ஆனால், இந்திய கம்பெனியொன்று, அதற்கு இணை யான மருந்து ஒன்றை உருவாக்கி, முந்நூற்று ஐம்பது ரூபாய்க்கு விற்பனை செய்யத் திட்டமிட்டது. அதன் படி, மனிதர்களுக்கு அந்த மருந்தைப் பயன்படுத்து வதற்கு முன்பாக, விலங்குகளுக்குக் கொடுத்து, பரீட்சித்துப் பார்க்கும் இறுதி கட்ட ஆராய்ச்சி நடக் கிறது. இதற்கான அரசு அனுமதியுடன், ஆராய்ச்சி



சாலையில் முப்பதது நான்கு குரங்குகள் பராமரிக்கப் பட்டு வந்தன.

சமீபத்தில் ஒருநாள், அதிரடியாக எஸ்.பி.சி.ஏ. அமைப்பினருடன் ஆராய்ச்சிக்கூடத்துக்கு வந்த அமலா, குரங்குகளை எடுத்துக் கொண்டு போய் காட்டுக்குள் விட்டு விட்டார்.

பிராணிகள் நல அமைப்பின் இந்த நடவடிக் கையின் பின்னணியில் அந்நிய நாட்டு சதி ஏதா வது இருக்கும் என்று குற்றம்சாட்டுகிறார்கள் ஆய்வுக்கூட விஞ்ஞானிகள். இந்தியாவிலேயே, கான்சர் நோயாளிகளுக்கு மருந்து தயாரிக்க ஆரம் பித்து விட்டால், அந்நிய நாட்டுக் கம்பெனிகளின் தயாரிப்பு அடிபட்டு விடும் என்பதே சதிக்குக் காரணம் என்கிறார்கள்!

- ஜூலி

# பிராந்தியம் 1

அதற்கு மண்டித் தெரு என்று பெயர். அரிசி மண்டி, பருப்பு மண்டி, வெங்காய மண்டி, வெல்ல மண்டி எல்லாம் உண்டு. ஐம்பதடி அகலத்தில் பிரம் மாண்டமான தெரு. நான்கு லாரிகள் பக்கத்தில் பக்கத் தில் நின்று சரக்குகள் ஏற்று வதும் இறக்குவதுமாக இருக் கிற சாலை. மிளகாய் நெடி, மஞ்சள் நெடி, சிகைக்காய் நெடி என்று பலசரக்கு நெடி எப்பவும் துளைத்தெடுக்கும். ஆஸ்துமாக்காரர்கள் இந்தப் பக்கமாக வந்தால் தும்மலில் சிக்கிக் கொள்வார்கள். மழை பொழிந்தால் தெருவில் கால் வைத்து நடக்க முடியாது. லட்சமும் கோடியும் சரளமாய்ப் புரளு கிற தெருவின் லட்சணம் இது மட்டுமல்ல. மனித உயிரை கொத்தி இழுக்கிற கோரப் பற்களும், இரத் தத்தை நக்கிச் சுவைக்கும் பயங்கர நாக்கும், சதை களைப் பிய்த்துப் போடுகிற கூரிய நகங்களும் கண்களுக் குத் தெரியாமல் உண்டு.

வெல்ல மண்டி பிரம் மாண்டமான பழங்காலத்து அரண்மனை. பழமை குலையாதபடி வர்ணம் கூடப் பூசப்படாத அழுக்கு வெள்ளை நிறத்திலிருக்கும். ஜமீன்தார் பரம்பரையின் மிச்சம் என்றாலும் மிடுக்குக் குறையாமல் இருக்கும் சுந்தரலிங்கம் வெல்ல மண்டியின் முதலாளி. மண்டித் தெருவைப் பொறுத்தவரையில் அவர் தான் பிரதமர், ஜனாதிபதி, முதலமைச்சர், கவர்னர், டி.எஸ்.பி. எல்லாம். வெல்லம்தான் அவர் செய்கிற வியா பாரம். ஆனால் அந்தத் தெருவில் எல்லா மண்டிக்காரர் களிடமும் அவருடைய பணம் இருக்கும். அரசு வங்கிகள் வாங்கும் வட்டியை விட குறைந்த வட்டிக்கு பணம் தருவார்.

அந்த வகையில் வெல்ல மண்டி, மண்டித் தெருவின் வங்கி மட்டுமல்ல; காவல் நிலையம், நீதிமன்றம் எல்லாம்! சமயத்தில் உல்லாச விடுதி. பிரபல சினிமா நடிகை இங்கே வந்து நடனமோ, வேறோ ஆடிவிட்டு பணம் வாங்கிக் கொண்டு போவாள்.

எந்த ஒரு உணவுப் பொருளின் விலை ஏறியிருந் தாலும் சரி, குறைந்திருந்தாலும் சரி அதற்கு மண் டித் தெருவும் காரணமாக இருக்கும். குறிப்பாக வெல்ல மண்டி காரணமாக இருக்கும். சுந்தரலிங்கம் காரணமாக இருப்பார். ஊர் உலகுக்குத் தெரியாத ரகசியம்; ஆனால் உண்மை.

ஆளுங்கட்சி எதிர்க்கட்சி இரண்டிற்கும் மட்டு மில்லை. கை, கால், வால் கட்சிகளுக்கும் இங்கி ருந்து நன்கொடை போகும். மெய்யெனில் அது நன்கொடை இல்லை. கச்சிதமாக வேலை செய்வதற்கான சம்பளம். நன்றி யோடு வாலாட்டுவதற்கான எலும்புத் துண்டு. அப்படி ஏதுமில்லாவிடில் பிச்சை.

காலம் மாறி வருவது அனைவருக்கும் தெரியும்.

காலம் மாறினாலும் மாறாதது வியா பாரம். வியாபாரம் என்கிற கொள்ளை, வியா பாரம் என்கிற மோசடி, வியாபாரம் என்கிற மாஜிக். வியாபாரிகள் இந்நாட்டின் மன்னர்கள்.

மக்களுக்குத் தேவையான எல்லாப் பொருள்களும்



## நாராயணி கண்ணகி

மண்டித் தெரு மகாராஜாக்களிடம் கிடைக்கும். நகரின் எல்லா பஜார்களிலும் மண்டித் தெரு ராஜாக்களின் கடைகள் உள்ளன.

ஆக, எவ்வளவு மாற்றங்கள் வந்து குவிந்தாலும் மண்டித் தெருவிற்கு குந்தகமில்லை. லாபம், சுபம்! லாபம், சுபம்!

வெல்லமண்டியில் இப்போது நீதி விசாரணை.

சுந்தரலிங்கம் நடுநாயகமாக உட்கார்ந்திருந்தார். மற்ற மண்டி முதலாளிகள் அவருக்கு இருபுறங்களிலும்

உட்கார்ந்திருந்தார்கள். பெரும்பாலும் கதர் அணிந்திருந்தார்கள். யாருக்கும் முறுக்கிய மீசை கிடையாது. மீசையற்று இருந்தார்கள். அல்லது அரும்பு மீசை. முரட்டுத்தனமாய் ஒருத்தரும் கிடையாது. மெலிந்திருந்தார்கள் அல்லது தொப்பை பொருத்தியிருந்தார்கள்.

வாதியும், பிரதிவாதியும் எதிரெதிரே நின்றிருந்தார்கள்.

"சும்மா நின்னா எப்படி? உங்க பிரச்னை என்ன சொல்லுங்க?" சுந்தரலிங்கம் கொடியாட்டி தொடங்கி வைத்தார்.

வாதி சொன்னான், "எதிர்த்து ஏலமே கேட்க மாட்டேங்க. அஞ்சு லட்சம் கொடுக்கட்டும்."

எதிர் ஆள் வாய் பிளந்தான். "அஞ்சு லட்சமா? வருஷமெல்லாம் வருமானமே அவ்ளோ வராது."

"அப்போ, என்னைத் தடுக்காதே. நான் ஏலம் கேட்பேன்."

"இப்படிப் பேசினா எப்படி? என் நிலைமை புரிஞ்சுக்கணும். போன வருஷ வியாபாரத்தில பத்து லட்ச ரூபா காசு வெளியே பாக்கியா நிக்குது. பிராந்திக் கடை இருந்தாத்தான் அதை வசூல் பண்ண முடியும். இல்லேன்னா நஷ்டம். அதுக்காகத் தான் இந்த வருஷமும் நானே ஏலம் கேட்கிறேன்னு சொல்றேன்."

"நான் பத்து லட்சம் கேட்கலையே... அஞ்சு லட்சம்தானே..."

"அஞ்சு லட்சம் எப்படி முடியும்?"

"எப்படின்னு என்னைக் கேட்டா... எனக்குத் தெரியாது. கொடுத்தா எனக்கு அஞ்சு லட்சம் கொடு. இல்லையா, நானும் பிராந்திக் கடை ஏலம் கேட்பேன். எத்தனை லட்சம் போனாலும் நான் எடுப்பேன். மெயின் ரோடு கடை. ராவும் பகலும் வியாபாரம் நடக்கும். நானும் பொழைக்க வேணாமா?"

"பொழைக்கிறவங்களை பொழைக்க வேணாம்னு சொன்னாங்களா? என் பொழப்புல மண்ணைப் போட்டா எப்படி?"

"நான் போடலை. போட்டிக்கு வா. என் சமர்த்துக்கு நான் ஏலம் கேக்கறேன். உன் சமர்த்துக்கு நீ கேளு."

"ரெண்டு பேரும் போட்டியா ஏலம் கேட்கலாம். கவர்மெண்ட்டு கத்துக்கும்பா. தாலாட்டுப் பாடி கவர்மெண்ட்டை இத்தனை காலம் தூங்க வைச்சிக்கினு இருக்கோம். முழிச்சுக்கும். அட இந்த கடைல இவ்ளோ வருமானமான்னு -கண்ணைத் தொறந்து பாக்க ஆரம்பிச்சிடும். அப்புறம் நீயும் பொழைக்க முடியாது. நானும் பொழைக்க முடியாது."

"சரி! அஞ்சு லட்சம் கொடுத்துரு. நானும் நீயுமே பொழைச்சுக்கலாம். கவர்மெண்ட் கண்ணுல மிளகாய்ப் பொடி தூவலாம்.

"வேணாம்பா. உன் பிடிவாதத்தை என்னால ஒண்ணும் செய்ய முடியாது. என்கிட்ட அவ்ளோ வசதியில்லை. எனக்கு பிராந்திக்கடை வேணாம். நீயே ஏலம் கேட்டு எடுத்துக்கோ. எனக்கு வெளியே கடனா நிக்கிற பத்து லட்சம் நீ கொடுத்துடு. நான் பேசாம ஆயிடறேன்."

"இது நல்லா இருக்குப்பா கதை. நான் கேட்டா அஞ்சு லட்சம் அதிகமாத் தெரியுது. நீ பத்து லட்சம் கேட்கிறே...?"

"நீ அஞ்சு லட்சம் கேட்கிறது சும்மா. நான் பத்து லட்சம் கேட்கிறது என் பணம், வெளியே கடனா நிக்கிற என் பணம். நான் மறுபடியும் கடை நடத்தினாத்தான் அது வசூலாகும். இல்லேன்னா இல்லை."

"வேணாம். ரெண்டு பேரும் ஏலம் கேட்கலாம்."

– இப்படி சண்டைப் போட்டுக் கொள்வது வேறு யாருமல்ல அண்ணன் தம்பிகள். சித்தப்பா பையன், பெரியப்பா பையன். பங்காளிகள்.

இத்தனை வருடமும் அண்ணன் கையில் தான் இருந்தது பிராந்திக்கடை.

இப்போது தம்பியும் வந்து நிற்கிறேன் என்கிறான்.

இந்த ஏரியா கடை இந்த மண்டிக்காரருக்குத்தான் என்று கவர்மெண்ட் ஏலம் விடுவதற்கு முன்னதாகவே வெல்ல மண்டியில் உட்கார்ந்து பேசி முடிப்பார்கள். ஏலம் போட்டி வந்தாலும் மண்டிக்காரர்களுக்குள்தான் வர வேண்டும். அதுவும் குறிப்பிட்ட தொகைக்குள்தான் வர வேண்டும்.



***"ஆபீசரோட மனைவி இவரை கண்ட்ரோல்ல வைச்சு நல்லா விரட்டறாங்க..."***

***"எப்படிச் சொல்றே?"***

***"ஒரு மணி நேரத்துக்கு ஒரு தடவை போன் பண்ணி எவ்வளவு "சம்திங்" கலெக்‌ஷன் ஆகியிருக்குன்னு மிரட்டறாங்களே!"***

***– சரோஜா கிருஷ்ணமூர்த்தி***

சில போட்டிகள் ஏற்படாமல் வெல்ல மண்டியிலேயே தீர்க்கப்படும்.

அண்ணனுக்கு போட்டியாக தம்பியைத் தூண்டி விட்டது, வெல்லமண்டி சுந்தரலிங்கம்.

தீர்ப்பு சொல்லப் போவதும் வெல்ல மண்டி சுந்தரலிங்கம்.

"மண்டிக்குள்ள வந்துட்டு நாலு மண்டிக் காரங்கள நடாம்மத்தில உட்கார வைச்சிட்டு, நீங்களே பேசிட்டிருந்தா எப்படி?" அண்ணன், தம்பிகளைப் பார்த்து சுந்தரலிங்கம் கேட்டார்.

பேச விட்டதும் அவர்தான். பேசிக் கொண்டிருந்தால் எப்படி என்று கேட்பதும் அவர்தான்.

"சரி! நீங்களே தீர்ப்புச் சொல்லுங்க!" பெரியவன் சொன்னான்.

"என்னப்பா ஒருத்தன் வாயில இருந்துதான் வருது. இன்னொருத்தன் கம்முனு இருக்கானே..."

"சொல்லுங்க மாமா. உங்க பேச்சைத் தட்டுவேனா?" சின்னவனும் சொன்னான்.

சுந்தரலிங்கம் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். "நாங்க என்ன ஒர வஞ்சனையா செய்யப் போறோம்? ரெண்டு பேருக்கும் பொதுவுல தீர்ப்பு வழங்கப் போறோம். இந்த மாதிரி கேஸை எடுத்து கோர்ட்டுக்கா போவ முடியும்? வெல்ல மண்டிக்குத்தான் வர முடியும். வந்துட்டீங்க, நல்லது. கோர்ட்டு மாதிரிதான் வெல்ல மண்டின்னு உங்களுக்குப் புரியவைக்க வேண்டியதில்லை. கோர்ட்டு தீர்ப்பு எப்படியோ அப்படித்தான் இங்கேயும். தீர்ப்பை மதிக்கணும். கோர்ட்டுல வேணும்னா கீழ் கோர்ட்டு மேல் கோர்ட்டுன்னு இருக்கும். இங்கே கிடையாது. ஒரே கோர்ட்டு, ஒரே தீர்ப்பு. அதை மதிக்கணும். மதிப்பீங்களா?"

"மதிக்கிறேன்" பெரியவன் சொன்னான்.

"என்னப்பா நீ சும்மா இருக்கே?"

"நானும் மதிக்கிறேன் மாமா."

"சரி! முறிப்பணம் கட்டுங்க."

"எவ்ளோங்க?"

"கேஸ் பெரிசில்லையா, ஆளுக்கு இருபத்தைஞ்சாயிரம்."

"நான் கொண்டாரலியே மாமா."

"நான் தர்றேன் வை. வீட்டுக்குப் போய் கொண்டாந்து அப்புறம் தந்துடுவே."

வெல்லமண்டி இரும்புப் பெட்டியிலிருந்து சின்னவனுக்கு இருபத்தைஞ்சாயிரம் தந்தார். பெரியவன் அவனே கொண்டு வந்திருந்த பணத்தை வைத்தான்.

ஐம்பதாயிரம் ரூபாய் அனைவருக்கும் மத்தியில் வைக்கப்பட்டது.

பஞ்சாயத்து முடிவடைந்ததும் பஞ்சாயத்தில் கலந்து கொண்ட அனைவரும் பங்கு பிரித்துக் கொள்வார்கள்.

லாபம், சுபம்!

"தீர்ப்புக்குக் கட்டுப்படறீங்களா?"

"தீர்ப்புக்குக் கட்டுப்படறோம்."

"தீர்ப்புக்குக் கட்டுப்படறோம்."

"கட்டுபடலைன்னாலும் எங்களுக்குக் கவலையில்லை. கட்டுப்படாதவங்களுக்கு என்ன நடக்கும் தெரியுமா? மண்டித்தெரு இனிமே அவங்களைக் கண்டுக்காது. அவங்களோட எந்தப் பிரச்னைக்கும் உதவி பண்ணாது. அர்ஜென்ட்டுக்கு யாரும் சல்லி காசு உதவி பண்ண மாட்டாங்க. எவனா அடிக்க வந்தா, கும்பலா வந்து எதிர்த்து நிக்காது. போலீஸ் பிரச்னை, ரெய்டு பிரச்னை, ரௌடி பிரச்னை எதுவும் கண்டுக்காது."

அவர்களுக்குத் தெரியாதா, போலீஸ், கலெக்டர், ரௌடி எல்லாமே வெல்ல மண்டி கட்டுப்பாட்டில் என்று.

"தீர்ப்புக்குக் கட்டுப்படறேன்."

"தீர்ப்புக்குக் கட்டுப்படறேன்."

மீண்டும் சொன்னார்கள்.

சுந்தரலிங்கம் தீர்ப்புச் சொன்னார்.

"ரெண்டு பேர் பக்கத்துலயும் நியாயம் இருக்கு. யாரானாலும் பிராந்திக் கடை ஏலம் எடுக்கலாம்னுதான் கவர்மெண்ட் ஏலமே விடுது. இதுல யாரையும் ஏலம் கேட்கக் கூடாதுன்னு சொல்ல முடியாது. ரெண்டு பேரும் பங்காளிகளா வேற இருக்கீங்க. நீங்க ரெண்டு பேரும் ஒரு தாய் வயித்துல பிறக்கலைன்னாலும், உங்களோட அப்பன்கள் ஒரு வயித்துல பொறந்தவங்க. எங்க கண்ணு முன்னாடி ஒத்துமை குலையாம வாழ்ந்தவங்க. கிளை வெவ்வேறுன்னாலும் மரம் ஒண்ணு. ரெண்டு கிளைல எந்தக் கிளையை நாங்க வெட்ட முடியும்? பசேல்னு இருந்தாத்தான் பாக்கறதுக்கு அழகு. எந்தக் கிளையை




"முழுக்க முழுக்க போலீஸ்காரர்களுக்காக ஒரு தினசரி பத்திரிகை தொடங்கப் போறேன்!"

"என்ன பேர்?"

"தினத் 'தொந்தி!'"

– செ.க. புதூர் குமார்

வெட்டினாலும் மரத்துக்குத்தான் கேடு. உங்கள்ல யாருக்குத் துரோகம் பண்ணாலும் அது உங்க அப்பன்களுக்குப் பண்ற துரோகம். நம்ம தெய்வங்களுக்குப் பண்ற துரோகம். என்னய்யா சொல்றது?" தீர்ப்பிற்கு முன்னதாக உரை வீசிக் கேட்டார் வெல்ல மண்டி.

மிளகாய் மண்டியும், புளி மண்டியும், வெங்காய மண்டியும் அரிசி மண்டியும் 'ஆமா, ஆமா' என்றது.

"தீர்ப்புச் சொல்லட்டுமா?"

"சொல்லிருங்க."

"பெரியவன் பிராந்திக் கடைல பொழைச்சி வந்தவன். பத்து லட்ச ரூபா பாக்கி நிக்குதுன்னு சொல்றான். மறுபடியும் கடை எடுத்தாத்தான் பாக்கி வசூலாகும். அதனால கடை அவன்தான் எடுக்கணும்."




"ஆபீசுக்கு வந்ததிலிருந்து ஒரு வேலையும் செய்யாம இருக்கார். கேட்டால் இன்னும் போணியாகலை என்று சொல்றாரே... என்ன அர்த்தம்?"
"இன்னும் முதல் லஞ்சம் வரலைனு அர்த்தம்."

– அம்பை தேவா

"ஆமா."

"சின்னவன் நானும் பொழைக்கணுமே. கடை எடுக்கறேன். எவ்ளோ போனாலும் பிராந்திக்கடை எடுக்கறேன். இல்லேன்னா அஞ்சு லட்சம் தந்துடுங்கறான். அதுதான் இப்போ பிரச்னை."

"ஆமா!"

"நாம என்ன சொல்றோம்னா... என்னதான் இருந்தாலும் அஞ்சு லட்சம் அதிகம் தான். சுத்தமா கொடுக்க முடியாதுன்னும் சொல்ல முடியாது."

"ஆமா!"

"மூணு லட்சம் கொடுக்கச் சொல்லிடலாமா?"

"அதுதான் கரெக்ட். நாங்களும் அதுதான் நெனைச்சோம்."

இவர்கள் எங்கே சுயமாக நினைப்பார்கள். வெல்லமண்டி சொல்வதற்கு தலையாட்டுபவர்கள்தானே...

"அவ்ளோதாம்பா. எல்லோரும் சரின்னிட்டாங்க. மூணு லட்சம் கொடுத்துடு."

தீர்ப்புக் கிடைத்து விட்டது.

எந்தவிதமான உழைப்போ, முதலீடோ இல்லாமல் மூன்று லட்சம் வருமானம்.

மூன்றில் ஒரு பங்கு 33 சதவீதம் வெல்ல மண்டி கல்லாப்பெட்டிக்கு வந்து விடும் என்பது உள் விவகாரம்.

இப்படிப் பிரச்னை வெல்லமண்டியில் தீர்ந்து விட்டது என்றுதான் நினைத்தார்கள்.

அண்ணன் ஏலம் கேட்கப் போனபோது, எதிர்த்துக் கேட்க தம்பி வரவில்லை. ஆனால் எம்.எல்.ஏ. சங்கரன் கொடுத்த தைரியத்தில் வேறு ஆள் ஏலம் கேட்க வந்தான்.

எம்.ஏ. படித்து விட்டு வேலை கிடைக்காமல், எல்.எல்.பி. படித்து விட்டு வழக்கறிஞராய் இருப்பவரிடம் குமாஸ்தாவாக இருந்த இளைஞன் எதிர்த்து பிராந்திக்கடை ஏலம் கேட்டான்.

நாலு லட்சங்களுக்கு ஏலம் போகாத கடை, பதினைந்து லட்சங்களுக்கு எகிறி விட்டது.

மண்டித்தெரு சிவந்தது.

தேசத்தை உலுக்குகிற பிசாசு சக்தி தங்களுக்கிருப்பதை வெளிக்காட்ட முனைந்தது.

வெல்லமண்டியில் ஊதுபத்தி புகையச் செய்தார்கள்.

மீண்டும் கூடினார்கள்.

ஒரு கடை இல்லை. நகரில் மொத்தம் பதினேழு கடைகள். பதினேழும் மண்டித் தெருவின் கைகளுக்கு வராமல் போய் விட்டது.

கை மாறி விட்டது.

மாற்றம் நிகழ்ந்து விட்டது.

மண்டித்தெரு மகாராஜாக்களின் முதுகை ஒடிக்கிற மாற்றம். அனாயாசமாய் வில்லைத் தூக்கி உடைக்கிற இராமன், நாடாள வந்து விடக்கூடாது. அவனை காட்டிற்கு அனுப்ப வேண்டும்.

"ஆட்சி கலையும்னு எதிர்பார்த்தோம். நடக்காது போலிருக்கே... நம்ம தொகுதி எம்.எல்.ஏ. சங்கரனை மட்டும் எப்படியாவது வீட்டுக்கு அனுப்பணும்."

"அதெப்படிங்க முடியும்? சங்கரனோட எம்.எல்.ஏ. பதவியை மட்டும் எப்படிப் பறிக்க முடியும்? ஆட்சியைத்தான் கலைக்கணும்."

வெல்லமண்டி சுந்தரலிங்கம் கன்னத்தைத் தடவினார்.

"முடிக்கணும்" என்றார்.

*(தொடரும்)*

# பொன்னியின் செல்வன்

## நாற்பத்தியொன்றாம் அத்தியாயம்

## மதுராந்தகன் நன்றி

முதன்மந்திரியின் கரம் மதுராந்தகன் மேல் பட்டதும் அவன் அலறினான்.

"ஐயோ! அப்பா! செத்தேன்! என்னைத் தொட வேண்டாம். என் கால்கள்! போச்சு! போச்சு!" என்று கூவினான்.

அநிருத்தர் அவனைத் தூக்குவதை நிறுத்திவிட்டு, "இளவரசே! தங்களுக்கு என்ன நேர்ந்தது? தங்கள் கால்களுக்கு என்ன நேரிட்டது?" என்று கவலையுடன் கேட்டார்.

"என் கால்கள் முறிந்தே போய்விட்டன. நடக்க முடியவில்லை; நிற்கவும் முடியவில்லை!"

முதன்மந்திரி திரும்பிப் பார்த்து, "அடே! பல்லக்கை இவ்விடம் கொண்டு வாருங்கள்!" என்று தம் ஆட்களுக்குக் கட்டளையிட்டார்.

பின்னர், "ஐயா! இந்த விபத்து எப்படி நேர்ந்தது? தாங்கள் மழையில் தனியாய்க் கிடக்கும் காரணம் என்ன? தங்களோடு வந்த பரிவாரங்கள் எங்கே? தங்களை இவ்விதம் விட்டு விட்டு அவர்கள் எப்படிப் போகத் துணிந்தார்கள்? அவர்களுக்கு என்ன தண்டனை விதித்தாலும் போதாதே!" என்றார்.

"முதன்மந்திரி! யாரையும் தண்டிக்க வேண்டாம்! யார் பேரிலும் குற்றம் இல்லை. மாலை நேரத்தில் குதிரை மேல் ஏறிக்கொண்டு நான்

தான் தனியாகக் கிளம்பினேன். நதிக் கரையோரமாகப் போய்க் கொண்டிருந்தேன். திடீரென்று மழை பிடித்துக்கொண்டது. ஒரு பெரிய இடி இடித்து மின்னல் மின்னியது. குதிரை மிரண்டு ஓடியது. நான் இந்த மரத்தின் கிளையில் சிக்கிக்கொண்டு கீழே விழுந்து விட்டேன். குதிரை எங் கேயோ போய்விட்டது. விழுந்த வேகத்தில் கால் முறிந்து விட்டதோ அல்லது சுளுக்கிக் கொண்டு விட் டதோ தெரியவில்லை. எழுந்து நிற்கவும் முடியவில்லை. நல்ல வேளையாகத் தாங்கள் இச்சமயம் இங்கு வந்தீர்கள்!''

''ஏதோ தங்களுடைய தந்தை, மகானாகிய கண்டராதித்த தேவர் செய்த புண்ணியந்தான், இந்த மட் டும் நான் இங்கே வரும்படி நேர்ந் தது! கொஞ்சம் பல்லைக் கடித்துக் கொண்டு பொறுத்திருங்கள். பல்லக்கில் தங்களை ஏற்றி விடு கிறேன். மற்ற விவரங்கள் எல்லாம் நாதன் கோவிலில் அடியேனின் இல் லத்துக்குப் போன பிறகு கேட்டுத் தெரிந்துகொள்கிறேன்'' என்றார் அநிருத்தர்.

பல்லக்கு அருகில் கொண்டு வந்து இறக்கப்பட்டதும் முதன்மந்திரி இளவரசரை மெதுவாகப் பிடித்துத் தூக்கிப் பல்லக்கினுள் கிடத்தினார்.

ஆட்களிடம், பல்லக்கைத் தூக்கிக்கொண்டு மெள்ள மெள்ள அசங்காமல் போக வேண்டும் என்று கட்டளையிட்டார். தாமும் பல்லக்கின் அருகிலேயே தொடர்ந்தாற் போல் நடந்து சென்றார்.

சிறிது நேரத்துக்கெல்லாம் நாதன் கோவில் என்று வழங்கிய சுந்தர சோழ விண்ணகரத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். அந்த ஊர்ப் பெருமான் கோயிலுக்கு அருகில் முதன்மந்திரி அநிருத்தரின் மாளிகை ஒன்று இருந்தது. அதற்குள் இளவரசர் மதுராந்தகரைத் தூக்கிச் சென்று அங்கிருந்த கட்டிலில் கிடத்தினார்கள்.

விளக்கு வெளிச்சம் கொண்டு வரச் சொல்லிப் பார்த்ததில் கால் முறியவில்லையென்றும் வெறும் சுளுக்குத்தான் என்றும் தெரிந்தது.

இளவரசர் கொண்டிருந்த பீதி யும் சிறிது தெளிந் தது.

பெருமான் கோவிலிலிருந்து

அமரர் கல்கி

வந்த பிரசாதங்களை இருவரும் அருந்தினார்கள்.

பின்னர் முதன்மந்திரி, "இளவரசே! இனி இரவு நிம்மதியாகத் தூங்குங்கள்! பொழுது விடிந்ததும் தங்கள் உசிதம் எப்படியோ அப்படிச் செய்யலாம். நான் தஞ்சைக்குத்தான் போகிறேன். என்னுடன் வருவதாயிருந்தால், தங்களைப் பத்திரமாய்க் கொண்டு போய்ச் சேர்ப்பிக்கிறேன்'' என்றார்.

''ஐயா! தாங்கள் எனக்கு எவ்வளவோ தீங்கு செய்திருக்கிறீர்கள். அதற்கெல்லாம் பரிகாரம் இன்று செய்துவிட்டீர்கள். இன்று எனக்குச் செய்த உதவியை என்றும் மறக்க மாட்டேன். அதற்கு எப்போதும் நன்றி செலுத்துவேன். ஒருவேளை இந்தச் சோழ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்தில் நான் அமரும்படி நேர்ந்தால் தங்களையே முதன்மந்திரியாக வைத்துக் கொள்வேன்!'' என்றான் மதுராந்தகன்.

அநிருத்தர் அதிசயக் கடலில் முழுகிப் போனதாகப் பாவனை செய்து, "இளவரசே! சோழ குலத்துக்கு நான் கடமைப்பட்டவன். இந்தக் குலத்தைச் சேர்ந்தவர்களுக்கெல்லாம் ஆலோசனை சொல்வதும் இயன்ற உதவி செய்வதும் என் கடமை. ஆகையால் தாங்கள் தனிப்பட எனக்கு நன்றி செலுத்த அவசியமில்லை. ஆனால் தங்களுக்கு நான் ஏதோ தீங்கு செய்திருப்பதாகச் சொன்னீர்களே! அதுதான் எனக்கு விளங்கவில்லை. நான் தங்களுக்கு மனமறிந்து எந்தத் தீங்கும் செய்ததாக ஞாபகமில்லை. தாங்கள் சற்றுப் பெரிய மனது செய்து தெரியப்படுத்தினால் அதற்குப் பிராயச்சித்தம் என்ன உண்டோ அதைச் செய்து விடலாம்!'' என்றார்.

"ஐயா! அநிருத்தரே! தாங்கள் மகா கெட்டிக்காரர், அறிவாளி, இராஜதந்திர நிபுணர் என்பதெல்லாம் உலகமறிந்த விஷயம். ஆனால் தங்கள் கெட்டிக்காரத்தனத்தை என்னிடம் காட்ட வேண்டாம். தாங்கள் எனக்குச் செய்திருக்கும் தீங்கு எவ்வளவு கொடுமையானது என்பது எனக்குத் தெரியாது என்றும் எண்ண வேண்டாம். ஆனாலும் இன்று தாங்கள் எனக்குச் செய்த உதவியை முன்னிட்டு அதையெல்லாம் மறந்து விடப் போகிறேன். என்னுடைய நன்றியைத் தங்களுக்கு எந்த விதத்தில் தெரியப்படுத்தலாம் என்று சொல்லுங்கள். ஏதாவது பிரதி உபகாரம் செய்யக் கூடியது இருந்தால் கூறுங்கள்!''

அநிருத்தர் புன்னகை புரிந்து, ''ஆம், இளவரசே! தங்கள் நன்றியைச் செலுத்த வழி ஒன்று இருக்கிறது. தங்களிடம் இந்தக் கிழவன் கோர வேண்டிய வரம் ஒன்று இருக்கிறது. இனி இம்மாதிரி குதிரை ஏறித் தனி வழியே கிளம்ப வேண்டாம். முன்னும் பின்னும் பரிவாரங்கள் சூழ ரதத்தில் பிரயாணம் செய்யுங்கள். அதைவிடப் பல்லக்கில் பிரயாணம் செய்வது நலம். காலம் கெட்டிருக்கிறது. பல காரணங்களினால் மக்கள் மனக் கொதிப்பு அடைந்திருக்கிறார்கள். இன்றைக்குப் பழையாறையில் பார்த்தீர்களே! ஆகையால் திறந்த பல்லக்கில் பிரயாணம் செய்வதைக் காட்டிலும் மூடு பல்லக்கில் பிரயாணம் செய்வது இன்னும் நல்லது. பழுவூர் இளைய ராணியின் பல்லக்காக இருந்தால் ரொம்ப விசேஷமாயிருக்கும். யாரும் சந்தேகிக்கவே மாட்டார்கள்!'' என்றார்.

மதுராந்தகன் அசந்து போனான். அவன் முகத்தில் மறுபடியும் பயத்தின் அறிகுறி காணப்பட்டது. சற்றுப் பொறுத்துச் சமாளித்துக்கொண்டு, ''முதன்மந்திரி! என்ன வார்த்தை சொன்னீர்! பழுவூர் இளையராணியின் மூடு பல்லக்கில் என்னைப் பிரயாணம் செய்யச் சொல்வதின் கருத்து என்ன? என்னை அவமானப்படுத்துவது உமது நோக்கமா...?''என்றான்.

"இளவரசே! பழுவூர் ராணியின் பல்லக்கில் பிரயாணம் செய்வதைத் தாங்கள் அவமானமாகக் கருதுவதை நான் அறியேன். எப்போதிருந்து இந்த

எண்ணம் தங்களுக்கு உண்டாயிற்று? முன்னேயெல்லாம் அடிக்கடி தாங்கள் அவ்விதம் போய்க் கொண்டிருப்பது வழக்கமாயிருந்ததே? கடைசியாக, கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்குப் போய்த் திரும்பிய பிறகு இந்த நல்ல முடிவுக்குத் தாங்கள் வந்திருக்க வேண்டும்...''

மதுராந்தகன் மேலும் திகில் கொண்டான். அவன் முகத்தில் பயப்பிராந்தியின் சாயல் பரவிற்று.





“முதன்மந்திரி! கடம்பூர் மாளிகைக்கு நான்... நான்....” என்று தடுமாற்றத்துடன் ஏதோ சொல்லுவதற்கு ஆரம்பித்தான்.

“இளவரசே! கடம்பூர் மாளிகைக்குத் தாங்கள் ஆடி மாதம் பதினெட்டாம் பெருக்கு அன்று தனாதிகாரி பெரிய பழுவேட்டரையருடன் போயிருந்தீர்கள் அல்லவா? அதைத்தான் சொல்கிறேன். அப்போது தாங்கள் இளையராணியின் பல்லக்கிலே போய் விட்டுத் திரும்பினீர்கள். அது எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லைதான். பல்லக்குப் பிரயாணம் என்னைப் போன்ற கிழவர்களுக்கு உகந்தது. தங்களைப் போன்ற இளைஞர்கள் யானை மீதோ குதிரை மீதோ பிரயாணம் செய்வதுதான் உசிதம். ஆனால் குதிரைப் பிரயாணத்துக்குத் தகுந்த பயிற்சி வேண்டும். தங்களுக்கு உடம்பு சரியானதும் நானே அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்கிறேன்...”

“அன்பில் அநிருத்தரே! ஜாக்கிரதை! மேலும் மேலும் என்னை அவமானப் படுத்தும் வார்த்தைகளைச் சொல்லுகிறீர். இன்றைக்கு ஏதோ இந்த அசந்தர்ப்பம் நேரிட்டு விட்டபடியால் எனக்குக் குதிரை ஏற்றமே தெரியாது

என்று முடிவு கட்டி விட்டீர். ஏதோ ஒருசமயம் பல்லக்கில் சென்றபடியால் எப்போதும் பழுவூர் ராணியின் மூடு பல்லக்கில் நான் போவதாகச் சொல்லுகிறீர். உம்முடைய பிராயத்தையும் இன்றைக்கு நீர் எனக்குச் செய்த உதவியையும் நினைத்துப் பொறுத்தேன்...''

''இளவரசே! தங்களுடைய பொறுமை எனக்கு மிக்க மகிழ்ச்சி தருகிறது. 'பொறுத்தார் பூமி ஆள்வார்' என்பது முதுமொழி. தமிழகத்தின் மாபெரும் புலவர் என்ன கூறுகிறார்?

'அகழ்வாரைத் தாங்கும் நிலம்
போலத் தம்மை
இகழ்வாரைப் பொறுத்தல் தலை.'

நிலம் தன்னைத் தோண்டுகிறவர்களைப் பொறுத்துக் கொண்டிருக்கிறது. பொறுத்துக் கொள்வது மட்டுமா? தோண்டுகிறவர்களுக்குத் தூய தண்ணீரையும் அளித்து உதவுகிறது. பூமிக்கு உள்ள இந்தக் குணம் பூமியை ஆள நினைப்பவர்களுக்கும் இருக்க வேண்டும். என்னைப் போன்ற கிழவன் ஏதாவது அனுசிதமாகச் சொன்னாலும் பூமி ஆள விரும்பும் தாங்கள் பொறுத்துக் கொள்ளுவதுதான் உசிதம்.''

''ஐயா! என்ன சொல்கிறீர்? நான் இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஆள விரும்புவதாகக் குற்றம் சாட்டுகிறீரா?'' என்று கேட்டான் மதுராந்தகன். அவனுடைய உதடுகள் துடித்தன. புருவங்கள் நெரிந்தன. பயம் கோபமாகவும் ஆத்திரமாகவும் மாறி வந்ததென்பதற்கு அறிகுறிகள் தென்பட்டன.

ஆனால் முதன்மந்திரியோ சிறிதும் பதற்றமில்லாமல், ''இளவரசே! குற்றம் சாட்டுகிறேன் என்று ஏன் சொல்லுகிறீர்கள்? தாங்கள் இந்தச் சோழ சாம்ராஜ்யத்தை ஆள விரும்பினால், அது எப்படிக் குற்றமாகும்? வீராதி வீரரான விஜயாலய சோழரின் குலத்தில் உதித்தவர் தாங்கள். மகானாகிய சிவஞான கண்டராதித்தரின் திருப்புதல்வர். இந்தச் சோழ சிம்மாசனம் ஏறுவதற்குத் தங்களுக்கு உரிமை உண்டு. அதைத் தாங்கள் விரும்புவது எப்படி குற்றம் ஆகும்? அது குற்றம் என்றும், ஆகையால் அதற்காக இரகசியமான சதி முயற்சிகளில் ஈடுபட வேண்டும் என்றும் யாராவது தங்களுக்கு யோசனை சொன்னால் அதைத் தாங்கள் நம்ப வேண்டாம். இளவரசே! இந்தக் கிழவனுடைய வார்த்தையைக் கொஞ்சம் செவி சாய்த்துக் கேளுங்கள். தங்களுடைய பெற்றோர்களின் விருப்பம் ஒருவிதமாயிருந்தது. தாங்களும் அதற்கு இணங்கிச் சிவபக்தியில் ஈடுபட்டிருந்தீர்கள். இப்போது தங்கள் மனம் மாறியிருக்கிறது. அதைப் பற்றிக் குற்றம் கூற யாருக்கும் பாத்தியதை இல்லை. தங்களுடைய உரிமையைத் தாங்கள் பகிரங்கமாகக் கோரலாம். சக்கரவர்த்தியிடமே தங்கள் விருப்பத்தைத் தெரியப்படுத்தலாம். அதை விடுத்து, கேவலம் காளாமுகக் கூட்டத்தாரின் ஆதரவைக் கோருவதற்காக அமாவாசை இருட்டில் தன்னந்தனியாகக் கொள்ளிடக் கரைக்குப் போக வேண்டிய அவசியமில்லை. அல்லது சம்புவரையர் மாளிகையில் அர்த்த ராத்திரியில் திருடர் கூட்டத்தைப் போல் கூட்டம் போட்டுச் சதிப் பேச்சுப் பேச வேண்டிய அவசியமும் இல்லை. இந்த மாதிரியெல்லாம் தங்களுக்கு யோசனை கூறுகிறவர்கள் தங்களுடைய பரம விரோதிகள் என்று வைத்துக் கொள்ளுங்கள்!''

மதுராந்தகன் பெருங் குழப்பத்துக்கு உள்ளானான். முதன்மந்திரிக்கு இவ்வளவு விஷயங்களும் தெரிந்திருக்கின்றன என்று எண்ணியபோது அவனுக்கு உண்டான வியப்புக்கு அளவில்லை. அதேசமயத்தில் பீதி ஒரு பக்கமும், பீதி காரணமான ஆத்திரம் ஒரு பக்கமும் பெருகிக் கொண்டிருந்தன.

''ஐயா! தங்களுக்கு இவையெல்லாம் எப்படித் தெரிந்தது? எந்தத் துரோகி என்னுடனும் சிநேகமாயிருப்பது போல் நடித்துக்கொண்டு தங்களிடமும் வந்து

சொல்லிக்கொண்டிருக்கிறான்?" என்று கேட்டான்.

"தாங்கள் அதை அறிய முயல்வதில் பயனில்லை. இந்தப் பரந்த இராஜ்ய மெங்கும் எனக்குக் கண்கள் இருக் கின்றன; காதுகளுமிருக்கின்றன. நான் அறியாமல் எதுவும் இந்நாட்டில் நடைபெற முடியாது..."

"அப்படியானால், சக்கரவர்த்திக்கும் இவையெல்லாம் தெரியுமா?" என்று மதுராந்தகன் கேட்டான்.

"இல்லை; அவருக்குத் தெரியாது. என் கண்களும் காதுகளும் தெரிவிக்கும் எத்தனையோ இரகசியங்கள் என் நெஞ்சகத்தில் பதிந்து கிடக்கின்றன. அவசியமும் அவசரமும் நேர்ந்தால் ஒழிய அவை வெளியில் வரவே வரா..."

"ஆம். ஆம்; தங்களுடைய நெஞ் சகத்தில் எவ்வளவோ பயங்கரமான இரகசியங்கள் புதைந்து கிடக்கின்றன. அவை மட்டும் வெளியில் வந்தால், இந்தச் சோழ சாம்ராஜ்யமே நடுநடுங் கிப் போகாதா?" என்றான் மதுராந் தகன். அவனுடைய குரலில் இப்போது இதற்குமுன் இல்லாத கபடமும் வஞ்ச கமும் தொனித்தன.

முதன்மந்திரி அதைக் கவனித்தும் கவனியாதவர் போல் கூறினார்: – "சக் கரவர்த்தி என்னுடைய ஆப்த நண்பர். ஆனால் அவர் அறியாத இரகசியங் களும் என் நெஞ்சில் இருக்கின்றன. சுந்தர சோழர் கொடிய நோய்வாய்ப் பட்டிருக்கிறார். பல காரணங்களினால் அவர் மனம் ஏற்கெனவே புண்ணாகி யிருக்கிறது. சிற்றரசர்களின் சதிச் செயலைப் பற்றி அவரிடம் சொல்லி மேலும் அவர் நெஞ்சை புண்படுத்த நான் விரும்பவில்லை. அதற்கு அவசி யமும் ஏற்படவில்லை. இளவரசே! தங்களுடைய காரியங்களைப் பற்றிய வரையில், நான் சக்கரவர்த்தியிடம் ஒரு நாளும் சொல்ல மாட்டேன் என்று தாங்கள் நம்பியிருக்கலாம்."

"ஐயா! அன்பில் அநிருத்தரே! இந்தப் பேதை மதுராந்தகன் பேரில் தங்களுக்கு திடீரென்று இவ்வளவு அபிமானம் தோன்றக் காரணம் என்ன?" என்று மதுராந்தகன் கேட்டு விட்டு ஏளனச் சிரிப்புச் சிரித்தான்.

"இளவரசே! தங்களிடம் திடீரென்று எனக்கு அபிமானம் பிறந்து விட வில்லை. சுந்தர சோழரின் புதல்வர் களைப் போலவேதான் தங்களிடமும் நான் எப்போதும் அபிமானம் வைத்து வந்திருக்கிறேன். அதைக் காட்டிக் கொள்வதற்கு இதற்கு முன்னால் சந்தர்ப்பம் ஏற்படவில்லை..."

"இன்றைக்கு அச்சந்தர்ப்பம் கிடைத்தது; நான் குதிரை மேலிருந்து விழுந்து காலை ஒடித்துக்கொண்டதால் ஏற்பட்டது. ஆனாலும் சில நாளைக்கு முன்னாலேயென்றால், என்னை அந்த மரத்தடியிலேயே கழுத்தை நெரித்துக் கொன்றுவிட்டு வந்திருப்பீர்..."

"நாராயணா! நாராயணா! இது என்ன வார்த்தை, இளவரசே!"

"ஐயா! எனக்கு ஒன்றும் தெரியாது என்று எண்ண வேண்டாம். எதைச் சொன்னாலும் நம்பக் கூடிய அப்பாவி என்று நினைக்க வேண்டாம். நான் என் தாயாரின் கர்ப்பத்தில் இருந்தபோதே எனக்கு எதிராக நீர் சதி செய்யத் தொடங்கினீர். நான் இந்தப் பூமியில் பிறந்ததும் என்னைக் கொன்று விடு வதற்கு ஏற்பாடு செய்திருந்தீர்... அதோ உம்முடைய முகத்தில் ஆச்சரியத்தின் அறிகுறியைக் காண்கிறேன். அதெல் லாம் எனக்கு எப்படித் தெரிந்தது என்று வியப்படைகிறீர், இல்லையா? இந்தச் சோழ நாட்டில் பயங்கர இரகசியங்கள் பலவற்றை அறிந்தவர் நீர் ஒருவர்தான் என்று எண்ண வேண்டாம்!"

அநிருத்தரின் முகம் இப் போது உண்மையாகவே அதிசயமான காட்சி அளித்தது. அதில் கணத் துக்கு ஒரு சாயல் தோன்றி மறைந்தது. கடைசியில் வருந்தி வருவித்துக் கொண்ட புன்னகையுடன் முதன் மந்திரி, "ஆம் இளவரசே! நான் அவ் விதம் இறுமாந்திருந்தது உண்மைதான். இன்றைக்குக் கர்வ பங்கமாயிற்று. தாங்கள் பிறந்தவுடனே சிசுஹத்தி



செய்ய ஏற்பாடு நடந்திருக்கும் பட்சத்தில் தாங்கள் எப்படிப் பிழைத்தீர்கள்? அந்த இரகசியத்தையும் கூறி விட்டால் இரு தார்த்தனாவேன்!" என்றார்.

"எனக்கு எவ்வளவுதான் தெரியும் என்று சோதிக்கிறீர் போலும்! நல்லது; சொல்கிறேன். சிசுஹத்தி செய்வதற்குத் தாங்கள் ஏற்பாடு செய்திருந்தவர்கள் குழந்தை பிறந் ததும் ஆணா, பெண்ணா என்று கூடப் பாராமல்

அவசரப்பட்டு எடுத்துக் கொண்டு போனார்கள். பெண் குழந்தை என்று தெரிந்ததும் தங்களிடம் வந்து சொன்னார்கள். பிழைத்துப் போகட்டும் என்று அக்குழந்தையைக் கோயில் பட்டர் ஒருவரிடம் ஒப்புவித்து வளர்க்கச் சொன்னீர்கள். பெண் குழந்தை பிறந்த அரை நாழிகை நேரத்தில் நான் பிறந்தேன். அதை நீங்கள் எதிர் பார்க்கவேயில்லை. என்னுடைய ஜாதகபலமும் சரியாயிருந்தது. அதனால் நான் உயிர்



பிழைத்தேன். தங்களுடைய திட்டம் தவறிப் போனது பற்றி அறிந்த பிறகும், என்னைச் சிம்மாசனம் ஏற விடாமல் தடுப்பதற்குப் பல சூழ்ச்சிகள் செய்தீர்கள். என்னைச் சிவபக்தனாக அதாவது பைத்தியக்காரனாக வளர்ப்பதற்கு ஏற்பாடு செய்தீர்கள். அதிலும் தவறிப் போனீர்கள். நான் தாங்கள் விரும்பியது போல் அவ்வளவு முழுப் பைத்தியக்காரனாகி விடவில்லை! ஐயா! முதன்மந்திரியே! ஏன் இப்படி ஸ்தம்பித்துப் போய் உட்கார்ந்திருக்கிறீர்? இவையெல்லாம் உண்மையில்லையென்று ஒரேயடியாகச் சாதிப்பதுதானே?''

முதன்மந்திரி உண்மையில் ஸ்தம்பித்துப் போய்த்தான் உட்கார்ந்திருந்தார். ஒருவாறு பேசும் சக்தியை வருவித்துக்கொண்டு, ''இளவரசே! தங்களுக்கு இவ்வளவெல்லாம் விவரங்கள் தெரிந்திருக்கும்போது நான் இல்லையென்று சாதிக்கப் பார்ப்பதில் என்ன பயன்?'' என்றார்.

''ஆமாம்; பயனில்லைதான்! என்னிடம் திடீரென்று நீர் பரிவு கொண்டதன் காரணமும் எனக்குத் தெரியும். ஆதித்த கரிகாலனை உமக்குப் பிடிக்காது. அருள்மொழிவர்மனைச் சோழ நாட்டின் சிம்மாசனத்தில் ஏற்றி வைக்க எண்ணியிருந்தீர். அவனைக் கடல் கொண்டு விட்டதனால் இப்போது என்னிடம் பரிவு கொண்டிருக்கிறீர்! ஆனாலும் ஒன்று சொல்லுகிறேன். முன்னர் எனக்கு நீர் செய்த தீங்குகளையெல்லாம் மறந்து விடப் போகிறேன். இன்று நீர் எனக்குச் செய்த உதவிக்கு நன்றியும் செலுத்துவேன். இன்று முதல் நீர் என் கட்சியில் இருப்பதாகச் சொல்லும் பட்சத்தில், நான் சிம்மாசனம் ஏறியதும் உம்மையே முதன்மந்திரியாக வைத்துக் கொள்ளவும் விரும்புகிறேன்!'' என்றான் மதுராந்தகன்.

''இளவரசே! தங்களுடைய வார்த்தைகள் என்னைப் புளகாங்கிதம் அடையச் செய்கின்றன!'' என்றார் அன்பில் அநிருத்தப் பிரம்மராயர்.

## நாற்பத்திரண்டாம் அத்தியாயம்

# சுரம் தெளிந்தது

நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் ஆச்சாரிய பிக்ஷுவின் அறைக்குப் பக்கத்து அறையில் பொன்னியின் செல்வன் மரக் கட்டிலில் படுத்துக்கொண்டிருந்தான். மூன்று நாட்கள் அவனுக்குக் கடும் சுரம் அடித்துக் கொண்டிருந்தது; பெரும்பாலும், சுயப் பிரக்ஞையே இல்லாமலிருந்தது. இந்த நாட்களில் பிக்ஷுக்கள் அவனைக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டு வந்தார்கள். வேளைக்கு வேளை மருந்து கொடுத்து வந்தார்கள். அடிக்கடி வாயில் தண்ணீர் ஊற்றிக்கொண்டு ஜாக்கிரதையாகப் பார்த்து வந்தார்கள்.

இடையிடையே எப்போதாவது சுய நினைவு தோன்றியபோது, தான் இருக்குமிடத்தைப் பற்றி அவன் எண்ணிப் பார்க்க முயன்றான். அவனுக்கு எதிரில் சுவரில் எழுதியிருந்த சித்திரக் காட்சி அவனுடைய கவனத்தைக் கவர்ந்தது. அந்தச் சித்திரத்தில் தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள் காணப்பட்டார்கள். அவர்களில் சிலர் பலவித இன்னிசைக் கருவிகளை வைத்துக்கொண்டிருந்தார்கள். சிலர் வெண் சாமரங்களையும், வெண் கொற்றக் குடைகளையும் ஏந்திக் கொண்டிருந்தார்கள். மற்றும் சிலர் கரங்களில் பல வண்ண மலர்கள் உள்ள தட்டுக்களை ஏந்திக்கொண்டிருந்தார்கள். இந்தக் காட்சி தத்ரூபமாக இருந்தது. தேவர்களின் உருவங்கள் எல்லாம் உயிர் உள்ள உருவங்களாகத் தோன்றின.

அடிக்கடி அக்காட்சிகளைப் பார்த்த பிறகு பொன்னியின் செல்வன் வான வரின் நாட்டுக்குத் தான் வந்துவிட்ட தாகவே எண்ணினான். அந்தத் தேவ யக்ஷ கின்னரர்கள் எல்லாரும் தன்னை வரவேற்க வருவதாகவும் எண்ணினான். சொர்க்க லோகத்துக்குத் தான் வந்து சேர்ந்தது எப்படி என்று யோசித்தான். அடர்த்தியான தாழைப் புதர்களும், அத்தாழைப் புதர்களில் பூத்திருந்த தங்க நிறத் தாழம்பூக்களும் இருபுறமும் நிறைந்திருந்த ஓடையின் வழியாக வான நாட்டுக்குத் தான் வந்திருக்க வேண்டும் என்று தோன்றியது. அந்த ஓடை வழி நினைவு வந்தபோது தாழம்பூக்களி லிருந்து வந்த நறுமணத்தையும் அவன் நுகர்வதாகத் தோன்றியது. ஓடையில் ஒரு படகில் ஏற்றித் தன்னை ஒரு தேவ குமாரனும் தேவ குமாரியும் அழைத்து வந்ததும் இலேசாக நினைவு வந்தது. தேவகுமாரன் சிவபக்தன் போலிருக் கிறது. இனிமையான தேவாரப் பாடல் களை அவன் அடிக்கடி பாடினான். தேவகுமாரி என்ன செய்தாள்? அவள் பாடவில்லை. அவள் அவ்வப்போது இரண்டொரு வார்த்தைகளை மட்டுமே கூறினாள். அதுவே தேவகானம் போலி ருந்தது. ஆர்வமும் அன்பும் நிறைந்த கண்களால் தன்னை அடிக்கடி பார்த் துக் கொண்டிருந்தாள். அவ்விருவரும் இப்போது எங்கே?

வானவர் நாட்டில் தேவர்கள், யக்ஷர்கள், கின்னரர்களைத் தவிர, புத்த பிக்ஷுக்களுக்கும் முக்கியமாக இடம் உண்டு போலும்! அவர்கள்தான் தேவ லோகத்து அமுத கலசத்தைப் பாது காக்கிறவர்கள் போலும்! அடிக்கடி புத்த பிக்ஷு ஒருவர் அவனை நெருங்கி வருகிறார். அவனுடைய வாயில் சிறிது அமுதத்தை ஊற்றி விட்டுப் போகிறார். தேவலோகத்தில் மற்ற வசதிகள் எவ் வளவு இருந்தாலும், தாகம் மட்டும் அதிகமாகவே இருக்கிறது. இன்னும் கொஞ்சம் அதிகமாகவே இந்தப் புத்த பிக்ஷு தன் வாயில் அமுதத்தை ஊற்றி விட்டுப் போகக் கூடாதோ? தேவலோ கத்தில்கூட ஏன் இந்தத் தரித்திர புத்தி!

ஒருவேளை அமுதத்தை ஒரேயடி யாக அதிகமாய் அருந்தக்கூடாது போலும்! இது அமுதமா? அல்லது ஒரு வேளை ஏதேனும் மதுபானமா? – சீச்சீ! பிக்ஷுக்கள் கேவலம் மதுவைக் கையி னாலும் தொடுவார்களா? தன் வாயிலே தான் கொண்டு வந்து ஊற்றுவார்களா? இல்லையென்றால், ஏன் இப்படித் தனக்கு மயக்கம் வருகிறது? அமுத பானம் செய்த சிறிது நேரத்துக்கெல் லாம் ஏன் நினைவு குன்றுகிறது...?

ஏழு நாள் தினங்கள் இவ்வாறு பொன்னியின் செல்வன் வானவர் உலகத்திலும் நினைவேயில்லாத சூனிய உலகத்திலும் மாறி மாறிக் காலம் கழித்த பிறகு, நாலாம் நாள் காலையில் தூக்கத்திலிருந்து விழித்தெழுவது போல் எழுந்து, பூரண சுய நினைவு பெற்றான். உடம்பு பலவீனமாய்த்தானிருந்தது; ஆனால் உள்ளம் தெளிவாக இருந்தது. எதிரே சுவரில் இருந்த உருவங்கள் சித்திர உருவங்கள் என்பதை அறிந் தான். அந்த தேவயக்ஷ கின்னரர்கள் தன்னை வரவேற்பதற்காக அங்கே நிற்கவில்லையென்றும், தேவலோகத் துக்கு விஜயம் செய்த பகவான் புத்தரை வரவேற்கிறார்கள் என்றும் அறிந்தான். மற்றொரு சுவரில் மேகங்கள் சூழ்ந்த வானவெளியில் புத்த பகவான் ஏறி வருவது போன்ற சித்திரம் எழுதியிருந் ததையும் கண்டான். புத்த விஹாரம் ஒன்றில் தான் படுத்திருக்கிறதை அறிந்து கொண்டான். எங்கே, எந்தப் புத்த விஹாரத்தில் என்று சிந்தித்தபோது, இலங்கையிலிருந்து தான் பிரயாணம் தொடங்கியதிலிருந்து நிகழ்ந்த சம் பவங்கள் எல்லாம் ஒவ்வொன்றாக நினைவு வந்தன. வந்தியத்தேவனும் தானும் அலைமோதிய கடலில் அலைப் புண்டு அலைப்புண்டு கை சளைத்துப் போனது வரையில் ஞாபகம் வந்தது. அப்புறம் ஒரே குழப்பமாக இருந் தது.

அச்சமயம் புத்த பிக்ஷு ஒருவர் அந்த அறைக்குள் வந்தார். வழக்கம் போல் கையில் அமிர்த கிண்ணத்துடன் வந் தார்! இளவரசன் அருகில் வந்ததும்

பிக்ஷு அவனை உற்றுப் பார்த்தார். இளவரசன் கையை நீட்டிக் கிண்ணத்தை வாங்கி அதில் இருப்பது என்னவென்று பார்த்தான். அது தேவலோகத்து அமுதம் இல்லையென்று உறுதிப்படுத்திக் கொண்டான். மருந்து அல்லது மருந்து கலந்த பால் என்று தெரிந்து கொண்டான். பிக்ஷுவை நோக்கி, "சுவாமி! இது என்ன இடம்? தாங்கள் யார்? எத்தனை நாளாக நான் இங்கே இப்படிப் படுத்திருக்கிறேன்?" என்று கேட்டான்.

பிக்ஷு அதற்கு ஒன்றும் மறுமொழி சொல்லாமல் திரும்பிச் சென்றார். அடுத்த அறைக்கு அவர் சென்று "ஆச்சாரியாரே! சுரம் நன்றாய்த் தெளிந்து விட்டது. நினைவு பூரணமாக வந்து விட்டது!" என்று கூறியது இளவரசன் காதில் விழுந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் வயது முதிர்ந்த பிக்ஷு ஒருவர் பொன்னியின் செல்வன் இருந்த அறைக்குள் வந்தார். கட்டிலின் அருகில் வந்து அவரும் இளவரசனை உற்றுப் பார்த்தார். பிறகு மலர்ந்த முகத்துடன், "பொன்னியின் செல்வ! தாங்கள் இருக்குமிடம் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரம். கடுமையான தாபஜ்ஜுரத்துடன் தாங்கள் இங்கே வந்து மூன்று தினங்கள் ஆயின. தங்களுக்கு இந்தச் சேவை செய்வதற்குக் கொடுத்து வைத்திருந்தோம். நாங்கள் பாக்கியசாலிகள்!" என்றார்.

"நானும் பாக்கியசாலிதான். இந்தச் சூடாமணி விஹாரத்துக்கு வந்து பார்க்க வேண்டுமென்று ஆவல் கொண்டிருந்தேன். எப்போதோ ஒருசமயம் இந்த நகரின் துறைமுகத்துக்குப் போகும்போது வெளியிலிருந்து பார்த்திருக்கிறேன். தெய்வாதீனமாக இங்கேயே நான் வந்து தங்கியிருக்கும்படி நேர்ந்தது. சுவாமி! எப்படி நான் இங்கு வந்து சேர்ந்தேன்? சொல்ல முடியுமா? என்று அருள்மொழிவர்மன் கேட்டான்.

"இளவரசே! முதலில் தங்களுடைய கையில் உள்ள மருந்தைச் சாப்பிடுங்கள். எனக்குத் தெரிந்த விவரங்களைச் சொல்கிறேன்!" என்றார் பிக்ஷு.

இளவரசன் மருந்தைச் சாப்பிட்டு விட்டு, "ஐயா! இது மருந்து அல்ல; தேவாமிர்தம். என் விஷயத்தில் தாங்கள் எவ்வளவோ சிரத்தையுடன் கவலை எடுத்துச் சிகிச்சை செய்வித்திருக்கிறீர்கள். ஆனால் இதற்காகத் தங்களுக்கு நான் நன்றி செலுத்தப் போவதில்லை!" என்றான்.

ஆச்சாரிய பிக்ஷு புன்னகை புரிந்து, "இளவரசே! தாங்கள் நன்றி செலுத்த வேண்டிய அவசியமும் இல்லை. நோயாளிகளுக்குச் சிகிச்சை செய்வது பரமோத்தம தர்மம் என்று புத்த பகவான் அருளியிருக்கிறார். நோய்ப்பட்ட பிராணிகளுக்குக்கூடச் சிகிச்சை செய்யும்படி புத்த தர்மம் கட்டளையிடுகிறது. தங்களுக்குச் சிகிச்சை செய்ததில் அதிக விசேஷம் ஒன்றுமில்லை. சோழ குலத்துக்கு நாங்கள் மிகவும் கடமைப்பட்டவர்கள். தங்கள் தந்தையார் சுந்தர சோழ சக்கரவர்த்தியும் தங்கள் திருத்தமக்கையார் இளைய பிராட்டியும் புத்த தர்மத்துக்கு எவ்வளவோ ஆதரவு அளித்திருக்கிறார்கள். தாங்கள் இலங்கை அநுராதபுரத்தில் புத்த விஹாரங்களைப் புதுப்பித்துக் கட்ட ஏற்பாடு செய்ததும் எங்களுக்குத் தெரிந்ததே! அப்படியிருக்கும்போது, நாங்கள் செய்த இந்தச் சிறிய உதவிக்காகத் தங்களிடம் நன்றி எதிர்பார்க்கவில்லை..."

"ஆச்சாரியரே! நன்றி செலுத்துவது பற்றி அந்த முறையில் நான் கூறவில்லை. எனக்கு எப்பேர்ப்பட்ட கடும் ஜுரம் வந்திருக்க வேண்டும் என்பதை நான் உணர்ந்திருக்கிறேன். இலங்கையில் இந்த ஜுரத்தினால் பீடிக்கப்பட்டவர்களின் கதியை நான் பார்த்திருக்கிறேன். நியாயமாக இதற்குள் நான் வானவர் உலகத்துக்குப் போயிருக்க வேண்டும். அங்கே தேவர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள் என்னை வரவேற்று உபசரித்திருக்கக் கூடும்

அல்லவா? இன்று தேவர் - தேவியர்களுக்கு மத்தியில் உண்மையாகவே அமிர்தபானம் செய்துகொண்டு ஆனந்த மயமாய் இருப்பேன் அல்லவா? அதைத் தாங்கள் கெடுத்து விட்டீர்கள்! வானுலகத்தின் வாசல் வரையில் சென்ற என்னைத் திரும்ப இந்தத் துன்பம் நிறைந்த மண்ணுலகத்துக்குக் கொண்டு வந்து விட்டீர்கள். ஆதலின் எனக்குத் தாங்கள் நன்மை செய்ததாகவே நான் எண்ணவில்லை. ஆகையால்தான் தங்களுக்கு நன்றி செலுத்தப் போவதில்லை என்று கூறினேன்!''

ஆச்சாரிய பிக்ஷுவின் முகம் ஆனந்த பூரிப்பினால் மலர்ந்தது.

''பொன்னியின் செல்வ! தாங்கள் வானுலகத்துக்குப் போக வேண்டிய காலம் வரும்போது தேவேந்திரனும் பிற தேவர்களும் விமானங்களில் வந்து தேவ துந்துபிகள் முழங்கி மலர் மாரி பொழிந்து தங்களை அழைத்துச் செல்வார்கள். ஆனால் அந்தக் காலம் இன்னும் நெடுந் தூரத்தில் இருக்கிறது. இந்த மண்ணுலகத்தில் தாங்கள் செய்ய வேண்டிய அரும்பெரும் காரியங்கள் எத்தனையோ இருக்கின்றன! அவற்றை முடித்து விட்டல்லவா வானுலகம் செல்வது பற்றி யோசிக்க வேண்டும்?'' என்றார்.



இது காறும் சாய்ந்து படுத்திருந்த பொன்னியின் செல்வன் நிமிர்ந்து உட்கார்ந்தான். அவனுடைய திருமுகத்தில் அபூர்வமான களை பொலிந்தது. அவனுடைய விசாலமான நயனங்களிலிருந்து மின் வெட்டுப் போன்ற ஒளிக்கிரணங்கள் அலை அலையாகக் கிளம்பி அந்த அறையையே ஜோதிமயமாகச் செய்தது.

''ஆச்சாரியரே! தாங்கள் கூறுவது உண்மை. இந்த மண்ணுலகில் நான் சில காரியங்களைச் சாதிக்க விரும்புகிறேன். அரும்பெரும் பணிகள் பல செய்து முடிக்க விரும்புகிறேன். இந்தச் சூடாமணி விஹாரத்தை ஒருசமயம் வெளியிலிருந்து பார்த்தேன். அநுராதபுரத்திலுள்ள ஸ்தூபங்களையும் விஹாரங்களையும் பார்த்தேன். அங்கேயுள்ள அபயகிரி விஹாரத்தைப் போல் பெரிதாக இந்தச் சூடாமணி விஹாரத்தைப் புனர் நிர்மாணம் செய்யப் போகிறேன். அநுராதபுரத்தில் உள்ள பெரிய பெரிய புத்தர் சிலைகளைப் போன்ற சிலைகளை இந்த விஹாரத்திலும் அமைத்துப் பார்க்கப் போகிறேன். இன்னும், இந்தச் சோழ நாட்டிலுள்ள சிவாலயங்களை அம்மாதிரி புதுப்பித்துக் கட்டப் போகிறேன். இலங்கையிலுள்ள ஸ்தூபங்களையும் விஹாரங்களையும் பார்த்து விட்டு இச் சோழ நாட்டிலுள்ள ஆலயங்களையும் நினைத்துப் பார்த்தால், எனக்கு உடலும் உள்ளமும் குன்றுகின்றன. வானளாவும் கோபுரத்தை உடைய மாபெரும் ஆலயத்தைத் தஞ்சாவூரில் நிர்மாணிக்கப் போகிறேன். அதற்குத் தகுந்த அளவில் மகாதேவருடைய சிலையைச் செய்து நிர்மாணிக்கப் போகிறேன். ஆச்சாரியரே! இந்தச் சோழ நன்னாட்டில் புத்த ஸ்தூபங்களும் சிவாலயங்களின் கோபுரங்களும் ஒன்றோடொன்று போட்டியிட்டு மேக மண்டலத்தை எட்டப் போகின்றன. ஆயிரமாயிரம் வருஷங்களுக்குப் பிறகு இந்தத் தெய்வத் தமிழ்நாட்டில் பிறக்கும் சந்ததிகள் அவற்றைக் கண்டு பிரமித்து நிற்கப் போகிறார்கள்...!''

இவ்வாறு ஆவேசம் கொண்டவன் போல் பேசி வந்த இளவரசன் உடலில் போதிய பலமில்லாமையால் கட்டிலில் சாய்ந்தான். உடனே ஆச்சாரிய பிக்ஷு அவனுடைய தோள்களைப் பிடித்துக் கொண்டு, கட்டிலில் தலை அடிபடாமல் மெள்ள மெள்ள அவனைப் படுக்க வைத்தார். நெற்றியில் கையினால் தடவிக் கொடுத்து, ''இளவரசே! தாங்கள் உத்தேசித்த அரும்பெரும் காரியங்களையெல்லாம் காலா காலத்தில் செய்து முடிப்பீர்கள். முதலில், உடம்பு பூரணமாய்க் குணமடைய வேண்டும். சற்று அமைதியாயிருங்கள்!'' என்றார்.

(தொடரும்)

# மஹாலயம் (அல்லது மஹாளயம்)



பெரிய இருப்பிடம், கல்யாணாதி சுபங்களுக்கு இருப்பிடம் மஹான்களுக்கு இருப்பிடம் என பல பொருள்கள் உண்டு. அதாவது. மஹான்களான பித்ருக்கள் பூமியில் வந்து 16 நாட்கள் தங்கி, புத்ரன் முதலியவர்களுக்கு சுபத்தைச் செய்யும் காலம் என்று பொருள். ஸூர்யன் கன்யா ராசியில் புகுந்தபோது, ஆஷாடம் முதலான 5 ஆவது அபர பக்ஷத்தில் பித்ருக்கள் பூமிக்குச் செல்ல ஏவப்படுகின்றார்கள். அச்சமயம் நமது பெற்றோர், அவர்களது பெற்றோர்களுடன் கூடி நம்மை நாடி வருகின்றனர். அச்சமயம் மஹாளய அன்னச்ராத்தமாகச் செய்வது உத்தமம். இந்த 16 நாட்களில் செய்ய முடியாதவர் அன்ன ச்ராத்தமானால் அடுத்த பக்ஷத்திலும் செய்யலாம்.

தீபாவளி அமாவாஸ்யைவரை பித்ருக்கள் அன்ன ச்ராத்தத்தை எதிர்பார்க்கிறார்களாம். விதிப்படி ஹோமம் செய்து அன்னம் போட முடியாவிடில் அன்னத்திற்கு ப்ரதிநிதியாக வெள்ளி நாணயத்தை அளித்து (அதாவது ப்ராம்மணர்களை வரித்து, ஆஸனாதிகளையும் தக்ஷிணையும் அளித்து) தர்ப்பணம் செய்வதாம். அதே ஹிரண்ய ச்ராத்தம் எனப்படும். அங்ஙனம் பிரதி தினம் செய்ய முடியாதவர் பித்ரு, மாத்ரு திதி அல்லது மஹாபரணீ, வ்யதீபாதம், மத்யாஷ்டமீ முதலிய புண்யகாலத்தில் ஹிரண்யம் செய்வது பழக்கம். ச்ராத்த ப்ராம்மணர்களைப் போல் அல்லாமல், ஸாதாரண ஸமாராதனை போல் அன்று அன்னமிடுவது வழக்கம். அதுவும் தற்சமயம் பலவிடங்களில் நடப்பதில்லை. தக்ஷிணை அளித்து அனுப்புவதுடன் நிற்கின்றது. வீணான செலவுகளைக் குறைத்துக் கொண்டு மஹாளயத்தை அன்ன ச்ராத்தமாகச் செய்வதே உத்தமம். ஹிரண்யமாகவாவது செய்து அன்னமிட வேண்டும். 16 நாட்களிலும் தர்ப்பணத்தையேனும் விடாமல் செய்து ஒரு நாளாவது ஹிரண்ய ச்ராத்தம் செய்ய வேண்டும். அதனால் ஸகலவிதமான நன்மையும் பெறவேண்டும்.



# மஹாளயம் செய்வதால் உண்டாகும் பலன்



1. ப்ரதமையில் ச்ராத்தம் செய்தால் தனலாபமுண்டாகும்.
2. த்விதீயை ச்ராத்தம் ஸந்ததியைத் தரும்.
3. த்ரீதீயா ச்ரார்த்தம் நல்ல வரன் அல்லது நல்ல மருமகளைத் தரும். அல்லது கோரிய வரத்தைத் தரும்.
4. சதுர்த்தி ச்ராத்தம் நமது பகைவர்களை அகற்றும்.
5. பஞ்சமீ ஸம்பத்தை உண்டாக்கும்.
6. ஷஷ்டி கர்த்தாவைப் பிறர் பூஜிக்கும்படிச் செய்யும்.
7. ஸப்தமீ பரலோகத்தில் ஒரு தேவ கோஷ்டிக்குத் தலைவனாகச் செய்யும்.
8. அஷ்டமீ உயர்ந்த புத்தியை அளிக்கும்.
9. நவமீ நல்ல மனைவியைத் தரும். துஷ்ட மனைவியை நல்லவளாகச் செய்யும். அடுத்த பிறவியிலும் நல்ல மனைவியைத் தரும்.
10. தசமீ நம் விருப்பத்தைப் பூர்த்தி செய்யும்.
11. ஏகாதசீ ஸகல வேத வித்யைகளையும் தரும்.
12. த்வாதசீ ஸ்வர்ணத்தைத் தரும்.
13. த்ரயோதசீ ஸந்ததி, மேதை, பசு, புஷ்டி, ஸம்ருத்தி நீண்ட ஆயுள் முதலியவைகளைத் தரும்.
14. வஸ்த்ரம் அல்லது அக்னி (தற்காலத்தில் தோன்றிய ரயில், மோட்டார் போன்ற விபத்து) இவைகளால் இறந்தவர்களுக்குச் சதுர்த்தசியில்தான் மஹாளய ச்ராத்தம்செய்ய வேண்டும். அதே அவர்களுக்கு இன்பத்தைத் தரும்.
15. அமாவாஸ்யை ச்ராத்தம் ஸகல இஷ்டங்களையுமளிக்கும்.
16. அடுத்த ப்ரதமை தர்ப்பணம் முன் செய்தவைகளில் உள்ள குறைகளை நீக்கிப் பூர்ணமாகச் செய்யும்.

ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம்.



# மகாதாந்திரிக்

சு. கிருஷ்ணமூர்த்தி

இப்போது தேவிபூர் ஒரு சராசரி வங்காளி கிராமந்தான். ஆனால் சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன்வரை அது மிகவும் புகழ் பெற்றிருந்தது. காரணம் அங்குதான் தந்திரசாத்திரத்தில் தேர்ந்த ஒரு குடும்பம் பல தலைமுறைகளாக வசித்து வந்தது. அந்தக் குடும்பத்துக்கே மகாதாந்திரிக் குடும்பம் என்றுதான் பெயர். நாடு சுதந்தரமடைவதற்கு முன்னால் கல்கத்தாவிலிருந்து பெரிய பெரிய ஜமீந்தார்களும் பெரிய மனிதர்களும் மகாதாந்திரிக் ஆசாரியரின் தரிசனத்துக்கு வந்தவண்ணம் இருப்பார்கள், அவர்களுடைய குடும்ப நலனுக்காக அவரைக் கொண்டு யாகம்; ஹோமம் செய்வார்கள்.

இதெல்லாம் பழைய கதை.

இப்போது காலம் மாறிவிட்டது. மகாதாந்திரிக் குடும்பத்தைச் சட்டை செய்வாரில்லை. மாளிகை போன்ற அவர்களுடைய வீட்டின் பெரும் பகுதி இடிந்து போய்விட்டது. குடும்பத்தின் தற்கால வாரிசான தாராதாஸ் பட்டாசார்யா, அவருடைய மனைவி, அவருடைய ஒரு பெண். இந்த மூவரும் இன்னும் இடிந்து விழாமலிருக்கிற இரண்டு மூன்று அறைகளில் அடைக்கலம் பெற்றிருக்கிறார்கள். இப்போதெல்லாம் யாரும் அவருடைய உபதேசத்தைக் கேட்க வருவதில்லை, அவரைக் கொண்டு யாகம், ஹோமம் ஏற்பாடு செய்வதில்லை. குடும்பத்துக்குச் சொந்தமாக எஞ்சியிருந்த சொற்ப நிலத்திலிருந்து வரும் வருமானத்தில் சிரம ஜீவனம் நடக்கிறது.

ஸ்ரீமதி பட்டாசார்யா பழைய வாழ்க்கையை நினைத்து அடிக்கடி அங்கலாய்ப்பாள். தாராதாஸ் அவளைத் தேற்றுவார்—

# மகிமை

"இதுக்கெல்லாம் வருத்தப்பட்டு என்னம்மா பிரயோஜனம்? எல்லாம் காலத்தின் கோளாறு. இந்தக் காலத்திலே நாத்திகம் பெருகிப் போச்சு. கடவுளை நம்பறவங்க கூட துர்க்கா பூஜை, காளி பூஜை, சிதளா பூஜைன்னு பெரிய பெரிய பந்தல் போட்டு எலக்ட்ரிக் விளக்கு அலங்காரமும் பாண்டு கோஷ்டியும் ஊர்வலமுமா லட்சக் கணக்கிலே செலவு செய்யறாங்க. அவங்களுக்குத் தந்திர சாஸ்திரத்திலே நம்பிக்கை போயிடுச்சு. நாடு குட்டிச் சுவராயிடுச்சு. போகட்டும், எப்படியோ சொச்ச காலத்தைக் கடத்திடுவோம்."

ஸ்ரீமதி சிறுவாள், "நம்ம பாடு எப்படியோ போகட்டும். நமக்கு ஒரு வயசுவந்த பொண்ணு இருக்காளே, அவளுக்குக் கலியாணம் பண்ண வேணாமா? அதுக்கு என்ன வழி? அந்த உத்தர்பாராக்காரங்களுக்கு நம்ம ஜெயாவைப் பிடிச்சுப் போச்சு. அவளோட அழகுக்காக வரதட்சிணை இல்லாமே கலியாணம் பண்ணிக்கத் தயாராயிருக்காங்க. ஆனா அவளுக்குப் பேருக்காவது ரெண்டு நகை போடாமே கலியாணம் எப்படிப் பண்ண முடியும்? கலியாணச் செலவு வேறே இருக்கே! அதுக்கு என்ன செய்யப் போறீங்க?"

இதற்குப் பதிலில்லை தாராசிடம். அவருடைய மனைவி சொல்வது உண்மைதான். பெண்ணின் வகிட்டில் சிந்தூரம் ஏற வேண்டுமானால் குறைந்தது ஐம்பதாயிரம் ரூபாயாவது வேண்டும். அவ்வளவு பணத்துக்கு எங்கே போவது? இங்கே தான் அன்றாடப் பிழைப்பே கஷ்டமாயிருக்கிறதே!

இரவில் தூக்கம் வருவதில்லை மகாதாந்திரிக் பட்டாசார்யாவுக்கு.

அன்று பிற்பகலில் சாப்பிட்டுவிட்டுப் புகையிலையை மென்று கொண்டு ஓய்வாகப் படுத்திருந்தார் பட்டாசார்யா.

யாரோ வாசல் கதவைத்தட்டும் சத்தம் கேட்டது.

"யாரது?" பட்டாசார்யா குரல் கொடுத்தார்.

"மகாதாந்திரிக் மொஷாய் இருக்காங்களா? நாங்க அவரைப் பார்க்க வந்திருக்கோம் கல்கத்தாவிலிலேருந்து."

"கதவு வெறுமே தான் சாத்தியிருக்கு. உள்ளே வாங்க."

நடுவயதினர் இருவர் உள்ளே வந்தார்கள். அவர்கள் மிடுக்காக உடையணிந்திருந்தார்கள். ஒருவர் கையில் ஒரு ப்ரீஃப்கேஸ் இருந்தது.

அவர்கள் பட்டாசார்யாவின் காலைத் தொட்டு வணங்கிவிட்டுப் பணிவோடு நின்றார்கள்.

"உக்காருங்க. என்னைப் பார்க்கறதுக்காகக் கல்கத்தாவிலேருந்து வந்திருக்கீங்களாக்கும்! ரொம்ப சந்தோஷம்? ஏன் திடீர்னு இப்படி உங்களுக்கு என் ஞாபகம் வந்திருக்கு?"

"நாங்க உங்களைப் பத்தி நிறையக் கேள்விப்பட்டிருக்கோம். கல்கத்தாவிலே உங்களைப் பத்தி ரொம்ப உயர்வாப் பேசிக்கறாங்க. நீங்க சித்த புருஷராம், சாட்சாத் தாராதேவி உங்களுக்குப் பிரத்தியட்சமாம், உங்களுக்கு மூணு காலமும் தெரியுமாம், தாந்திரிக் சக்தியிலே உங்களை மிஞ்ச வங்காளத்திலே வேறே ஆளே இல்லையாம்."

"அதெல்லாம் இருக்கட்டும், இப்போ விஷயத்துக்கு வாங்க. உங்களுக்கு என் கிட்டே ஏதோ காரியம் இருக்கு. அது என்னன்னு சொல்லுங்க."

"அது ஒரு



சின்ன விஷயந்தான். உங்க மாதிரி சக்தி யுள்ளவங்களுக்கு ரொம்ப சாதாரண விஷயம். விரல் சொடக்கற மாதிரி."

"இவ்வளவு பூர்வபீடிகையெல்லாம் வேணாம், காரியம் என்னன்னு சொல் லுங்க."

"அடுத்த மாசம் அதாவது ஆகஸ்ட் இருபதாம் தேதி கல்கத்தாவிலே மழை பெய் யாமே இருக்கணும், அதுக்கு உங்க தயவு வேணும்."

"எனக்குப் புரியல்லியே."

"புரியும் படியா சொல்றோம். நாங்க இன்ன கட்சியைச் சேர்ந்தவங்க. நாங்க ஆக்ஸ்ட் இருபதாந்தேதி கல்கத்தா மைதா னத்திலே ஒரு பொதுக்கூட்டம் ஏற்பாடு பண்ணியிருக்கோம். அதுக்குப் பல லட்சம் ஜனங்க வருவாங்கன்னு எதிர்பார்க்கறோம். அன்னிக்கு மழை பெஞ்சா 'ஜனங்க ரொம் பப் பேர் வரமாட்டாங்க. எங்க ஏற்பாடெல் லாம் வீணாயிடும். அதனாலேதான் அன்னிக்கு மழை இல்லாமே செய்யணும்."

"கொஞ்சங் கொஞ்சம் புரியுது. ஆமா, நீங்க இன்ன கட்சிங்கறீங்க, எந்த கோஷ்டி?"

வந்தவர்கள் ஒருவரையொருவர் பார்த் துக் கொண்டார்கள். பிறகு தயங்கித் தயங்கி, "இன்ன கோஷ்டி" என்று தெரிவித்தார்கள்.

"ஆகஸ்ட் மாசம் சரியான மழை காலம். ஆகஸ்ட் மாசத்தை ஏன் தேர்ந்தெடுத்தீங்க உங்க கூட்டத்துக்கு?"

"நாங்களாத் தேர்ந்தெடுக்கல்லே. ஆகஸ்ட் இருபதாந்தேதி பொதுக்கூட்டம் நடத்தும் படியான கட்டாயம் ஏற்பட்டிருக்கு எங் களுக்கு. ஏன்னா அன்னிக்குத்தான் எங்க போட்டி கோஷ்டிக்காரங்க, கட்சியோட அகில இந்திய மகாநாடு கூட்டியிருக்காங்க. மழையைப் பத்தி அவங்களுக்குப் பிரச்னை இல்லே. மகா நாட்டுக்கு சுமார் ஆயிரம் பேர்தான் வருவாங்க. அதனாலே ஒரு பெரிய ஹாலை ஏற்பாடு செஞ்சிருக்காங்க. நாங்க அதே நாளிலே எங்க கோஷ்டி சார் பிலே ஒரு பொதுக் கூட்டம் போட்டு நாங்க தான் உண்மையான கட்சின்னு காட்டப் போறோம். அதனால்தான்..."

"இப்போ நல்லாப் புரியுது. பைத் தியக்காரங்க!"

"யாரைச் சொல்றீங்க?"

"உங்களைத்தான், வேறே யாரை! வீம்புக் காக நல்ல மழை காலத்திலே திறந்த வெளி யிலே பொதுக்கூட்டம் ஏற்பாடு பண்றது பைத்தியக்காரத்தனமில்லையா? இயற் கையை மாத்த முடியுமா?"

"நாங்க அதுக்காகத்தானே உங்ககிட்ட வந்திருக்கோம்! நீங்க நினைச்சா சாதிக்க முடியாத காரியம் இல்லே. சாட்சாத் தாரா தேவி உங்க கைக்குள்ளே. நீங்க தயவு பண்ணி எங்களைக் காப்பாத்தணும்!"

"இது ஒண்ணும் சுலபமான காரிய மில்லே, நீங்க நினைக்கற மாதிரி. இயற்கை யோட போக்கை மாத்தறதுன்னா சும்மாவா! இது என்னாலே முடியாத காரியமில்லே தான். ஆனா இதுக்கு நிறைய பூஜை, ஹோமம் எல்லாம் செய்யணும். நிறைய செலவாகும்."

"செலவைப் பத்திக் கவலைப்படாதீங்க. எவ்வளவு செலவாகும்னு சொல்லுங்க" என்று கூறிக் கொண்டே ப்ரீஃப்கேஸ்காரர் அதைத் திறந்தார்.

ப்ரீஃப் கேசுக்குள் கத்தை கத்தையாகக் கரன்சி நோட்டுகள் இருப்பதை ஓரக்கண் ணால் கவனித்தார் பட்டாசார்யா. பிறகு அவர் ஆகக் கூடிய செலவைக் கணக்கிடு பவர் போல் ஏதோ யோசித்துவிட்டுப் பேசத் தொடங்கினார்- "அதாவது பத்து...பதி னைஞ்சு...இருபது... இருபத்தஞ்சு... ஆமா, செலவு இருபத்தஞ்சாயிர ரூபாய் ஆகும்..."

நூறு ரூபாய் நோட்டுக் கட்டு ஒன்றை பட்டாசார்யாவின் காலடியில் வைத்து விட்டு ப்ரீஃப்கேஸ்காரர் சொன்னார், "இத் தாங்க முன்பணமாப் பத்தாயிரம் ரூபாய். பொதுக் கூட்டம் முடிஞ்சதும் வந்து பாக்கிப் பணத்தைக் கொடுத்துட்டுப் போறோம்..."




**"தலைவர் கூட்டத்தில் சொதப் பிட்டார்!"**

**"என்ன?"**

**"தேசிய நீரோட்டத்திலிருந்து மின்சாரம் எடுத்து – பற்றாக்குறையை சமாளிப் போம்னு சொல்றார்!"**

**– ஆர். ராஜகோபால்**

பட்டாசார்யாவின் குரலில் திடீரென்று சூடு ஏறிவிட்டது- "அப்படீன்னா உங்களுக்கு என் சக்தியிலே முழு நம்பிக்கையில்லே. உங்க காரியம் நடந்ததுன்னாப் பாக்கிப் பணத்தைக் கொடுக்கலாம்னு நினைக்கறீங்க, அப்படித்தானே?"

வந்தவர்கள் நாக்கைக் கடித்துக் கொண்டார்கள்- "ஐயோ, அப்படியெல்லாம் நினைக்கல்லே நாங்க. உங்க சக்தியிலே முழு நம்பிக்கை இருக்கு எங்களுக்கு. இல்லேன்னா கல்கத்தாவிலிருந்து இவ்வளவு தூரம் வந்திருப்போமா? இந்தாங்க..."

ப்ரீஃப்கேஸ்காரர் இன்னொரு நூறு ரூபாய்க் கட்டையும் ஒரு ஐம்பது ரூபாய்க் கட்டையும் பட்டாசார்யாவின் காலடியில் வைத்தார்.

பிறகு இருவரும் அவரை வணங்கி விட்டு விடைபெற்றார்கள்.

ஒரு மணி நேரம் கழிந்திருக்கும். மறுபடி வாசல் கதவு தட்டப்பட்டது.

"யாரது? உள்ளே வாங்க" பட்டாசார்யா சொன்னார்.

இப்போது வந்தவர்களும் இருவர். ஒருவர் கையில் ப்ரீஃப்கேஸ்.

வந்தவர்கள் பணிவாக பட்டாசார்யாவின் காலைத்தொட்டு வணங்கினார்கள்.

"உக்காருங்க. நீங்க இன்ன கட்சியிலே இன்ன கோஷ்டியைச் சேர்ந்தவங்களாக்கும்."

வந்தவர்கள் ஒருவரையொருவர் வியப்போடு பார்த்துக் கொண்டார்கள்.

"ஆகஸ்ட் மாசம் இருபதாந் தேதி கல்கத்தாவிலே மழை கொட்டோ கொட்டுனு கொட்டணுங்கறது உங்க விருப்பம் இல்லியா?"

வந்தவர்கள் அடைந்த அதிர்ச்சிக்கும் ஆச்சரியத்துக்கும் அளவில்லை. அவர்கள் அப்படியே நெடுஞ்சாண் கிடையாகப் பெரியவர் காலில் விழுந்து பரவசம் பொங்கச் சொன்னார்கள், "நீங்க சாட்சாத் பிருகஸ்பதிதான்! உங்களுக்குத் தெரியாத விஷயமே இல்லே!"

"என்னைப் புகழறது இருக்கட்டும், விஷயத்துக்கு வாங்க. மழைபெய்யறதும் பெய்யாததும் இயற்கையோட விதி. இதை மனுஷன் தன்னிஷ்டப்படி மாத்தறது சுலபமில்லே. அதுக்கு நிறைய ஏற்பாடெல்லாம் செய்யணும். பூஜை, ஹோமம். ரொம்ப செலவாகும் அதுக்கு."

"எவ்வளவு செலவாகும், சொல்லுங்க!"

## ஒலிம்பிக் நடிகை!

ஜீனாடேவிஸ். நாற்பத்து மூன்று வயது. ஹாலிவுட் நடிகை. சிறந்த துணை நடிகைக்கான ஆஸ்கார் விருது பெற்றவர். இவர் பற்றி ஒரு ஆச்சரியமான தகவல்:



வரும் ஒலிம்பிக்கில் ஆர்ச்சரி என்கிற வில் அம்புப் போட்டியில் பங்கேற்று, தங்க மெடல் பெறுவது இவரது லட்சியம். இரண்டாண்டுகளுக்கு முன் டெலிவிஷனில் வில் – அம்பு விடுகிற போட்டியொன்றைப் பார்த்தபோது, இவருக்கு அதில் ஆர்வம் ஏற்பட, உடனடியாகப் பயிற்சியில் இறங்கி விட்டார். நடிப்புடன் கூடவே இதிலும் கடுமையான பயிற்சி. பலன்? ஒலிம்பிக்கில் பங்கேற்கும் அமெரிக்க அணியைத் தேர்வு செய்யும் முதல் சுற்றில் தேர்வாகி விட்டார். அடுத்து, அரையிறுதிச் சுற்றில் பங்கேற்கப் போகும் நூற்றி இருபத்து ஏழு பேரில், ஜீனா டேவிசும் ஒருவர்!

"எனக்கு இரண்டுமே முக்கியம். நடிப்புக்காக, வில் – அம்பு பயிற்சியையோ, இல்லை வில் – அம்புக்காக நடிப்பையோ நிறுத்த மாட்டேன்" என்கிறார்.

ஆஸ்கார் அடித்தவர், ஒலிம்பிக்கில் ஒரு வெண்கலமாவது அடிக்கிறாரா பார்க்கலாம்!

— பாரதி

"இருபத்தஞ்சாயிரம் ரூபாய்..."

ப்ரீஃப்கேஸ்காரர் மறுபேச்சுப் பேசாமல் பணத்தை எடுத்து பட்டாசார்யாவின் காலடியில் வைத்தார். "இப்போ எங்க கவலை விட்டது! இதுவரை இந்த மாதிரி அடைமழை பெஞ்சதேயில்லேன்னு சொல்லும்படியா மழை பெய்ய ஏற்பாடு செஞ்சுடுங்க. நாங்க வரோம்."

அவர்கள் சென்றதும் பட்டர்சார்யா தம் மனைவியைக் கூப்பிட்டுச் சொன்னார், "இந்தப் பணத்தை வச்சுக்கிட்டு அவசியமான நகைகள் பண்ணிடு. உத்தரபாராக்காரங்





## நம்ப முடிகிறதா?

• சந்தியா

இது போலீஸ்காரரின் உடை என்றால் நம்புவது சிரமம். ஆனால் 1870ல் போலீசாரின் உடை இப்படித்தான் இருந்தது. இந்திய போலீசின் வரலாறு சொல்லும் கொல்லம் நகரில் உள்ள மியூசியத்தில் இதைக் காணலாம். கடந்த 150 வருட கால, போலீஸ் துறை பற்றிய மியூசியத்தை ஐந்து லட்சம் ரூபாய் செலவில் உருவாக்கியுள்ளார் கேரள ஐ.பி.எஸ். அதிகாரியான சந்தியா.

வீரச் செயல் புரிந்த, பணியில் உயிர் நீத்த போலீசாரின் வீரத்தை விளக்க, பிரத்யேக கேலரி ஒன்றும் இங்கு அமைக்கப் பட்டுள்ளது.

— சி.எம்.

களுக்கு இப்பவே கடுதாசு எழுதிடு. அவங்க ஒரு நல்ல நாளிலே வந்து பொண்ணை ஆசீர்வாதம் பண்ணிட்டுப் போகட்டும். ஆகஸ்ட் மாசம் பதினைஞ்சு தேதிக்குள்ளே முகூர்த்தத்தை வச்சுக்கலாம். சுபஸ்ய சீக்ரம்.''

ஏற்பாடு செய்தபடி பட்டாசார்யாவின் பெண்ணின் திருமணம் இனிதே நடந்தேறியது. பெண் புக்ககம் சென்ற பிறகு பொறுப்பு தீர்ந்ததென்று நிம்மதியானாள் ஸ்ரீமதி பட்டாசார்யா.

ஆகஸ்ட் இருபதாந்தேதி பொழுது விடிந்தபோது வானம் நிர்மலமாயிருந்தது. மேகத்தின் சுவடே இல்லை. அது மழைக் காலம் என்றே சொல்ல முடியாது. ஆனால் சுமார் பத்து மணிக்குமேல் வானிலை அடியோடு மாறிவிட்டது. எங்கிருந்தோ கருமேகங்கள் வந்து குவிந்தன. இரவு வந்து விட்டதோ என்று நினைக்குமளவுக்கு இருட்டி விட்டது. அன்று பெய்யப் போகும் மழையில் ஊரே வெள்ளைக் காடாகிவிடும் என்று தோன்றியது. பொதுக்கூட்டத்தில் கலந்து கொள்ள வெவ்வேறு இடங்களிலிருந்து புறப்பட்ட மக்கள், வரவிருக்கும் மழைக்குப் பயந்து தங்கள் பயணத்தைக் கைவிட்டனர்.

சில லட்சம் ஜனங்கள் வருவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்ட கூட்டத்துக்கு சுமார் நாலாயிரம் பேர்தான் வந்திருந்தார்கள்.

ஆனால், என்ன ஆச்சரியம்! பிற்பகல் இரண்டு மணிக்கு [illegible]ம் ஓரளவு தெளிந்தது. பெரும்பாலா[illegible]கங்கள் விலகிவிட்டன. சிறு தூறல் மட்டும் விழத் தொடங்கியது.

விடாக்கண்டரான கோஷ்டித் தலைவர் அந்தத் தூறலிலும் கூட்டத்தை நடத்தினார். ஆனால் அவருக்கிருந்த உற்சாகம் மக்களிடையே காணப்படவில்லை. அவர்கள் தலைவரின் பேச்சைக் கேட்பதைவிடத் தங்கள் உடம்பு நனையாமல் பார்த்துக் கொள்வதிலேயே கவனம் செலுத்தினர்.

மொத்தத்தில் இரு கோஷ்டியினருக்குமே பட்டாசார்யாவிடம் அதிருப்தி, கோபம். ஏன் தூறல் போட்டது என்று ஒரு கோஷ்டிக்கு; ஏன் மழை பெரிதாகப் பெய்யவில்லை என்று இன்னொரு கோஷ்டிக்கு.

அவர்களுடைய கோபத்தைச் சற்றும் பொருட்படுத்தவில்லை மகாதாந்திரிக் பட்டாசார்யா. அவர் தோளைக் குலுக்கிக் கொண்டு சொன்னார், ''இந்தக் காலத்து ஜனங்களுக்கு மந்திர தந்திரத்திலே நம்பிக்கையில்லே. நம்பிக்கையில்லேன்னா மந்திரம் எப்படிப் பலிக்கும்? பைத்தியக்காரங்க! சும்மா காசை விட்டெறிஞ்சா அவங்க நினைச்சதையெல்லாம் சாதிச்சுக்கலாம்னு நினைக்கறாங்க!

"ஃபிரான்ஸில் குணமடையாத இடுப்பு வலி பாண்டிச்சேரியில் ஆப்ரேஷன் இன்றி குணமடைந்தது!!!..."



Colas M Antoinette

Mrs. Colas Marie - Antoinette
Lathouche Street,
Pondicherry - 1

கடந்த 7 வருடங்களாக இடுப்பில் வலி இருந்து வந்தது. இதனால் குனிந்து நிமிரும் போதும், சிறிது தூரம் நடக்கும் போதும், உட்கார்ந்து எழுந்திருக்கும் போதும் மாடிப்படி ஏறி இறங்கும் பொழுதும் பிடிப்புடன் கூடிய வலி இருந்தது. நான் **FRANCE** நாட்டில் வசித்து வந்ததால் அங்குள்ள **ORTHO SPECIALIST** களிடம் சிகிச்சைக்காக சென்று, **M.R.I. SCAN** எடுத்துப் பார்த்ததில் கடைசி இரண்டு எலும்புகள் விலகி இருப்பதாகக் கூறினார்கள். **(L4,L5 DISC PROLAPSE).** இதற்கு மருந்துகளையும், இடுப்பில் போட்டுக் கொள்வதற்கு **Belt**-ம் எழுதிக் கொடுத்தார்கள் ஆனாலும் வலி குறையவில்லை. பிறகு ஆப்ரேஷன், **(OPERATION)** செய்ய வேண்டும் என்று கூறினார்கள். இதற்கிடையே என் கணவர் பணியிலிருந்து **Retired** ஆகி விட்டதால், நாங்கள் பாண்டிச்சேரிக்கு வந்தோம். அப்போது **"MARC HERBAL CARE (P) LTD"** நிறுவனத்தின் விளம்பரத்தை செய்தித்தாள்களில் பார்த்து, என் கணவருடன் அங்கு சென்றேன். அங்கு, டாக்டரிடம் **Consult** செய்து, அவர்கள் கொடுத்த மூலிகை பவுல்டீஸ் **(POULTICE)** – ஐ வெளிப்பிரயோகமாக தினமும் தவறாமல் தடவி வந்தேன். 9 வார தொடர்ச்சியான சிகிச்சைக்குப்பின் என் இடுப்பு மற்றும் கால் வலிகள் நீங்கி பரிபூரண நிவாரணம் அடைந்தேன், நன்றி, வணக்கம்.

★ காலம் காலமாக வேதமகரிஷிகள் சித்தர்கள் கண்டுபிடித்து பரிசோதித்து அனுபவப்பட்டு வெற்றிகண்ட ஆயுர்வேத மூலிகை மருத்துவமுறைப்படி எங்களது நிறுவனம் ஒரு வெளிப்பிரயோக மூலிகை பவுல்டிசை (Poultice) கொண்டு ஆர்த்திரைட்டீஸ், ஸ்பாண்டிலைட்டீஸ், தோள்பட்டை வலி, முதுகுவலி, குதிக்கால்வலி, கைகால் மூட்டுவலி ஆகியவைகளுக்கு தகுதிவாய்ந்த அனுபவம் மிக்க ஆயுர்வேத, சித்தா மற்றும் அலோபதி மருத்துவர்களின் மேற்பார்வைகளின் கீழ் சிகிச்சை அளித்து வருகிறோம்.

★ ஒரு வரைப்போல் மற்றொருவரது உடல்வன்மை இருப்பது இல்லை என்பது யாவரும் அறிந்த உண்மை எனவே கால மாற்ற விளைவுகளால் மனிதனின் உடல்வன்மையில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்ப சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம் என்பதை **MARC HERBAL CARE (P) LTD** நன்கு உணர்ந்துள்ளன.

கலந்து ஆலோசிக்க இப்போதே தொடர்பு கொள்க.
தொலைபேசி
**0413-346683**

காலை 9 மணி முதல், இரவு 7 மணி வரை
வாரத்தில் 7 நாட்களும் திறந்திருக்கும்.

**MARC ஹெர்பல் கேர் (பி) லிமிடெட்**
32, செயின்ட் தெரெஸ் வீதி, பாண்டிச்சேரி – 1
(ராமன் தியேட்டர் எதிர் வீதி, ஃபார்ச்சூன் பேக்கரி எதிரில்)
**Fax : 91 - 0413 - 346683**




---

உ

ஸ்ரீராம ஜெயம் ஸ்ரீமந் நடனகோபால நம:




"ராணி சாரீஸ்"
"RANEE SAREES"
MADURAI
SPECIAL QUALITY :
COLOURS ARE GUARANTEED
FOR DHOBI WASH

**COPY RIGHT REGD. A-52846/95**

# மதுரை ஒரிஜினல்
# "ராணி சாரீஸ்"
# சுங்கிடி சேலைகள்

(ராணி. S. கோபால்ராம் பாரதி, மதுரை)

உயர்ந்த தரம், புத்தம் புதிய கலர்கள், புதுமையான டிசைன்கள் சாயத்திற்கு உத்திரவாதம் (Guranteed for Dhobi Wash) கொண்ட ராணி சாரீஸ் சுங்கிடி சேலைகள்

## நிரந்தரமாக வாங்க

சென்னை **மயிலாப்பூரில்** கிடைக்குமிடம்
**ரங்காச்சாரி கிளாத் ஸ்டோர்**
55, லஸ் சார்ச் ரோடு, மயிலாப்பூர்,
சென்னை – 4.
போன் : 4994343 & 4994545

**பெங்களூரில்** கிடைக்குமிடம்
**ரங்காச்சாரி டெக்ஸ்டைல் (பி) லிட்.,**
526, சம்பிகி மெயின் ரோடு, மல்லேஸ்வரம்
பெங்களூர் – 3.
போன் : 3354868, 3310402

–ஆத்மாஸ்

## மந்திரப் புன்னகை – 9

# எனக்கு வந்த இல்லன்!

மேஜிக் நிபுண

என்னுடைய குருவான மேஜிக் நிபுணர் கணபதி சக்ரவர்த்தியைக் கண்டுபிடித்து, அவரிடம் சிஷ்யனாகி, மேலும் மேஜிக் கலையைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்துடன் நான் எடுத்துக் கொண்ட முயற்சிகள் பலனளிக்கவில்லை. என்னால் கணபதி சக்ரவர்த்தியைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

அடுத்து என்ன செய்வது என்கிற கேள்வி என் முன் எழுந்து நின்றது. மேஜிக்கை அத்துடன் விட்டு விட்டு, படிப்பு, துணி வியாபாரம் இதிலேயே கவனம் செலுத்துவதா? இல்லை, கணபதிஜிக்கு இணையான வேறு ஒரு குருவைக் கண்டு பிடித்து, அவரிடம் தொடர்ந்து மேஜிக் கற்றுக் கொள்வதா என்று சிந்தித்துப் பார்த்தேன். கல்கத்தா, மேஜிக் நிபுணர்கள் நிறைந்த நகரம். அங்கே திறமையான மேஜிக் நிபுணர்கள் பலர் இருக்கிறார்கள். எனவே, தக்கதொரு குருவைக் கண்டறிந்து, அவரிடம் மேஜிக் கலையைத் தொடர்ந்து கற்றுக் கொள்வது என்று நான் தீர்மானித்தேன்.

அடுத்து, குருவைத் தேடும் படலம் துவங்கியது. நான் சந்தித்த ஒருசிலர், 'இவரிடம் நாம் உடனே சிஷ்யராகச் சேர்ந்து விட வேண்டும்' என்கிற உந்துதலை எனக்குள் ஏற்படுத்தவில்லை.

ஒருநாள் ஒரு மேஜிக் கலைஞரது மேஜிக் காட்சிக்குச் சென்றிருந்தேன். பிற்காலத்தில் பெரும் புகழ்பெற்று விளங்கினார் அவர் என்று மட்டுமே நான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். (நாகரிகம் கருதி அவரது பெயரைக் குறிப்பிடவில்லை). அந்த நிகழ்ச்சிக்கு சில மேஜிக் நிபுணர்களும், பிரத்யேக அழைப்பின் பேரில் வந்திருந்தார்கள். நிகழ்ச்சி ஆரம்பித்தது. ஒருசில ஐட்டங்களைச் செய்து காட்டினார். அடுத்தது, 'வான் தபால் மூலமாக' என்று ஒரு ஐட்டம். பார்வையாளர்களின் கண்முன்னே, மேடையில் இருக்கும் வாத்துகளை, மறையச் செய்யும் மேஜிக். அதாவது, மேஜிக் கலைஞர், வான் தபால் மூலமாக, மேடையிலிருந்து வாத்துக்களை அனுப்பி வைப்பார் என்பதால், இப்படி ஒரு பெயர்.

துரதிருஷ்டவசமாக, வாத்துகளை மறையச் செய்ய அந்த மேஜிக் கலைஞரால் முடியவில்லை. ஏதோ குளறுபடி நடந்து விட்டது. அவர் அடுத்து என்ன செய்வது என்று தெரியாமல், விக்கித்துப் போய் விட்டார். பார்வையாளர்களிடமிருந்து, ஏளனமான சிரிப்பும், கேலிக்குரலும் எழுந்தது. சற்று நிதானம் இழந்து விட்ட மேஜிக் கலைஞர், உணர்ச்சி வசப்பட்டு விட்டார். "அனாவசியமாக இங்கே கலாட்டா செய்யாதீர்கள். அரங்கில் இருப்பதற்கு இஷ்டமில்லை என்றால், அரங்கை விட்டு வெளியேறுங்கள்!" என்று உரத்த குரலில் சொல்லி விட்டார். இது பார்வையாளர்களைக் கோபப்படுத்தி விட்டது.

"நாங்கள் பணம் கொடுத்து, டிக்கெட் வாங்கிக் கொண்டு உள்ளே வந்திருக்கிறோம். மேஜிக் செய்யத் தெரியாமல், குளறுபடி செய்து விட்டு, எங்களை வெளியே போகச் சொல்லுகிறீர்களா?" என்று பார்வையாளர்கள் கத்தினார்கள். இன்னொருபுறம், "மேடையை விட்டு வெளியேறு! போதும் உன் மேஜிக்!" என்று இன்னும் சிலர் கத்தி அவமானப்படுத்தினார்கள். இதற்கு மேலும், அங்கே இருக்கப் பிடிக்காத அந்த மேஜிக் கலைஞர், எல்லாவற்றையும் அப்படியே விட்டு விட்டு, மேடையின் பின்புறமாக, அரங்கத்தை விட்டு வெளியேறினார். விஷயம் தெரிந்ததும், பார்வையாளர்கள் மத்தியில் ஒரே குழப்பம்.

அந்தச் சமயத்தில், முன்வரிசையில் உட்கார்ந்து, எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்த ஒருவர், சட்டென்று எழுந்து மேடைக்குச் சென்றார். மைக்கைப் பிடித்து, "நானும் ஒரு மேஜிக் கலைஞன்தான்! எதிர்பாராதவிதமாக, என்னுடைய சக கலைஞர் ஒருவர், தம் நிகழ்ச்சியை இப்படிப் பாதி

யிலேயே நிறுத்திவிட்டுச் செல்ல நேரிட்டது துரதிருஷ்டவசமானது. அவருடைய சார்பில் நான் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன். உங்கள் அனுமதியுடன், நான், உங்களை மகிழ்விக்கும் வகையில் இப்போது



கே. லால்

சில மேஜிக் ஐட்டங்களைத் தொடர்ந்து செய்து காட்ட விரும்புகிறேன். சம்மதமா?" என்று பார்வையாளர்களை நோக்கிக் கேட்க, பார்வையாளர்கள், சந்தோஷக் குரல் எழுப்பி, சம்மதத்தைத் தெரிவித்தனர்.

பாதியில் வெளியேறிய மேஜிக் கலைஞரது உபகரணங்களில் சிலவற்றையே பயன்படுத்தி, மேஜிக் ஷோவைக் கொஞ்ச நேரம் நடத்தினார். அனைவரும் அவரது ஷோவை ரசித்தனர். நிகழ்ச்சி முடிந்து, அனைவரும் அரங்கத்திலிருந்து புறப்பட்டு விட்டனர். என் மனத்தில், அன்று நடந்த சம்பவங்கள் இனம்புரியாத ஓர் உணர்வை ஏற்படுத்தின. 'இதோ, இவர்தான் நீ தேடிக் கொண்டிருக்கிற குரு' என்று என் உள்ளுணர்வு சொன்னது. நான் நேரே அவரை நோக்கிச் சென்றேன். மேடையிலிருந்த, ஓடிப் போன மேஜிக் கலைஞருடைய • உபகரணங்களை, பேக் செய்து அவரது வீட்டுக்கு அனுப்பும் ஏற்பாடுகளை அவர் கவனித்துக் கொண்டிருந்தார். நான் அவரிடம் என்னை அறிமுகப்படுத்திக் கொண்டேன். அவரிடம் சிஷ்யனாகச் சேர்ந்து, மேஜிக் கற்றுக் கொள்வதற்கு நான் ஆர்வமாக இருப்பதைக் குறிப்பிட்டேன். மறுநாள், தம்மை வந்து சந்திக்கும்படி அவர் கூறினார்.

அந்த மனிதர் பெயர் கிதா குமார். கல்கத்தாவின் மிகத் திறமையான மேஜிக் கலைஞர்களில் ஒருவர். அவரை மரியாதையுடன் 'கிதா பாபு' என்று குறிப்பிடுவது வழக்கம். மறுநாள் கிதா பாபுவைச் சந்தித்து, ஆதியோடு அந்தமாக என் கதையைக் கூறினேன். அவருக்கு என்னைப் பிடித்துப் போய் விட்டது. எனக்கு மேஜிக் கலை மீது உள்ள அடங்காத ஆர்வத்தைப் புரிந்து கொண்ட அவர், என்னை சிஷ்யனாக ஏற்றுக் கொள்வதற்கு தமது சம்மதத்தைத் தெரிவித்தார்.

வீடு திரும்பியவுடன், என் பெற்றோரிடம் விஷயத்தைச் சொன்னேன். "படிப்பு, வியாபாரம் இரண்டும் இருக்கிறது. தவிர குடும்பத்தில் மூத்த மகன் என்கிற முறையில் உனக்குப் பொறுப்புகள் அதிகம். மேஜிக்தான் வாழ்க்கை என்று எடுத்துக் கொண்டு விட்டால், குடும்பப் பொறுப்புகளை எப்படி நிறைவேற்ற முடியும்? நாளை, உனக்கு ஒரு திருமணம் நடந்தால், உன் குடும்பத்தைக் கவனிக்கக் கூட உனக்கு நேரமிருக்காது. இதுவரை ஏதோ பொழுதுபோக்கு போல, மேஜிக் கற்றுக் கொண்டாய். இனி, அதனைத் தொடர வேண்டுமா?" என்று கேட்டார்கள்.

நான், "தயவுசெய்து என்னுடைய ஆர்வத்துக்குத் தடைபோடாதீர்கள். தினமும் படிப்பு, கடை வேலை இரண்டுக்கும் இடைஞ்சல் இல்லாதபடி, ஓர் இரண்டு மணி நேரம் போல, நான் கிதா பாபு

வீட்டுக்குப் போய், மேஜிக் கற்றுக் கொள்கிறேன். என்னுடைய பொறுப்புகள் எல்லாவற்றையும் முடிக்கிறவரை நான் மேஜிக்கை, என் தொழிலாகக் கொள்ள மாட்டேன். இது சத்தியம்!" என்று அவர்களுக்கு உறுதிமொழி அளித்ததன் பேரில், கிதா பாபுவிடம் மேஜிக் கற்றுக் கொள்வதற்கு எனக்கு அனுமதி வழங்கப்பட்டது.

தினமும் காலையில் எழுந்து, ரெடியாகி, கிதா பாபு வீட்டுக்குப் போய் விடுவேன். அங்கே மேஜிக் பாடம் படிப்பேன். அங்கிருந்து நேரே பள்ளிக்கூடத்துக்குப் போய் விடுவேன். மாலையில் பள்ளிக்கூடம் விட்டவுடன், எங்களுடைய துணிக்கடைக்குப் போவேன். மாலை வியாபாரம் சூடு பிடிக்கிற நேரம் அது. கடையில் பிசியாக இருப்பேன். இரவு கடை மூடியபின் மற்றவர்கள் வீட்டுக்குப் புறப்பட்டுச் செல்வார்கள். ஆனால், நான் மட்டும், கிதா பாபு வீட்டுக்குப் போய் விடுவேன். குருவிடம் மறுபடி மேஜிக் பயிற்சி. இரவு வீட்டுக்குத் திரும்புகிறபோது குறைந்தபட்சம் மணி பத்தாகிவிடும்.

பள்ளிக்கூடமும் போய்க் கொண்டு, கடையிலும் வியாபாரத்தை கவனித்துக் கொண்டு, சலிக்காமல், மேஜிக்கும் கற்றுக் கொள்கிறானே காந்திலால் (நான்தான்!) என்று எங்களுடைய குடும்பத்தினர் அனைவருக்கும் என் மீது பரிவும், பாசமும் அதிகமானது.

இதற்கிடையில், நான் படித்துக் கொண்டிருந்த கல்கத்தாவின் ஆங்கிலோ – குஜராத்தி பள்ளிக்கூடத்தில் நான் மிகவும் பிரபலமாகி விட்டேன். எல்லாம் மேஜிக் உபயத்தில்தான். ஒரு கட்டத்தில் எங்கள் பள்ளிக்கூடத்தின் தலைமை ஆசிரியரே, என் மேஜிக் திறமையை மெச்சிப் பாராட்டினார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். பள்ளிக்கூடத்தில் எந்த முக்கியமான விழா என்றாலும், என்னுடைய மேஜிக் நிகழ்ச்சி தவறாமல் இடம்பெறும். பள்ளிக்கூடத்துக்கு எந்த ஒரு முக்கியப் பிரமுகர் வந்தாலும், 'எங்கள் பள்ளிக்கூடத்தின் பெருமைக்குரிய மாணவன், மேஜிக் நிபுணன் காந்திலால் வோரா' என்று தவறாமல் என்னை அவர்களுக்கு அறிமுகப்படுத்தி வைப்பார் எங்கள் தலைமையாசிரியர்.

இந்த பாபுலாரிடியின் விளைவாக, எனக்கு, மேஜிக் மீது இன்னும் ஆர்வம் அதிகமானது. எந்த நேரமும் மேஜிக் பற்றியே சிந்திக்க ஆரம்பித்தேன். கிதாபாபுவிடம் நான் செலவிடும் நேரம் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போனது. மாலை நேரத்தில் கடையில் இருந்தே ஆகவேண்டிய கட்டாயத்தின் காரணமாக, பகல் நேரங்களில், பள்ளிக்கூடத்துக்குப் போகாமல், கிதா பாபு வீட்டுக்குப் போகத் தொடங்கினேன். அவரும், "பள்ளிக்கூடத்தில் போய்ப் படிக்கிற ஏட்டுக் கல்வியால் வாழ்க்கைக்குப் பெரிய அளவில் பயன் ஒன்றும் இல்லை. உனக்கு வியாபாரம் இருக்கிறது. ஆனாலும், நீ மேஜிக் துறையில்தான் பேரும் புகழும் பெற்று விளங்கப் போகிறாய்!" என்று அடிக்கடி சொல்லிக் கொண்டேயிருப்பார்.

நான் இஷ்டத்துக்குப் பள்ளிக்கூடத்துக்கு கட் அடிக்க ஆரம்பித்தேன். ஆனாலும் என்னுடைய நினைவாற்றல் அபாரமானது என்பதால், பரீட்சை சமயத்தில் சில நாட்கள் படித்தாலே போதும்; பாஸ் பண்ணி விடுவேன். பள்ளிக்கூடத்துக்கு சரிவரச் செல்லாதது பற்றித் தகவல் தெரிந்தபோதும், பரீட்சையில் பாஸ் பண்ணி விடுவதாலும், கடை வேலையில் முழுமையான ஈடுபாட்டோடு இருப்பதாலும், பெற்றோர்கள், அதை ஒரு பெரிய குறையாக எடுத்துக் கொள்ளவில்லை.

ஆனாலும் மெட்ரிகுலேஷன் தேர்வு என்ற உருவில் எனக்கு வில்லன் வந்தான். ஆம்! நான் மெட்ரிகுலேஷன் தேர்வு எழுத வேண்டிய வருடத்தில், எனக்குத் தேர்வு எழுதுவதற்கு அனுமதி கிடைக்கவில்லை. காரணம், அந்த வருடம், நான் ஐம்பது சதவீதத்துக்கும் அதிகமான நாட்கள் பள்ளிக்கூடத்துக்கு லீவு! வீட்டுக்கு விஷயம் தெரிந்தது. என் அப்பாவுக்கு என் மீது ஒரே கோபம்!

(தொடரும்)

---

**"தலைவர்தான் தேர்தல்ல தோற்றுப் போயிட்டாரே, அப்படியும் ஏன் பட்டாசெல்லாம் வெடிச்சு கொண்டாடறார்?"**

**"டிபாசிட் கிடைச்சிடிச்சாமே!"**

***– சீர்காழி வி.ரேவதி***







# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்

16, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர், (வழி) தாம்பரம், சென்னை-63.
Tel & FAX: 2376129, Cell Ph: 98410-53309
E.mail: sspeetam@md3.vsnl.net.in, sspeetam@hotmail.com
Please visit our website at: www.intamm.com/sspeetam

## தீபாவளி நல்வாழ்த்துக்கள்

பேரன்புடையீர் ! வணக்கம், வரும் தீபாவளி திருநாளில் தங்களுக்கு அனைத்து நலன்களும் உண்டாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் பிரார்த்திக்கின்றோம்.

தங்களின் அன்பினாலும், ஆதரவினாலும், குருகுலத்தில் 137 மாணவ, மாணவியர்கள் நல்ல முறையில் படித்து வருகின்றார்கள். குருகுல மாணவர்களின் முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு ஒரு உயர்நிலைப்பள்ளியும் மற்றும் 13/09/99 விநாயக சதுர்த்தி அன்று கம்ப்யூட்டர் பயிற்சி மையமும் துவக்கப்பட்டுள்ளது.

## தீபாவளி திருநாளில்

- குருகுல மாணவர்களோடு உங்களுடைய மகிழ்ச்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்.
- குருகுல மாணவர்களின், உணவு மற்றும் இதர செலவுகளுக்கு, கல்வி கற்பதற்கு கம்ப்யூட்டர் பயிற்சி பெறுவதற்கு, கட்டிடம் கட்டுவதற்கு, மற்றும் நிரந்திர வைப்பு திட்டத்திற்கு தங்களின் மேலான நன்கொடைகளை அளிக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி ( 137 பேருக்கு ) | ரூ | 750/- |
| • மதிய உணவு (இனிப்புடன்) | ரூ | 1,500/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ | 500/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு கம்ப்யூட்டர் பயிற்சி (ஓராண்டிற்கு) | ரூ | 3,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ | 6,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ | 1,50,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

தங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/ DD / MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

● ஆர். ராமசாமி, திருவண்ணாமலை.

*? அணைக்கட்டுகள் ஜனநாயக விரோதம் என்கிறாரே அருந்ததிராய்?*

! அணைக்கட்டுகள் ஜனநாயக விரோதமல்ல. அவற்றால் இடம்பெயர நிர்ப்பந்திக்கப்படும் மக்களின் வாழ்வும் கலாசார வளமும் பொருளாதாரமும் பாதிக்கப்படும் என்பதே பிரச்னை. அவை பாதிக்கப்படாத வகையில் அவர்களுக்குப் புனர்வாழ்வு உண்டு என்பது உறுதிசெய்யப்பட்டால், அவர்கள் இடம்பெயரும் தியாகத்துக்குத் தயாராவார்கள்.

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்.

*? இந்திய கிரிக்கெட் அணியின் புதிய தேசிய பயிற்சியாளராக முன்னாள் கேப்டன் கபில்தேவ் இரண்டாண்டு காலத்துக்கு நியமிக்கப்பட்டிருப்பது பற்றி...?*

! வாழ்த்துக்கள்! அனுபவ ரீதியாகவும் அறிவுபூர்வமாகவும் அருமையான யோசனைகளைக் கூறி டீம் ஸ்பிரிட் வளர்த்து, சாதனைகள் நிகழ்த்த அவரால் உதவ முடியும்.

• தூண்டும் பேச்சு!

● ராஜி ராதா, திருச்சி – 14.

*? ஜெ. இல்லாமல் ஒரு வார கார்ட்டூன் கூட வராது போலிருக்கிறதே?*

! ஜெயுடைய அபத்த அரசியல் அறிக்கைகள் அல்லது நீதிமன்றத்தில் அவருடைய அதர்மமான கோரிக்கைகள் இல்லாமல் ஒருநாள் கூட நகர்வதில்லையே!

● எஸ். மனோகரன், கோவை – 38.

*? நாளை நமதே, நாளும் நமதே நாற்பதும் நமதே என கொக்கரித்த ஜெயலலிதா, கருத்துக் கணிப்புகள் பெரும்பாலும் தி.மு.க. கூட்டணிக்கே வெற்றி வாய்ப்பிருப்பதாகச் சுட்டிக்காட்டியிருப்பதைப் பார்த்து மனத்துக்குள் என்ன நினைப்பார்?*

! தேசிய ஜனநாயக முன்னணி மெஜாரிட்டி பெற்றாலும் கூட மிக அதிகமான அளவில் நாடாளுமன்ற உறுப்பினர்களைப் பெற்றுள்ள தனியொரு கட்சிதான் ஆட்சி அமைக்க ஜனாதிபதியால் அழைக்கப்பட வேண்டும் என்று காங்கிரஸ் சார்பில் கபில் சிபல் அறிக்கை விட்டுள்ளதைப் படித்து ஆறுதல் பெருமூச்சு விடுவார்.

● அவ்வை. கே. சஞ்சீவிபாரதி, கலிங்கியம்.

*? ராஜாஜி, காமராஜர் ஆட்சிக் காலத்தில் கூட வோட்டுப் பதிவு விகிதம் குறைவாக இருந்தது என்கிறாரே முதல்வர்?*

! அதன் பிறகு ஆட்சிக்கு வந்தவர்களாவது மக்கள் அனைவரும் ஆர்வத்தோடு வாக்குச்சாவடிக்குச் செல்கிற ஒரு சூழ்நிலையை உருவாக்கியிருக்க வேண்டாமா என்பதுதான் கேள்வி!

● இரா. பார்த்திபன், சேத்துப்பட்டு.

*? நடிகை டி.ஆர். ராஜகுமாரி...?*

! தமிழ்நாட்டின் அந்த நாளைய மாரிலின் மன்ரோ.

● ஜி. ராமதாஸ், கணபதி அக்ரஹாரம்.

## 'ஜெ' இல்லாமல் ஒரு வார கார்ட்டூன் கூட வராதா?

*? பிரச்னைகளை அரசியலாக்குவது என்றால் எப்படி....?*

! "காவிரி நீரைக் கொண்டுவர முடியாததற்காக கருணாநிதி ராஜினாமா செய்ய வேண்டும்" என்று ஜெ சொன்னது குதர்க்க அரசியல்;

"நான் ராஜினாமா செய்தால் உடனே காவிரி நீரைத் திறந்துவிடுவதாக கர்நாடகா முதல்வர் கூறட்டும், உடனே ராஜினாமா



• அப்புறம் என்ன ஆச்சி?



• பெருமூச்சு விடலாம்!


• கையில் உள்ளபோது—


• ஜொலித்த நட்சத்திரம்!

செய்கிறேன்'' என்று முதல்வர் கூறியது பதிலடி அரசியல்;

''நான் உண்ணாவிரதம் இருந்தபோது கருணாநிதி கேலி செய்தார்'' என்று 'ஜெ' பதிலுக்குப் புலம்புவது பரிதாப அரசியல்!

● **எம். அருள்மூர்த்தி, அன்னூர்.**

*? சொர்க்கம், நரகம் இரண்டும் இருக்கின்றனவா?*

! 'சொர்க்கமும் நரகமும் நம் வசமே' என்ற கண்ணதாசன் பாடல் வரிகளைக் கேட்டதில்லையா?

● **புளியரை கணேசன், சென்னை - 30.**

*? 'கர்நாடகத்துக்கு இராணுவத்தை அனுப்ப வேண்டும். இல்லையேல் தமிழக மக்களே கிருஷ்ணராஜ சாகர் அணைக்குச் சென்று தமக்குத் தேவையான தண்ணீரைத் திறந்து விட வேண்டும்' என்று பண்ருட்டி இராமச்சந்திரன் கூறியுள்ளது பற்றி...?*

! அவர் சொல்வதால் தமிழக மக்கள் உடனே ஓடிப்போய் செயல்படுத்தப் போவதில்லை என்றாலும் இத்தகைய உணர்வைத் தூண்டும் பேச்சுக்கள் பொறுப்பற்றவையே.

● **எஸ். திருமலை, கோவை - 43.** ❑

*? எதற்கெடுத்தாலும் பஸ் எரிப்பு, பொதுச் சொத்துக்களுக்குச் சேதம், மக்களுக்குத் தொல்லை தருவது என்பவைதான் 'தலித்' பெயரால் அரசியல் நடத்துவோரின் குணம் என்று ஆகிவிட்டதே?*

! இப்படியொரு அவப்பெயர் ஏற்படும் என்பதற்காகவாவது அந்த சங்கத் தலைவர்கள் வன்முறையை ஊக்குவிக்காமல் இருக்கலாமல்லவா! மாறாக, 'தற்காப்புக்காகத்தான் வன்முறையில் இறங்குகிறோம்' என்று நியாயப்படுத்துகிறார்களே!

● **கு. அருணாசலம், தென்காசி.**

*? இங்கு தமிழ்நாட்டில் வறட்சி; தண்ணீர்த் தட்டுப்பாடு. மறுபுறம் அமெரிக்காவில் மழை - வெள்ளம். இயற்கை ஏன் இப்படி மனித இனத்தைச் சோதிக்கிறது?*

! அமெரிக்காவுக்குப் போவானேன்... இந்தியாவிலேயே வடக்கே பெருவெள்ளம் தானே; மக்கள் தவிப்புத்தானே!

● **டி.எஸ். சேகர், தென்கடப்பந்தாங்கல்.**

*? சமீபத்தில் தங்களைத் துயரத்தில் ஆழ்த்திய சம்பவம் எது...?*

! சென்னை கே.கே. நகர் சாலையோரவாசிகள் மேல் லாரி ஏறி பலியான கோரம்தான்! யாரும் இனி சாலையோரத்தில் குடியிருக்கக் கூடாது என்று அரசு கட்டுப்படுத்துமாம். அது இன்னும் துயரம்! மாற்று ஏற்பாடு என்ன என்பதுதான் உறுத்தலான கேள்வி. வேலை தேடி கிராமத்திலிருந்து சென்னை வந்த கூலியாட்கள்தான் இறந்து போயிருக்கிறார்கள். இப்படி வருவதைத் தவிர்க்க என்ன வழி என்ற அடிப்படையில் பிரச்னையை அணுக வேண்டும்.

● **இ. ராதாகிருஷ்ணன், பட்டுக்கோட்டை.**

*? ''மதவெறி அபாயகரமானது; ஜாதி*

• விரோதமா? நிர்ப்பந்தமா?



• சாதனை நிகழ்த்தலாம்!

*வெறி அதைவிட அபாயகரமானது'' என்கிறாரே முதல்வர் கருணாநிதி?*

! வெறி என்று வந்துவிட்டாலே அபாயம்தான் - அது என்ன வெறியாயிருந்தாலும்... எல்லாவற்றையும் விட அபாயம் இந்த வெறிக்கெல்லாம் மூலமான பதவி வெறி!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
எஸ். திருமலை,
ஏ.ஓ, டி.வி.எஸ். அண்ட் சன்ஸ் லிமிடெட்,
எம்.டி.பி. ரோடு, கோவை - 641 043.

# இன்னொரு குழந்தை

அந்த 'ஆறு மாத அற்புதம்' ஹரிணிக்கு ஒரு போதும் அலுப்பேற்படுத்தியதில்லை. வேளைகெட்ட வேளையில் துணியை ஈர மாக்கிக் கொண்டபோதிலும், வயிற்று வலியா பசியா என இனம் பிரிக்க முடியா மல் கின்னஸ் அழுகை அதனிடமிருந்து வெளிப்பட்டபோதும் அவள் முகம் சுணங்கியதில்லை. ஏன், மனமும்.

ஆனால் இன்று அவன் ஒரு பிரச்னை யாகி விட்டான். "அதுக்காக உன்னை ஒரு பாரமாக நினைப்பதாக அர்த்தமில்லேடா செல்லம். ஒரே ஒரு மாலைப் பொழுது உன்னைவிட்டுட்டு என் ரொம்ப நாள் ஆசையைத் தீர்த்துக்கப்போறேன், அவ்வளவு தான்'' என்று சமாதானப்படுத்துவதாய் சமாதானப்படுத்திக் கொண்டாள்.

"ஹரிணி, இன்னக்கி சாயந்திரம் நாரத கான சபாவிலே நடக்கப் போற ஜுகல் பந்திக்கான ஒரு டிக்கெட் எனக்குக் கிடைச் சிருக்கு. என்னைவிட நீ இதை அதிகம் ரசிப் பேன்னு எனக்குத் தெரியும். போயிட்டு வா'' என்றபடி மேலதிகாரி நாராயணசாமி நீட் டிய இசைவிழா அழைப்பிதழைப் பார்த்து அமாவாசைக் கடலாய் ஹரிணியின் மனம் பொங்கியது. தபலா, வயலின், மிருதங்கம், கடம் ஆகியவற்றில் உலகப்புகழ் பெற்ற இந்தியக் கலைஞர்களின் கூட்டு முயற்சியாக, போட்டி முயற்சியாக அந்த நிகழ்ச்சி மலரப் போகிறது என்பது உறுதிபடத் தெரிந்தது. மூன்று நிமிடங்கள் முழுமையாகக் கழிந்த பிறகுதான் "தாங்க்ஸ் சார், ரொம்ப தாங்க்ஸ்'' என்று தழுதழுத்தாள்.

**அருண் சரண்யா**

சார் நகர்ந்த ஐந்தாவது நிமிடம் அவளது கணவனிட மிருந்து தொலைபேசி அழைப்பு. அன்று மாலை அவனுக்கு முக்கிய அலுவலக வேலை. எனவே இரவு பத்து மணிக்குத்தான் வீடு திரும்பு வான். பதினொன்றும் ஆகலாம்.

"ராஜ், நாரதகானசபாவிலே இன்னிக்கி சாயந்திரம் எனக்குப் பிடிச்ச ஒரு ஜுகல் பந்தி நிகழ்ச்சிக்கு டிக்கெட் கிடைச்சிருக்கு.''

"ஜமாய். போய்ட்டு வந்து விவரமாகச் சொல்லு.''

வைத்து விட்டான். கைக்குழந்தையை என்ன செய்யப் போகிறாய் என்ற அடிப் படைக் கேள்வியைக் கூடக் கேட்கவில்லை. அல்லது வேண்டுமென்றே தவிர்த்துவிட் டானோ? இப்போது என்ன செய்ய?

அம்மா உள்ளூர்தான் என்றாலும் இப் போதைக்கு மைசூரிலிருக்கும் இரண்டாவது அண்ணனுடன் இருக்கிறாள். உள்ளூர் மூத்த அண்ணன் கோடைவிடுமுறைக்காகக் குடும் பத்தோடு ஊட்டி சென்றிருக்கிறான்.

அலுவலகத்தை ஒட்டியே க்ரஷ் இருப் பது மிக சௌகரியம்தான். என்றாலும் மாலை ஐந்தரைக்கு மேல் ஒரு நொடி கூடப் பார்த்துக் கொள்ள மாட்டார்கள். ஆறு மாதக் குழந்தையையெல்லாம் இந்த அளவு பார்த்துக் கொள்வதே அதிகம்.

குழந்தையோடு இசை நிகழ்ச்சிக்குச் செல்வதும் சரியாகப் படவில்லை. தொடர்ந்து இரண்டரை மணி நேரம் அவன் அழாதிருப்பது சாத்தியமே இல்லை– அதுவும் திறந்தவெளிக்காற்று இராத, பலரது அனல் மூச்சுக் காற்று சங்கமமாகுமிடத்தில், என்பது தெரிந்திருந்தது.

செய்தி அதில் இருந்ததாகப் பட்டது.

'சரி, முடிந்தவரை பார்ப்போம். இந்தப் பயல் அழுதானென்றால் இளம்பி வீட்டுக்கு வந்துவிடுவோம். கேட்டவரை லாபம்."



முதலிலிருந்து ஐந்தாவது வரிசையிலேயே தனக்கான இடம் என்பதை அறிந்ததும் நிறைவாக இருந்தது. கூடவே இவ்வளவு அருகில் இசையைக் கேட்டால் இது ரகளை பண்ணாமலிருக்க வேண்டுமே என்ற சந்தேகக் கவலையும் எட்டிப் பார்த்தது.

ஆறரைக்கு என்று போட்டிருந்தாலும் நிகழ்ச்சி தொடங்குவதாயில்லை. தபலா வித்வான் நட்சத்திர ஓட்டலிலிருந்து ஏ.ஸி. காரில் வந்து கொண்டிருக்கும்போது போக்குவரத்தில் மாட்டிக் கொண்டிருப்பதாகத் தகவல் வந்தது.

''யாராவது அந்த ப்ராண்ட் டீயை வாங்கிட்டு வாங்கப்பா. அதன் வாசனைக்காகவே அவர் எப்படியாவது உடனே வந்துடுவார்'' என்று அந்த வித்வான் தோன்றிய விளம்பரத்தை நினைவில் கொண்டு கிண்டலடித்தார் ஒருவர்.

குழந்தையைக் கனவு பொங்கப் பார்த்தாள் ஹரிணி.

''கச்சேரியின்போது சும்மாயிருடா'' என்று மெதுவாகக் கூறினாள்.

இடது பக்கத்திலிருந்த பெண்மணி ''என்ன, ஆறு மாசமிருக்குமா?'' என்றாள் குழந்தையைப் பார்த்தபடியே.

''ஆமாம்'' என்றபோது அந்தப் பெண்மணிக்கும் ஆறுமாதம் இருக்கும் என்று ஹரிணியின் மனம் கணக்கிட்டது. குழந்தை வயிற்றுக்குள் இருந்தால் என்னதான் சங்கடமென்றாலும் நிகழ்ச்சி முடியும்வரை சமாளித்துக் கொள்ளலாம் என்று நினைத்துக் கொண்டாள்.

''அப்படியாவது எதுக்கு வரணும்?'' என்று பின் வரிசையில் யாரோ விமர்சிக்க, சுருக்கென்றது. ''வீட்டுக்குப் போய் தென்னைமரக்குடி எண்ணெய்யைத் தடவிண்டா மூட்டுவலி சரியாயிடப் போகுது. அதுக்காக இந்த நிகழ்ச்சியை விட்டுட முடியுமா?'' என்று ஒருவயதான பெண்மணி

மிகவும் ஏக்கத்தோடு ''இன்றைய கச்சேரியை மிஸ் செய்துவிடலாமா?'' என்று எண்ணினாள். ஆனால் அப்படிச் செய்தால் தனக்காக டிக்கெட்டை தியாகம் செய்த நாராயணசாமி சாருக்கு துரோகம் செய்ததாகிவிடும்!

''என்னடா கண்ணா, உன்னை என்ன செய்வதாம்?'' என்று இளநீர் வழுக்கைபோல் மென்மையாக இருந்த அதன் கன்னத்தைத் தடவியதும், ஒருவித சிலிர்ப்போடு அவளது முகத்தோடு ஒட்டிக் கொண்டது குழந்தை. 'என்னையும் அழைச்சிக்கிட்டுப் போ' என்ற

பதிலளித்துக் கொண்டிருந்தாள்.

"என்ன பேரு?" என்றவாறே தன் இருகை களையும் குழந்தையின் புறமாக நீட்டினாள் பக்கத்து இருக்கைக்காரி.

குழந்தையை அவளிடம் கொடுத்தவாறே "கானடா" என்றாள் ஹரிணி. டக்கென்று ஆச்சரியப்பட்டு, பிறகு அதைவிட வேகமாக மகிழ்ச்சிப் பட்டாள் அந்தப் பெண். "ஆஹா, அற்புதமான ராகத்தின் பெயர்" என்று கூறி விட்டு "கானடா, என் பாட்டு தேனடா, இசை தெய்வம் நானடா" என்று மெது வாகப் பாடினாள்.

அவளுக்கு இன்னொரு புறம் அமர்ந் திருந்த அவள் கணவரும் தீவிர இசைப் பிரியராக இருக்க வேண்டும். குழந்தையின் கன்னத்தைத் தட்டியபடியே "அலைபாயுதே கண்ணா" என்று சற்று உரக்கவே பாடினார். இன்னொரு கானடா பாடல்! "பேஷ்" என் றார்கள் யாரோ.

ஹரிணிக்கு நிம்மதியாக இருந்தது. தனக் குப் பிடித்த இந்த ராகத்தின் பெயரை வைக் கப் போவதாக ஹரிணி அறிவித்ததும், "வச்சுக்கோயேன். சாரங்கா, கல்யாணி, வசந் தான்னெல்லாம் ராகங்களின் பெயரை வைக்கும்போது கானடாவுக்கு மட்டும் என்ன குறை? புதுமைக்குப் புதுமை, இனி மைக்கு இனிமை" என்று பச்சைக் கொடி காட்டிவிட்டான். ஆனால் அவள் வட்டத்தி லுள்ள பல இங்கிதமற்றவர்கள்தான் "இதென்ன கனடா, அமெரிக்கான்னுட்டு? அடுத்த குழந்தைக்கு ஜிம்பாப்வேன்னு பேர் வப்பியா?" என்று கூறி வெறுப்பேற்றினார் கள்.

"அசல் நம்ம ராகினி பையன் பப்லு மாதிரியே இருக்கான்" என்று குழந்தையை காதுப்புறமாக தடவிக் கொடுத்துக் கொண் டிருந்தாள் பக்கத்தவள். ஹரிணிக்குப் பதற்ற மாக இருந்தது. காதுப் பகுதியைக் கொஞ்சம் அழுத்தமாகத் தடவினால் குழந்தை அழத் தொடங்கிவிடும்.

திடீரென்று அரங்கில் பாதி விளக்குகள் அணைந்தன. திரைக்குப் பின்னாலிருந்து தம்புராவின் ஸ்ருதி சேர்க்கும் ஒலி. அரங்கம் சட்டென்று அமைதியானது. "ங்கா" என்றது குழந்தை. அந்த மெல்லிய குரலே ஏதோ ஒலிபெருக்கியில் கேட்டதுபோலிருந்தது.

பக்கத்துப் பெண்மணிக்கு இப்போது குழந்தையைவிட நிகழ்ச்சியே அதிக முக்கிய மானது என்பது புரிந்திருக்க வேண்டும். "குழந்தை அழுவானா?" என்றபடி அவனை ஹரிணியிடம் கொடுத்தாள். தான் எப்படி பதில் சொன்னாலும் அது அந்தக் கேள்வி யைவிட அபத்தமானதாகவே இருக்கும் என்று ஹரிணிக்குத் தோன்றியது.

படபடவெனக் கைதட்டல்கள். ஜில்பா தலையை ஆட்டியபடி தபேலா வித்வான் ஒரு 'கும்' கொடுக்க, சந்தனப் பொட்டுக்கார வயலின்காரர் புன்னகை செய்தபடி "ரொயிங்" என்று மீட்ட, மிருதங்க வித்வான் ரவை தடவிக் கொண்டே மற்றொரு கையால் மக்களை நோக்கிக் கையசைக்க, தன் தொப்பைக்கு மேல் அதேபோன்ற கடத்தை எடுத்து வைத்துக் கொண்ட வித் வான் இருமுறை அதை (கடத்தை, தொப் பையை அல்ல) தட்டிப் பார்த்து விட்டுத் தன் சற்றே தளர்ந்த குடுமியை இறுக்கிக் கொள்ள... உற்சாகக் கரெவாலி மீண்டும் எழுந்தது.

குழந்தையின் காதுகளை லேசாக

---

## தொடரும் பாராட்டுக் கடிதங்கள்!




● விலைமதிப்பற்ற மலரும், எம்.எஸ். அவர்களின் ஒலி நாடா வும் மலரின் விலையை மலி வாக்கிவிட்டது! இந்த மலர் தமிழர் கள் அனைவரும் பாதுகாத்து வைக்கக் கூடிய பொக்கிஷம்!

ஈரோடு – 2, க. ரவீந்திரன்.

● இன்றைய இளைய தலை முறையினரும் எதிர்காலத் தலை முறையினரும் படித்துப் பாது காக்க வேண்டிய உன்னத கலைப் பெட்டகம்தான் கல்கி நூற்றாண்டு மலர். அவர் வாழ்ந்த நாட்களில் அவர் எழுத்தினை சுவாசிக்க முடியாத என் போன்ற இளம் வாசகர்களை, அவர் வாழ்ந்த காலத்திற்கே அழைத்துச் சென்று விட்டது மலர்.

விசலூர், ஜி.ஜி. கிருஷ்ணன்.

● மலர் கண்டேன். அருமையாயிருக்கிறது. அத் துடன் கோகிலவாணி எம்.எஸ். அவர்கள் பாடல்கள் அடங்கிய 'கேஸட்'டும் கிடைத்தது பெரிய போனஸ்.

திருச்சி – 17, மீனா கிருஷ்ணதாஸ்.

● மலர், சிந்தைக்கும் விருந்தென்றால், கரும்பு தின்னக் கூலியாக திருமதி எம்.எஸ். அவர்களின் 'காற்றினிலே வரும் கீதம்' ஒலிப் பேழை! அப்பப்பா, ஆனந்தம் ஆனந்தம் ஆனந்தமே!

திருவண்ணாமலை – 1, ராதா ராமலிங்கம்.

## வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...





**அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!**

**அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி, முகப்பேர் (கிழக்கு) மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க அணுகுங்கள்**




## YESDE ASSOCIATED BUILDERS LTD.

(FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS)

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.
Phone: 4340224/4333636. Fax: 044-2344333

E.Mail:yesde@md3.vsnl.net.in Web:www.yesdebuilders.com

BUY & SELL

## All Foreign Currencies & Travellers Cheques




- Authorised by RBI as Full fledged Money Changers
- Authorised Dealers for Travelers Cheques
- Open on all 7 days of the week.

**Forex Division**

**Yesde Associated Builders Ltd.**

105, "Challamall" 11 & 11A Thyagaraya Road, (Pondy Bazaar),
T. Nagar, Chennai - 600 017
Ph: 4340210, 4342667 Tele Fax: 91-44-4340210

E.Mail:yesde@md3.vsnl.net.in

மூடியபடியே அதை மடியில் படுக்கப் போட்டுக் கொண்டு தொடையை ஆட்டத் தொடங்கினாள் ஹரிணி. தூங்கிவிட்டால் பரவாயில்லை. ஆனால் தூங்குவதாகத் தெரியவில்லை.

மேடையில் இசைத் தூறல் பெருகி இசை வெள்ளமாகிக் கொண்டிருந்தது. "ஹம்ஸத்வனி, ஆஹா, பரமசுகம்", "அட, இந்தோளம்". ரசிகர்களில் சிலரது மெல்லிய குரல்கள் அவர்களது வித்வத்துவத்தையும், ரசனையையும் பறைசாற்றிக் கொண்டிருந்தது.

அத்தனையும் ஹரிணிக்குத் தெரிந்த பரவச ராகங்கள். மூளை பளிச்சென்று கண்டுபிடித்தாலும், மனத்தில் அந்தப் பளிச் எதிரொலிக்கக் காணோம். 'இதென்ன? இசையில் நனைந்து கரைவதுதானே நம் இயல்பு. ஏன் இப்படித் தள்ளி நின்று கவனிக்கிறோம்?' தன்னிச்சையாகக் குழந்தையின் நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள். மிக லேசாகச் சுடுவது போலிருந்தது. 'தப்போ? இந்த ஏ.ஸி. சூழலில் குழந்தையை அழைத்துக் கொண்டு வந்திருக்கக் கூடாதோ? சேச்சே. நம் கையின் அதிகப்படி ஜில்லிப்பால் குழந்தையின் ஆரோக்கியமான வெப்பம் கூட காய்ச்சலாகத் தெரிகிறதோ என்னவோ? நிச்சயம் அதுவேதான்.' குழந்தையை மேலும் இறுக்கிக் கொண்டாள்.

"அட அட அங்கே யமன்ராக். இங்கே யமுனா கல்யாணி. சபாஷ் சரியான போட்டி." தன் கைப்பையில் ரப்பர் நிப்பிள் இருக்கிறதா என்பதைத் தடவிப் பார்த்து உறுதி செய்து கொண்டாள். குழந்தை அழுதால் வாயில் அடைக்க வேண்டுமே. இது தெரிந்தால் ராஜாராம் கோபித்துக் கொள்ளக் கூடும். "இதென்ன புதுப் பழக்கம்?" எனலாம்.

குழந்தை அவள் புடைவைத் தலைப்பை சிண்டியது. அதன் முகத்தில் ஓர் உல்லாசம். நீரை இறக்கிக் கொண்டிருக்கிறானோ? டயபர் அணிவித்து விட்டால் கவலை யில்லை.

"ஆஹா"- இப்போது மேடைக் கலைஞர்களே ஒருவரை ஒருவர் பாராட்டிக் கொண்டிருந்தனர்.

நிகழ்ச்சி முடிந்துவிட்டிருந்தது. அதுவரை பேசாமலிருந்த ஹரிணிக்கு வலது பக்கமாக அமர்ந்திருந்த பெரியவர் "பரவாயில்லை, குழந்தை வெகுசமர்த்தாக இருந்திருக்கிறானே" என்றார்.

"அட ஆமாம்."

"கச்சேரி பிரமாதம்" என்றும் போகிற போக்கில் கருத்து கூறிவிட்டுப் போனார்.

'அப்படித்தான் இருந்திருக்க வேண்டும்' என்று தோன்றியது ஹரிணிக்கு.



''ஹீரோயினை மேக்கப் இல்லாமல் காட்டினது தப்பாப் போச்சு...''

''என்னங்க ஆச்சு?''

''எல்லாரும் திகில் படம்னு பேச ஆரம்பிச்சுட்டாங்களே!''

– குடந்தை கே. ஆர். ரவிக்குமார்



''அந்த டாக்டர் சரியான காதல் பைத்தியமா இருப்பார் போலிருக்கு.''

''எப்படி சொல்றே?''

''ஆபரேஷனின் உண்மையான வெற்றியே அதன் தோல்வியில்தான் இருக்குன்னு சொல்றாரே!''

- பூனாம் பாளையம் ஆர்.பி. ஜெயச்சந்திரன்



"இந்த ஹோட்டல் ஒரு அமைச்சரோட பினாமி பேர்ல இருக்காம்."

"பேப்பர் ரோஸ்ட்டுல ஏகப்பட்ட 'கவர்மெண்ட் அட்வர்டைஸ்மெண்ட்' வரும் போதே சந்தேகப்பட்டேன்!"

– சீர்காழி வி.ரேவதி



**மேஷம்** : (அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)

பல கிரகங்கள் நிபந்தனையற்ற ஆதரவு தர்றதால இந்த வாரம் வர்த்தகம், பிஸினஸ் துறைல இருக்கறவங்களுக்குப் பல சிக்கல்கள் இருந்த இடம் தெரியாம போயி, புதுப் புது வளர்ச்சிப் பாதைகள் தட்டுப்படும். நிறைய பணம் புரளும். வீட்டுல விசேஷங்கள் நடக்கும். ஆபீஸ்ல பதவி உயர்வோ, சம்பள உயர்வோ கிடைக்கும். சிலருக்கு வெளிநாட்டுலேருந்து ஏதாவது அழைப்பு வரலாம். பெண்களுக்குப் புதிய ஆடைகள் யோகம் கண்டிப்பா இருக்கும்.



**ரிஷபம்** : (கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)

ம்ஹூம்! இன்னும் ஒண்ணும் சரிப்படலைங்க. போன வாரத்துப் பிரச்னைகள் அப்படியே தொடருது. என்ன, ஒரே ஒரு ஆறுதல்னா, இப்ப உங்க மனநிலை, சிரமங்களைத் தாங்கிக்கப் பக்குவப்பட்டுடும். 'சரி போ, இப்ப இருட்டுன்னா, கொஞ்ச நேரத்துல விடிஞ்சுடும்'னு சமாதானமாயிடுவீங்க. ஆனா, பண விஷயத்துல அந்த மாதிரி அலால்டா இருக்காதீங்க. குடும்ப உறவுகள் அவ்வளவா இப்ப உங்களுக்குப் பிரச்னை தராதுன்னாலும் தொழில்ரீதில நிறைய போட்டி, பொறாமைகளை சந்திக்க வேண்டியிருக்கும்.



**மிதுனம்** : (மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)

நீங்க கொஞ்சம் கொஞ்சமா ஒரு ஸ்டார் அந்தஸ்து வாங்கிட்டு வர்றீங்க. தொட்டதெல்லாம் துலங்கற நேரம்ங்கறதால பலர் பார்த்து வியந்து போற்றும் சந்தோஷ நேரம் இது. குறிப்பா, எழுத்தாளர்களுக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகளும் புகழும் ஓஹோன்னு உயரும். அடுத்த ரெண்டு வாரத்துல உங்க அந்தஸ்து எக்கச்சக்கமா உயரும். எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர் துறைக்காரங்களும் தொழில்ல அமோக வளர்ச்சி காண்பாங்க. பெண்களுக்குப் பதவி உயர்வோ ஊதிய உயர்வோ இருக்கும். விளையாட்டுத் துறையினருக்கு போட்டிகள்ல வெற்றி உறுதி. இரவுப் பயணங்களை கூடியவரை தவிர்க்கறது நல்லது.



**கடகம்** : (புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)

அரசாங்க ரீதில நல்ல அனுகூலம் வர்ற நேரம். அரசு ஊழியர்களுக்கு ஆதாயமான காலகட்டம். புதிய பொறுப்புகள் வந்து சேரும். பதவிகளுந்தான். ரொம்ப நாளா இழுத்தடிச்ச கேஸ்கள் இப்ப சுமுகமா தீர்ந்துடும். கலைத் துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் வந்து சேரும். சமூக சேவகர்களுக்குப் புகழ் உறுதி. சிலருக்கு, ஆன்மீக நாட்டம் மேலோங்கி, புண்ணிய யாத்திரை போலாமான்னு பிளான் போடுவாங்க. அரசியல்வாதிகளுக்குத் தேர்தல் வெற்றி உற்சாகம் கொடுக்கும். அதே சமயம் சில பிரச்னைகளையும் சந்திக்க வேண்டி வரும்.



**சிம்மம்** : (மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)

பேச்சாற்றலால பல காரியங்களை சாதிக்கப் போறீங்க. மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் பொங்கும். வீர சாகசங்கள்ல நாட்டமுள்ளவங்களுக்கு அல்வா மாதிரி சான்ஸ் கிடைக்கும். சிலர் புது வாகனம் வாங்குவாங்க. வயசுப் பசங்களுக்குக் கல்யாண ஏற்பாடு நடக்கும். நண்பர்கள் தக்க சமயத்துல உதவுவாங்க. போட்டி பந்தயங்கள்ல வெற்றி உறுதி. அரசுப் பணியாளர்கள், ராணுவ வீரர்களுக்கு நல் அதிர்ஷ்டங்களும் லாபமும் கிடைக்கும். பணப் பிரச்னை இல்லாத வாரம் இது. உபயோகமான இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஏதாவது செய்யுங்க. கடன் கொடுக்கற விஷயத்துல மட்டும் கவனமா இருங்க.



**கன்னி** : (உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)

வீட்டு நிலவரம் அவ்ளோ பிரமாதமா இருக்கும்னு சொல்ல முடியாது. சில்லறை மனஸ்தாபங்களைத் தவிர்க்க முடியாம அவஸ்தைப்படுவீங்க. பெரியவங்களை மரியாதைக்குறைவா பேசாம இருங்க. நாலு பேர் அபிப்பிராயம் கேட்காம எந்த முக்கியக் காரியத்துலயும் இறங்காதீங்க. மாணவர்களுக்குப் படிப்புல

# நடக்குமென்பாள் நடக்கும்!

நாட்டம் குறையற நேரம் இது. மனசை அலைபாய விடாம கட்டிப் பிடிக்க வேண்டியது அவசியம். சிலருக்கு நாய்க்கடி, சிறு விபத்துகள் ஏதாவது நடக்கலாம்.



**துலாம்** : (சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)

பிராப்ளமே இல்லாத வாரம். துணிஞ்சி எந்தப் புது முயற்சியையும் தொடங்கலாம். பெரியோர் ஆதரவு, பேங்க் உதவி, நண்பர்கள் சப்போர்ட் எல்லாம் கிடைக்கும். ஏற்றுமதி வியாபாரிகளுக்கு நல்ல லாபம் வரும் வாரம் இது. ஆசிரியர்கள், எழுத்தாளர்கள்

வளர்ச்சி பெறுவாங்க. பெண்களுக்கு மன உற்சாகம் கிடைக்கறாப்பல வீட்டுல சில விசேஷங்கள் நடக்கும். வராத கடன் பாக்கிகள் வந்து சேரும். விஞ்ஞானிகளும் விவசாயிகளும் நிலை உயரப் பெறுவாங்க. சினிமாக்காரங்களுக்கு மட்டும் சில பிரச்னைகள் இருக்கும்.



**விருச்சிகம்** : *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்களுக்குக்கென்னங்க? ஏர்-இண்டியா மகாராஜா மாதிரி ஹாயா இருப்பீங்க! உல்லாசமான நேரம் வேற. விருதுகள், விருந்துகள், நண்பர்கள் வருகை, காரிய பலிதம்னு இந்த வாரம் ரொம்ப உற்சாகமாகவே இருக்கும். வீட்டுல நல்ல காரியங்கள் நடக்க சந்தர்ப்பம் கூடி வரும். பிரபுக்கள் சகாயம், அதனால லாபம்னு தொடர்ச்சியா நல்ல பலன்களா நடக்கும். கலைத்துறையினரும் எஞ்ஜினியர்களும் நல்ல வளர்ச்சி காண்பாங்க. உத்தியோ

**கன்னிராசிக்காரரான டி.ராஜேந்தர் நாலு பேர் அபிப்பிராயம் கேட்காம, முக்கிய காரியங்களில் இறங்கக் கூடாதாம்!**



கஸ்தர்களுக்கு மேலதிகாரிகள் எதிர்பாராத இன்ப அதிர்ச்சி அளிப்பாங்க. பெண்களுக்கு அலுவலக ரீதில சில எதிர்ப்புகள் இருந்தாலும், சாதுர்யமா சமாளிச்சிடுவாங்க.



**தனுசு** : *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

வேகவேகமா திட்டங்கள் போடுவீங்க. ஆனா செயல்படுத்துற துல சில தடங்கல்கள் வரலாம். குறிப்பா ஷேர் பிஸினஸ் பண்றவங்களுக்கு இப்ப சறுக்கல் வரலாம். பொருளாதார ரீதில பெரிய பிரச்னைகள் இருக்காதுன்னாலும் வரவும் செலவும் சமமாத்தான் இருக்கும். உத்யோக மாறுதல் ஏதும் எதிர்பார்த்திட்டிருந்தீங்கன்னா, அது இப்ப சாத்தியமாகாது. வெளிநாடு பயணக் கனவையெல்லாம் மூட்டைக் கட்டி வைச்சிட்டு, வீட்டுல கல்யாணம் பேச ஆரம்பிச்சிருந்தாங்கன்னா, ஒழுங்கா பண்ணிக்கிட்டு செட்டிலாகற வழியைப் பாருங்க.



**மகரம்** : *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

சுமாரான வாரம்தாங்க. எதிர்காலம் பற்றின கவலை - பயம் சிலருக்கு அளவுக்கதிகமாகவே இருக்கும். கவலைப்படறதை விட்டுட்டு உபயோகமா யோசிக்க ஆரம்பிச்சீங்கன்னா பல திட்டங்கள் தோன்றும். எந்த முக்கிய முடிவுன்னாலும் பெரியவங்களைக் கேட்காம எடுக்காதீங்க. கடல் வாணிபம் செய்யறவங்களுக்கு நல்ல லாபம் கிடைக்கற வாரம். அதே சமயம் சிலருக்கு எதிர்பாராத நஷ்டமும் வரலாம்.



**கும்பம்** : *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

சில விஷயங்களை நீங்க மாத்திக்க வேண்டிய நேரம் இது. ஊர் விவகாரங்கள்ல தலையிட வேணாம். ஆபீஸ்ல யாரையும் எடுத்தெறிஞ்சி பேசாதீங்க. குடும்பத்தை அக்கறையா கவனிங்க. பொறுப்புகளைப் பகிர்ந்து கொடுத்துட்டு, சும்மா சூபர்வைஸ் பண்ணுங்க; போதும். வழக்குகள் ஏதாவது இருந்தா அது இப்ப சுமுகமா தீரும். பெண்களுக்குப் பிதுர்ராஜித சொத்து ஏதாவது கிடைக்கலாம். உத்யோகரீதில சிலருக்கு இடமாறுதல்கள் இருக்கும். வீட்டு உபயோகப் பொருட்கள் நிறைய வாங்குவீங்க. விளையாட்டு வீரர்களுக்குக் கால்ல சிறு காயம் ஏற்பட வாய்ப்பு இருக்கு.



**மீனம்** : *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

செயல்திறன் மேலோங்கி இருக்கும். எடுத்த காரியத்துல வெற்றி உறுதி. குடும்பத்துல மகிழ்ச்சி நிலவும். சிலருக்கு திருமணப் பேச்சுவார்த்தை தொடங்கலாம். பணப் பிரச்னை இருக்காதுன்னாலும் செலவைக் கட்டுக்குள்ள வைக்க வேண்டியது அவசியம். நண்பர்கள் தக்க சமயத்துல உதவுவாங்க. சிலருக்கு குடும்பத்தோட பிக்னிக் போற வாய்ப்பு வரும். கடல், ஆறு குளியல் மட்டும் வேணாம். வெளி இடங்கள்ல தங்கற போது எச்சரிக்கையாக இருங்க. திருட்டுப் போற சான்ஸ் இருக்கு. பெண்கள் பொது விவகாரங்கள்ல தலையிட்டு அக்கம் பக்கத்து வீட்டுக் காரங்களோட சண்டை போடும் வாய்ப்பு இருக்கு; கவனம்.

# ஞா

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

விஷ்ணு என்றால் உத்தமன் என்றும் சொல்கிறது வேதம். உத்தம சப்தத்தினாலே அழைக்கப்படக்கூடியவன் விஷ்ணு.

யக்ஞம் நடந்துகொண்டிருக்கிறது. யக்ஞ யஜமானர், அவருடைய தர்மபத்னி எல்லோரும் வருகிறார்கள். அப்போது அக்னி பகவான் அவர்களை வழி நடத்துகிறான். முன்னே அழைத்துப் போகிறான். தேவதைகளெல்லாம் பின்னாலே வருகிறார்கள் - யக்ஞவாடிகைக்குள்ளே.

அப்போது, தேவதைகளுக்கு முன்னே, உத்தமமான விஷ்ணு அவர்களை அழைத்துக் கொண்டு வருகிறார்.

'அக்னி முன்னே போகிறான். உத்தமமான விஷ்ணு அவன் பின்னே வருகிறான்; தேவதைகளுக்கு முன்னாலே வருகிறான்' என்று சொல்கிறபோது - அந்த இடத்திலே உத்தமமான விஷ்ணு என்று அவனைச் சொல்லியிருக்கிறது.

'விஷ்ணு வருகிறான்' என்று சொன்னால் போதாதா? 'உத்தமமான விஷ்ணு, முன்பாக வருகிறான்' என்று ஏன் சொல்லப்படுகிறது?

உத்தம: என்றால் பகவானுக்குப் பிரத்யேகமான பெயர்.

'ஓங்கி உலகளந்த உத்தமன் பேர் பாடி' என்று ஆண்டாள் சொல்கிறாள். உத்தமன் என்றாலே விஷ்ணு என்றுதான் அர்த்தம்.

'ஓங்கி உலகளந்த விஷ்ணுவின் பேர் பாடி' என்று சொல்லியிருக்கலாமே! 'உத்தமன் பேர் பாடி' என்று ஏன் சொன்னாள்? என்றால், வேதத்தில் 'உத்தம: விஷ்ணு ராசிது' என்று இருப்பதனாலே, அதே சப்தத்தையே திருப்பாவையிலே அப்படியே சொல்கிறாள்.

பகவான் பாருங்கள், அதே சப்தத்தை உபயோகப்படுத்துகிறான் பகவத் கீதையில்.

உத்தம: புருஷ: அந்ய: - அப்படி என்றால், 'உத்தமன் என்கிற புருஷன் வேறொருவன்!' என்று பொருள்!

அப்படியானால் வேறொரு புருஷன் இருக்கிறான் என்று அர்த்தம் ஏற்படுகிறது - அவனைத் தவிர வேறொரு புருஷன்!

'நமக்கெல்லாம் புருஷன்' என்று பெயர். ஆனால் 'இவன் புருஷன்' என்றால், இந்த புருஷன் வேறு; அந்த புருஷன் வேறு! - அதாவது பகவான் என்கிற புருஷன் வேறு. அந்தப் புருஷன்தான் உத்தமன்.

உது, உத்தர: உத்தம: 'உது' என்றால் யார்? உத்தரான் என்பவர் யார்? உத்தம: என்பது யாரைக் குறிக்கும்? - இதை உபநிஷதே நமக்கு எடுத்துச் சொல்கிறது.

'உது' என்றால் இந்த சம்ஸார பந்தத்திலிருந்து






# ஒன்றுமில்லை

விடுபட்டு மோக்ஷத்தை அடைந்திருக்கிற அந்த முக்தாத்மாவுக்கு உது என்று பெயர்.

உது, உத்தரான் என்றால் எப்போதும் பகவானிடத்திலே இருந்து கைங்கர்யம் பண்ணக்கூடிய அனந்த-கருட-விஷ்வக் சேனாதிகள் என்று சொல்லக்கூடிய நித்ய சூரிகள். இவர்களுக்கு உத்தரான் என்று பெயர்.

உத்தரான் என்ற இந்த இரண்டு விதமானோரைக் காட்டிலும் விலக்ஷணமானவன், மிகவும் உயர்ந்தவன்... அவன் யார்? என்றால், அவன்தான் உத்தமன்.

உது, உத்தர : உத்தம : என்பதற்கு இதுவே விளக்கம்.

இதை நாம் சொல்லவில்லை. வேதம், உபநிஷத் சொல்கிறது!

நாமெல்லாம் சம்சார பந்தத்திலேயே இன்னமும் உழன்று கொண்டிருக்கிறோம். மோக்ஷம் நமக்கு ஏற்பட வேண்டும்.

அதற்குண்டான காரியத்தை இப்பொழுதே நாம் பண்ண வேண்டும். பிற்பாடு பண்ண முடியாது! இப்போதே பகவத் சரணாரவிந்தத்திலே ஆத்ம சமர்ப்பணம் பண்ணிவிட்டால், அந்த நித்ய சூரிகள் கோஷ்டியிலே போய் நாம் நிற்க முடியும்.

அப்போது நமக்கு 'உத்' என்று பெயர் ஏற்படும். அதுவரைக்கும் பெயரே இல்லை என்கிறது சாஸ்திரம்!

நாம் பல பெயர்கள் வைத்துக் கொண்டிருக்கிறோம். இவையெல்லாம் அழியக் கூடிய பெயர்கள். அதனால் நிஜத்தில் பெயரில்லாமல் வாழ்ந்துகொண்டிருக்கிறோம்.

எப்போது நமக்குப் பெயர் வருகிறது என்று கேட்டால், திருவோலகத்திலே நம்மாழ்வார் சொல்கிறார் :

'தக்கினமே கேளீர்கள்
கொக்கினங்காள் குருகினங்காள்
குளிர்மூழிக் களத்துறையும்...'

– குளிர்மூழிக்களம் என்று மலைநாட்டுத் திருப்பதியிலே ஒரு திருப்பதி. அங்கே இருக்கிற எம்பெருமானிடத்திலே கொக்கையும் நாரையையும் தூது விடுகிறார் ஆழ்வார்.

கொக்கையெல்லாம் தூது விடலாமா? அது போகுமா? என்றால், ஆழ்வார் அந்த மாதிரி தூது விட்டிருக்கிறார்!

கொக்கு, நாரை இவைகளிலே சொல்லப்படக்கூடியது யார் என்று கேட்டால், ஆசார்யர்கள்.

ஆசார்யர்கள்தான் நாரைகளாகவும் கொக்குகளாகவும் பேசப்படுகிறார்கள். அவர்களை அனுப்பி, 'தக்கினமே கேளீரோ?' – 'அங்கே போய்க் கேளுங்கள்' என்கிறார்.

'கொக்கினங்காள், குருகினங்காள்... குளிர்மூழிக்களத்துறையும் எம்பெருமானிடத்திலே கேளுங்கள்; இந்தக் கோரிக்கையிலே நிற்க நான் தகுதியுடையவனா என்று கேளுங்கள்' என்கிறார். கேட்டு வரும்படி தூது அனுப்புகிறார்.

அந்தக் கோரிக்கையில் நாம் நிற்கப் பெற்றால், 'சாது கோஷ்டி' என்று பெயர் பெறுவோம்! சாது கோஷ்டி என்றால் வைகுண்டத்திலே நித்ய சூரிகளோடு நிற்கும்படியான கோஷ்டி! அந்த கோஷ்டியிலே நாம் நிற்க வேண்டும். அப்போது உத் ஆகிறோம். பெயர் பெறுகிறோம். 'உத்தரான்' நமக்கு முன்னேயே போய் அங்கேயே இருந்து கொண்டிருப்பவர்கள். உத்தமன் பரமாத்மா! சமஸ்தத்தையும் தாங்கக்கூடியவன் என்று வேதம் சொல்கிறதே, அந்த பரமாத்மா.

பரமாத்மா என்று ஏன் அவனைச் சொல்கிறோம்?

## அருள்வாக்கு

**ப**வர்ஹவுஸிலிருக்கும் எலெக்ட்ரிஸிடி நம் அகத்து பல்பில் எரிகிறது என்றால் அதையும் இதையும் கனெக்ட் பண்ண ஒயர் இருந்தாக வேண்டும்; ரெட்ஹில்ஸ் ஜலம் நம் அகத்தில் கொட்டுகிறது என்றால் இரண்டையும் கனெக்ட் செய்யப் பைப்-லைன் இருந்தாகணும். இப்படியே குருவினால் சிஷ்யனுக்கு புத்திப் பிரகாசம், அறிவு தாரை உண்டாகிறது என்றால் அவரையும் இவனையும் சேர்த்து வைக்க ஒரு 'லிங்க்' இருக்கத்தானே

அவனைக் காட்டிலும் மேலான ஆத்மா இல்லை என்பதால்.

அப்படிப்பட்ட எம்பெருமான், எல்லாவற்றையும் தாங்குகிறான். 'குறைவில்லாதவன், ஈச்வரன், சர்வத்துக்கும் நியாமகன் – நியமிப்பவன்' என்று தானே கீதையிலே சொல்லியிருக்கிறான் அவன்.

ஸ்ரீரங்கத்துக்குப் பக்கத்திலே கொள்ளிடகாவிரியின் கரையிலே, உத்தமர்கோயில் என்று ஓர் அழகான சன்னிதி இருக்கிறது. அங்கு எழுந்தருளியிருக்கும்படியான எம்பெருமானுக்கு உத்தமன் என்றே பெயர்.

'உத்தமன் என்றால் பரமாத்மா விஷ்ணு' என வேதம் சொல்வதையே ஆழ்வார் – ஆசார்யர்களும் நமக்குக் காட்டிக் கொடுக்கிறார்கள்.

**ப**கவத் பாஷ்யக்காரர் ராமானுஜர் ஒன்பது கிரந்தங்கள் எழுதியிருக்கிறார். அந்த ஒன்பது கிரந்தங்களும் நவமணிகள். நவமணிகள் கோத்தது மாதிரி, நவரத்தினங்கள் போன்று, ஒன்பது ரத்தினங்களை நமக்குக் கொடுத்திருக்கிறார்.

அதிலே உத்தமமானது ஸ்ரீபாஷ்யம். பிரும்ம சூத்ரத்துக்கு எழுதிய அழகான பாஷ்யம். ராமானுஜ பாஷ்யம் என்று அதைச் சொல்வதில்லை. ஸ்ரீ பாஷ்யம் என்ற பெயரிலேயே அதனுடைய பெருமை நமக்குத் தெரிகிறது.

அவ்வளவு அழகாக பிரும்ம சூத்ரத்துக்கு பாஷ்யம் எழுதியிருக்கிறார். அந்த வசனங்களெல்லாம் ரொம்ப அழகு!

அதை ஆரம்பிக்கிறபோதே ரொம்ப பவ்யமாக, வணக்கத்துடன், ஒடுக்கத்துடன் பேசுகிறார் ராமானுஜர்.

மகான்களுடைய பேச்செல்லாம் எப்போதுமே பவ்யமாய் இருக்கும். அகங்கார – மமகாரம் அற்றதாக ரொம்ப பவ்யமாய்

வேண்டும்?

குரு வாயால் விஷயங்களை விளக்கினால் அந்தப் பேச்சு ஒரு 'லிங்க்'. வாழ்க்கை உதாரணத்தால் புரியவைத்தால் இதுவும் ஒருவித கம்யூனிகேஷன்தானே? ஆனதால் இதையும் ஒரு லிங்க் என்று சொல்ல வேண்டும். வெளிப்படத் தெரிவித்தாலும், உள்ளார்த்தமாகக் காட்டினாலும் சிஷ்யனுடைய அறியாமை போவதற்காக குரு பண்ணுகிற எதையும் உபதேசம் என்றே சொல்ல வேண்டும். உபதேசமாகப் பிரஸங்கம் பண்ணாமல் வாழ்க்கை உதாரணத்தாலேயே உபதேசித்து விடுவதைத்தான் "verbal message இல்லை; அவருடைய life-ஏ message என்று சொல்வது.



ஆக ஸ்தூலமாகவோ ஸூக்ஷ்மமாகவோ குருவுக்கும் சிஷ்யனுக்கும் 'லிங்க்'காக உபதேசம் என்பது இருக்கிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

இருக்கும். உயர்ந்ததாக, ஒழுக்கம் நிறைந்ததாக இருக்கும்.

பகவத் பாஷ்யக்காரர் ராமானுஜர், 'விருத்திக் கிரந்தம் என்று சொல்லும்படியான பூர்வர்களுடைய கிரந்தங்களெல்லாம் நமக்கு விஷயங்களை அழகாகக் காட்டிக் கொடுத்தன. காட்டிக் கொடுத்தவர்கள் நம் ஆசார்யர்கள்தான். இப்போது அந்த விஷயமானது அக்ஷரம் அக்ஷரமாக விவரிக்கப்படுகிறது' என்கிறார்.

'சூத்ரத்தில் இருக்கிற அக்ஷரங்கள் வியாக்யானம் பண்ணப்படுகிறது' என்று செயப்படு பொருளில் அவர் பேசுவதைப் பாருங்கள்.

'நான் வியாக்யானம் பண்ணுகிறேன்' என்று அவர் சொல்லவில்லை.

'நான் சொல்கிறேன்' என்று யாராவது ஒருத்தர் சொல்ல ஆரம்பித்தால் அவர்களிடத்திலே விஷயமே கேட்கக் கூடாது!

'தாஸஸ்ய விக்ஞாபனம் – அடியேனுடைய விண்ணப்பம்' என்று யார் சொல்கிறார்களோ அவர்களிடத்தில்தான் கேட்க வேண்டும் என்பார்கள்.

நீலகண்டன் என்று ஒருத்தர். அவர் என்ன பண்ணினார்... அவரும் பிரும்ம சூத்ரத்துக்கு பாஷ்யம் பண்ணினார். ஆரம்பிக்கிறபோதே எப்படி எழுதுகிறார்...

'வியாச சூத்ரம் என்பது பரபிரும்மத்தைப் பார்ப்பதற்கு ஓர் உயர்ந்ததான நேத்ரம். அந்த வியாஸ சூத்ரம் என்ற கண் இல்லையானால் பரபிரும்மத்தை நாம் பார்க்க முடியாது. அப்படிப்பட்ட பரபிரும்மத்தைப் பார்க்க உதவும் வியாஸ சூத்ரமாகிற பிரும்ம சூத்ரத்தை, பூர்வாசார்யர்கள் எல்லாம் சேர்ந்து குழப்பிவிட்டார்கள். அந்தக் கண்ணைக் கலக்கிவிட்டார்கள். இப்போது நான் வந்திருக்கிறேன். என்னால் அனுக்கிரஹிக்கப்படுகிறது. நீங்கள் எல்லாம் படியுங்கள்!' என்றார்.

இப்போது, இந்த வாக்கியத்திலே, பூர்வாசார்யரிடத்திலே அவருக்கு பக்தி இல்லை என்பதும் தெரிகிறது; 'நான் அனுக்கிரஹம் பண்ணுகிறேன், படியுங்கள்' என்று சொல்வதில் அகங்காரமும் தெரிகிறது. ஆகையினாலே அகங்காரமும், பூர்வாசார்யரிடத்திலே மதிப்பின்மையும் தெரிகிறது பாருங்கள்!

ஸ்ரீபாஷ்யத்தை எடுத்துக் கொண்டோமானால், அதிலே எந்த இடத்திலும் இந்த மாதிரி கிடையாது.

– இது மகான்களுடைய உயர்ந்த லட்சணம். பார்க்கவே ரம்மியமாக இருக்கும் – பவ்யமான வார்த்தைகளைப் பேசும்போது.

போதன்ன என்பவர் பாகவதம் எழுதினார். 'எழுதப்பட்டதோ பாகவதம். அதை எழுத வைத்தவன் ராமபத்ரன். இல்லையானால் எழுத முடியுமா?' என்றார்.

சுவாமிதேசிகன் ரஹஸ்ய த்ரய சாரம் எழுதி, கடைசியிலே

'பிரகாசிப்பது பிழையற பேசுவித்த பாசுரங்கள்' என்றார்.

'இதிலே நான் என்ன பண்ணினேன்... என் மாமா ஆத்ரேய ராமானுஜர் எனக்கு கிளிக்குச் சொல்லிக் கொடுக்கிற மாதிரி சொல்லிக் கொடுத்தார். அதை நான் இங்கே கூறினேன். எனக்கென்ன இருக்கிறது?' என்றார்.

'அந்த வெள்ளைப் பனிமுக தேசிகன் – அந்த ஹயக்ரீவன் இருக்கிறானே அவன் என் உள்ளத்தில் எழுதினான்; அதை அப்படியே ஓலையில் எழுதினேன். நான் இதைச் செய்யவில்லையே!' என்கிறார்.

மகான்களுடைய பேச்சு, எங்கே எடுத்துக் கொண்டாலும் ஒரே மாதிரி இருக்கும்.

'நான் சொல்கிறேன்; நான் சொல்கிறேன்' என்று சொல்ல மாட்டார்கள்.

ஸ்ரீபாஷ்யத்தை ஆதியோடந்தம் பார்த்தோமானால் இப்படியே பவ்யமான பேச்சு!

(தொடரும்)

# ந(க்)கல்

வருடத்தில் 365 நாளும் ஏதாவதொரு தேர்தல் நாட்டில் நடந்து கொண்டிருக்கிறது. பாராளுமன்றம், நாடாளுமன்றம், கார்ப்பரேஷன், முனிசிபாலிடி, பஞ்சாயத்து, லேபர் யூனியன், ஆபீஸர்ஸ் யூனியன், காலேஜ் யூனியன் என்று ஒரே தேர்தல் மயம்.

பார்த்தார்கள் சில பணம் படைத்தவர்கள்! "காசு மேல



காசு வந்து கொட்டுகிற நேரமிது" என்று ஆராய்ந்து முடிவெடுத்து 'எலக்ஷன் சானல்' ஆரம்பித்தார்கள்.

இந்த எலக்ஷன் சானலில் 'எக்ஸிட் போல்' அதாவது நகல் வாக்கெடுப்பு ஒளிபரப்பு ஆரம்பமாகிறது :

"வணக்கம். எல்லோரும் கோர்ட் கேஸை இழுக்கப் போராடுகிற இந்தக் காலத்தில் நாங்க, சுப்ரீம் கோர்ட்டோட மோதி குறுகிய காலத்தில் நகல் வாக்கெடுப்பு முடிவுகளை ஒளிபரப்ப அனுமதி வாங்கியுள்ளோம்.

அந்தப் பக்கம் 'தேமே'ன்னு கும்பலா உட்கார்ந்திருக்கிறவங்க பரிதாப கட்சியின் பிரதிநிதிகள். அதாவது வாக்காள பெருமக்கள்!

இந்த நகல் வாக்கெடுப்பு விஞ்ஞான ரீதியா, அனுபவசாலிகளைக் கொண்டு நூதன முறையில் நடத்தப்பட்டிருக்கு. நிஜ எலக்ஷன் ரிசல்ட் தப்பானாலும் ஆகலாம், வோட்டுப் போட்ட விரலோடு சுமார் 20,000 வாக்காளர்களை விசாரிச்சு தயாரித்த, எங்க நகல் வாக்கெடுப்பு தப்பாக சான்சே இல்லை.

இப்போ நகல் வாக்கெடுப்பு நடத்திய முறை மற்றும் முடிவுகளை எங்கள் எக்ஸ்பர்ட் திரு. போலப்பன் விளக்குவார். அதற்கு முன் அவரைப் பற்றிய ஒரு சிறு குறிப்பு.

திரு. போலப்பன், அனுபவசாலி. பிறந்த நாள் முதல் தேர்தலோடு சம்பந்தப்பட்டவர். 'பிறந்த நாள் முதலா? அதெப்படி சார்?'ன்னு கேட்பீங்க...

யெஸ். அவங்க அம்மா நிறைமாத

கர்ப்பிணியா கடமை தவறாம வோட்டுப் போடப் போன போது வோட்டுச்சாவடி யிலேயே பிறந்தார் போலப்பன்! போல் அப்ப பிறந்ததால இந்தக் காரணப் பெயர் போலப்பன்! பிறந்த குழந்தைக்கு அங்கிருந்த மையிலேயே திருஷ்டிப் பொட்டு வைத்தார் பூத் அதிகாரி. அந்தக் காலத்து மையோட தரம் பாருங்க, திருஷ்டிப் பொட்டு அழியாம இன்னும் திரு. போலப்பன் கன்னத்திலே தெரியுது. இவரைக் காட்டிலும் பெரிய செஃபாலஜிஸ்ட் உலகத்தில இருக்க முடியுமா?

இப்போ திரு. போலப்பன்..."

போலப்பன் பேசுகிறார் :

"வணக்கம்! நேரடியா விளக்கத்திற்குப் போவோம். அப்புறம் முடிவுகள். முடிவுகள் சரியா அமைய செய்முறை கரெக்டா இருக் கிறது ரொம்ப அவசியம். சர்வதேச முறைகள் பல இருந்தாலும், வழக்கம் போல உலகத்திலேயே பெரிய ஜனநாயகமான நமக்கு எதுவும் சரிப்பட்டு வரலை. நம் நாட்டிற்கு உகந்த செய்முறையை உருவாக்க ரொம்ப கஷ்டப்பட்டோம். ஒருவழியா அமைஞ்சது.

"எங்களுடைய முதல் சவால், எல்லா தரப்பு மக்களும் பங்கேற்கிற மாதிரி ஒரு 'சாம்பிள்' கிடைப்பது. இதற்காக வோட்டுச் சாவடியிலிருந்து வெளியே வரும் வழியெங்

# வாக்கெடுப்பு

கும் கண்ணுக்குத் தெரி யாத நிறைய பெரிய குழிகளைத் தோண்டி னோம்.

அதைக் குறையின்றி செய்த பெருமை மெட்ரோ வாட்டர், ஹைவேஸ், டெலி போன்ஸ் டிபார்ட்மெண்டைச் சேரும்! வோட்டுப் போட்டு விட்டு வரும் வாக் காளர்கள் யாரெல்லாம் தெய்வாதீனமா குழிலே விழறாங்களோ அவங்களே எங்க சாம்பிள். இதுல ஜாதி, மத, அந்தஸ்து, படிப்பு, வயது வேறுபாடு இல்லாம சகல தரப்பு வாக்காளர் பிரதிநிதிகளும் விழுந் தாங்க."

"குழில விழுந்தவங்க ஆத்திரப்படாம எப்படி சார் கேள்விகளுக்கு பதில் சொன்னாங்க?" - கேட்டது வாக்காளர் பிரதிநிதி!

"சரியா கேட்டீங்க. குழில விழறவங் களுக்கு விசேஷ பரிசுத் திட்டம் வைச்சிருந் தோம். குழியோட சைஸை பொறுத்து டூ இன் ஒன், கலர் டீவி, வாஷிங்மெஷின், தங்கம் இப்படி. அதோட வெளியே அவங் களை எடுத்தவுடன் காப்பி, கூல்ட்ரிங்க்ஸ் கொடுத்து, பரிசும் கொடுத்த போது குதூகலத்தோட பதில் சொன்னாங்க."

கனத்த மௌனம். தயங்கியபடி ஒரு மக்கள் பிரதிநிதி கேட்கிறார் : "நம்மிடையே உண்மை பேசும் பழக்கம் மறைந்து கொண்டே வருகிறது. அதனால கேள்வி களுக்கு மெய்யான பதிலையே சொல் றாங்கன்னு எப்படி உறுதி செய்வீங்க?"

"அதுக்கும் வழி இருக்கு! கிரீடம் வடிவிலே லை டிடெக்டர். அவங்க தலை யில சூட்டினோம். இப்படியாவது எல் லோரும் இந்நாட்டு மன்னராகட்டுமே! மோனிகா கேஸ்ல கிளிண்டன் உபயோகித்த அதே டிசைன் லை டிடெக்டர்! பொய் பேசினா ஊய் ஊய்னு சப்தத்தோட ஒரு ரெட் லைட் எரியும்."

"சார், அது நம்ம ஊர்ல செய்ததா?"

"ஆமா!"

"அப்ப நிச்ச யமா வேலை செய்ய வாய்ப்பே யில்லை!"

"ப்ளீஸ்! இருங்க! இது மாதிரி சந்தேகங் கள் வருமென்று தெரியும். அத சரிகட்டவே நாங்க அவங்க சொல்கிற பதிலுக்கு நேர்மாறான பதிலை எடுத்துக்கிட்டோம்."

"என்ன சார் குழப்பறீங்க? புரியலையே!"

"உதாரணமா அவங்க கை சின்னத்திற்கு வோட்டுப் போட்டதா சொன்னா நாங்க கால் சின்னம் கணக் கில எடுத்துப்போம்."

மாதுரி

## சீப்பில் வாசிக்கிறார்!



படத்திலிருப்பவர் சசிதரன். வயது 40. இவர் வாசிக்கும் இசைக்கருவி ஆச்சரிய மான ஒன்று. ஆம்! சாதாரண சீப்புதான் சீப்பில் காகிதத்தை மடித்துப் பிடித்துக் கொண்டு வாயில் வைத்து வாசிக்க, நாதஸ்வரம் முதல் சாக்ஸபோன், ஷெனாய் வரை விதம்விதமான இசைக்கருவிகளின் இசையை வரவழைக்கிறார்!



## நடிகர்களுக்கு வந்த நஷ்டம்!

பிரபலமான ஹாலிவுட் ஸ்டார்கள் சிலர் ஒன்றுசேர்ந்து, 'பிளாநெட் ஹாலி வுட்' என்று ஹோட்டல்களைத் திறந்தார் கள். ஆனால் பிசினஸ் ஆகவில்லை. ஒரு வருடமாக நஷ்டம். இழுத்து மூடிவிடலாமா? இல்லை விற்று விடலாமா? என்று ஆலோ சித்துக் கொண்டிருக்கிறார்கள்!

– சி. எம்.

"பிரமாதம் சார்!"

"இதற்குப் பேர்தான் பெர்ஃபெக்ட் ஆன் லைன் கனெக்ஷன். அதே மாதிரி AB சிறந்த பிரதமர்னு சொன்னா நாங்க XYZனு எடுத்துப்போம்."

"கொன்னுட்டீங்க போங்க!"

"இப்படிச் சுலபமா, புரியக்கூடிய, குழப்ப மில்லாத நகல் வாக்கெடுப்பு 370 சாவடியில் 20,000 பேரிடம் நடத்தினோம். முடிவுகள் ரொம்ப துல்லியமா வந்தன. எங்க கணிப் புப்படி நூறு இடங்கள்ல, ஆளுங்கட்சி 51 இடமும் எதிர்க்கட்சி 48 இடமும் ஜெயிக்க வாய்ப்பிருக்கு. மற்றவை 0. இது 9.5% லேயிருந்து 10.5% சரியான கணிப்பு. போர் வெற்றியால 7% ஆளுங்கட்சிக்கு கூடுதல் வாக்கு கிடைக்கும். அதே சமயம் பெண்கள் வோட்டு 9% எதிர்க்கட்சிக்கு போயிடும். வடக்கில் 17% எதிர்க்கட்சிக்கு மாறினா தெற்கில் புதிய கூட்டணி காரணமாக 19% அதிக வாக்கு ஆளுங்கட்சிக்கு. அரசாங்க ஊழியர் வோட்டு சிதறி ரெண்டு பேருக்கும் 3½% கூடுதல் வாக்குப் பதிவு, முதல் முறை வோட்டுப் போடறவங்க மனத்துக்கு பிடித்த சின்னங்களுக்கு போட்டதால .1½%...."

"சார் கொஞ்சம் இருங்க சார்! முடிவா யாருக்கு ஆட்சின்னு மட்டும் சொல்லுங்க போதும்!"

"அதான் நகல் வாக்கெடுப்பு தெளிவா காட்டுதே! ஆளுங்கட்சி வரலாம், எதிர்க்கட்சியும் வரலாம். ஆளுங்கட்சி வந்து அதோட கூட்டணிக் கட்சி காலை வாரி விட்டு எதிர்க்கட்சி ஆட்சியைப் பிடிக்க லாம். இல்ல எதிர்க்கட்சிக்கு வந்து அவங்க கூட்டணில சிக்கல் ஏற்பட்டு மறுபடியும் ஆளுங்கட்சியே வரலாம். இரண்டுமில்லாம சீட்டே கிடைக்காத இதர கட்சிகள் கூட்டணி சேர்ந்து மூன்றாவது அணியும் வரலாம்.

"இதற்கு மேல் நேரமில்லாததால் நிகழ்ச்சியை அரைமனதோடு முடித்துக் கொள்கிறோம். இந் நிகழ்ச்சியில் பங்கேற்ற அனைவருக்கும் மாம் அண்ட் பாப் கம்பெனியார் அரை கிலோ லாலி பாப் இலவசமாகத் தர இருக்கிறார்கள்."

"கிலோ கணக்குல லாலி பாப்பா?"

"ஏன்? அல்வா மட்டுந்தான் கிலோ கணக்கில வருமா? லாலி பாப்பும் அப்படித்தான். இது உங்கள் எலக்ஷன் சானல்!"

ஸ்பேஸ் ஈகிளுடன் தரைக் கட்டுப்பாட்டு நிலையத்திற்கு இருந்த தொடர்பு துண்டிக்கப்பட்ட அதிர்ச்சியில் தாமு துவண்டார்.

''ரஷ்ஷ்ஷ்ஷ்ஷ்ஷ்!'' அடிவயிற்றிலிருந்து வீறிட்டுக் கத்தியவர் கால்கள் மடங்கி பொத்தென்று கீழே சாய்ந்தார். யாருக்கும் எதுவும் செய்யத் தோன்றாமல் சிலர் தொடர்புக்காக தொடர்ந்து கத்திக் கொண்டேயிருக்க, சிலர் குறுக்கும் நெடுக்குமாய் ஓட ஆரம்பித்தார்கள். தலைவருக்கு அவசரமாய் தகவல் பறக்க, நொடியில் லைனுக்கு வந்தார்.

"ஹலோ... ஹலோ தாமு! என்னாச்சு?"

"சார்! நான் மயன் பேசறேன். ராக்கெட்டோட லிங்க் ஃபெயில்யூர். அப்லிங்க் அன்ட் டவுன்லிங்க் ரெண்டுமே வேலை செய்யலே. எப்படீன்னு புரியலை. மிஸ்டர் தாமு மயக்கம் போட்டு விழுந்து கிடக்கிறார்."

"எப்படி? எப்படியாச்சு? மயன் க்விக். இன்ஸ்டிடியூஷனின் பொறுப்பை ஏத்துக்குங்க. மிஸ்டர் தாமுவை விடுவித்து விடுங்கள். எஸ்.ஈ. என்னாச்சு? ஜியோஸ்டேஷனரி ஆர்பிட்ல இருக்கிற சால்மோ டெலஸ்கோப் என்னாச்சு? ட்ரேஸ் பண்ணுங்க, க்விக்!"



செய்யாறு தி.தா. நாராயணன்

"யுவர் ஹைனஸ்! எஸ்.ஈக்கு ஒன்றுமாகி விடவில்லை. சரியான திசை, சரியான வேகத்தில்தான் போய்க் கொண்டிருக்கிறது. இப்போது எஸ்.ஈயின் வேகம் 40320 கி.மீ./மணி. காஸ்மோவின் இமேஜ் பாருங்கள்."

இப்போது தலைவருடைய ஸ்கிரீனில் ராக்கெட் தெரிய ஆரம்பித்தது.

"ஹலோ... ஹலோ... திஸ் ஈஸ் எர்த் கன்ட்ரோல்" ரஷ்ஷ்... ரஷ்ஷ்... ஆர் யு லிஸனிங்? ஹலோ.. ஹலோ" விஞ்ஞானிகள் ஒவ்வொருத்தரும் பதைபதைப்புடன் எவ்விதத்திலேனும் எஸ்.ஈ.யுடன் தொடர்பு கொள்ள முயன்று கொண்டிருக்க, ஊஹூம்....

அங்கே என்னதான் நடக்குது? நார்மலா போய்க்கிட்டிருக்கிற எஸ்.ஈ.யில் லிங்க் மட்டும் எப்படி? உன்னே அந்த ஜந்து... ஜந்துவா? மனிதனா? யார் அதை முழுசாய்ப் பார்த்தார்கள்? அப்படியேயிருந்தாலும் அதனால் தொடர்புகள் துண்டிக்கப்பட வாய்ப்பு இல்லையே? ஒருவேளை அந்த ஜந்து ரிஸீவிங் ஆன்டெனாவை அடித்து நொறுக்கி விட்டிருக்குமோ? – அனைவருக்கும் முகம் செத்துப் போயிருந்தது.

"மிஸ்டர் மயன்! தாமு எழுந்து விட்டாரா?"

"இல்லை சார்! இன்னும் மயக்கம் தெளியவில்லை. டாக்டர்ஸ் டீம் செக் பண்ணிக்கிட்டிருக்கு."

"சே! என்ன பண்ணுவது? இதனால் உலக அளவில் நமக்குக் கேவலமாயிற்றே. எப்படிக்..ம்..ம்... மயன்! சூர்யா எங்கே? கால் ஹர். அவளைக் கேட்கணும்."

"சார் பைனல் செக்கப் முடிந்தவுடன்

அவங்க ரெண்டு நாள் லீவில் போயிட்டாங்க. இரண்டு நாளும் தூக்கமில்லை. டயர்டாயிருக்கு என்று அவங்க சிநேகிதியோட போயிட்டாங்க. மிஸ்டர் தாமுவுக்குக் கூட இன்னும் தெரியாது."

"த்சு. சே! எங்கிருந்தாலும் ட்ரேஸ் பண்ணச் சொல்லுங்க. எஸ்.ஏ.எஸ். கமான்டரிடம் செய்தி கொடுங்கள். சீக்கிரம்."

அதற்குள் துப்பறியும் டீம் ஒன்று திமுதிமுவென்று வந்து எல்லா இடங்களையும் மொய்த்துக் கொண்டது. விசாரணை... விசாரணை... மற்றொரு பக்கம் ஃபொரன்ஸிக் ஆட்கள் சல்லடை போட்டுக் கொண்டிருக்க, இன்னொரு டீம் ராக்கெட்டின் லாஞ்சிங்கில் பங்கேற்ற எலக்ட்ரானிக் சமாசாரங்களை நுணுக்கமாய்க் குடைந்து கொண்டிருந்தது.

ஒரு மணி நேரத்தில் துப்பறியும் டீமின் தலைவர் ரிப்போர்ட்டுடன் தலைவர் முன்பு நின்றார்.

"சார்! நம் எதிரி இங்கிருந்துதான் வேலை செய்திருக்கிறான்."

"அபத்தம். இங்கே எதுவும் நடந்திருக்க சான்ஸ் இல்லை" – இது மயன்.

"வெயிட்.. வெயிட் சார்! எல்லாவற்றையும் தரோவாகப் பார்த்து விட்டோம். சரியாக இரவு 10:40க்கு ஃபைனல் செக்கப் முடிந்து முதலில் சூர்யா இதர அஸிஸ்டென்ட்டுகளுடன் ராக்கெட்டிலிருந்து வெளியேறியிருக்கிறான். அப்புறம் 11:50க்கு தாமுவும் வெளியே வந்து விட்டார். XXXLR 89-ல் பதிவாகியிருக்கு. அதற்கப்புறம் எவரும் நுழையவில்லை. செக்யூரிட்டியை கம்ப்யூட்டர் கவனித்துக் கொண்டிருந்திருக்கிறது. இங்குதான் எதிரி விளையாடியிருக்க வேண்டும். சரியாக 12:20க்கு அதாவது 12:20லிருந்து 12:25 வரை எல்லா ஸிஸ்டங்களும் நின்று அப்புறம் வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறது. அது எப்படி? ஏன்? என்று தெரியவில்லை. இது அனுமானம் இல்லை. மானிட்டரில் அந்த ப்ரேக் பஞ்ச் ஆகியிருக்கு. அநேகமாய் அவர்கள் நம் கேந்திர கம்ப்யூட்டரை வசப்படுத்தியிருக்க வேண்டும். அதன் மூலம் ஆணைகளைச் செயல்படுத்தியிருக்க வேண்டும். எஸ். அந்த ஐந்து நிமிடங்களில்தான் என்னமோ நடந்திருக்கு. கைடன்ஸ் சர்க்யூட்டை மாற்றியிருக்கலாம். ரிஸிவிங் ஆன்டெனாக்கள் ஒரு குறிப்பிட்ட நேரத்திற்குப் பின்பு பழுதடையுமாறு ஏதாவது யுக்தியைக் கையாண்டிருக்கலாம். ஆனால் ஒரு விஷயம் நிச்சயம். ராக்கெட்டிற்குள் எதிரிகள் எவரு

மில்லை."

மிஸ்டர் மயன் உதட்டைப் பிதுக்கினார்.

"உபயோகமில்லாத ஸ்டேட்மென்ட். ஏதோ ஒரு உருவம், ஒரு ஜந்து, அல்லது ஒரு சக்தி நகருவதை இங்கே எல்லோருமே பார்த்தாயிற்று. அது? சென்ற நூற்றாண்டுகளில் நம்பப்பட்டு வந்த அமானுஷ்ய விஷயங்களா?"

"சொல்கிறேன் சார்! ராக்கெட் கிளம்ப பத்து நிமிடங்கள் இருக்கும்போது கடைசியாக ராக்கெட்டின் பேலோடு சரிபார்க்கப்பட்டிருக்கிறது. 380.815 டன்கள். ரஷ்ஷூவையும் சேர்த்து. அது நிர்ணயிக்கப்பட்டிருந்த சரியான எடைதான். அடுத்து நீங்கள் எல்லாம் ஸ்கிரீனில் பார்த்ததை நாங்களும் போட்டுப் பார்த்துட்டோம். ரஷ்ஷூ அலறும் அந்த வினாடியில் ராக்கெட் புவிசர்ப்பு விசையின் எல்லையைத் தாண்டி மூன்று மணி நேரமாகி விட்டிருக்கிறது. அவர் பின்புறம் இருந்த ஒரு பொருள் எடையற்ற நிலையில் மிதந்தபடி நகர்ந்து வந்திருக்கலாம்."

"மிஸ்டர் மயன், இதுகுறித்து நீங்கள் என்ன சொல்கிறீர்கள்? - இது தலைவர்.

"சார்! இவர் நம்முடைய தயாரிப்பைப் பற்றித் தெரியாமல் பேசுகிறார். ராக்கெட்டினுள் எந்தப் பொருளும் மிதக்க முடியாது. எல்லாம் ராக்கெட்டின் உட்புறச் சுவர்களில் உறுதியாகப் பிணைக்கப்பட்டிருக்கும், உயிருள்ளவை தவிர. மேலும் உள்ளேயிருக்கும் ஒரு பொருளைப் பார்த்தா ரஷ்ஷூ அப்படி அலறியிருப்பார்? அதிலும் ரஷ்ஷூ எதையும் சமாளிக்கப் போதிக்கப்பட்டிருக்கிறார். நாம் பார்த்தவரையில் அவர் லேசர் கன்னை உபயோகிக்க முனையவேயில்லை. பெரும் அதிர்ச்சியில் உறைந்த நிலையில் கத்திக் கொண்டிருந்தார். என்ன அர்த்தம்? யோசிக்க வேண்டும்" - பொரிந்து தள்ளினார் மயன்.

இப்படி இவர்கள் தீவிரமாய் விவாதித்துக் கொண்டிருக்க ஹாட் லைனில் தொடர்ச்சியாய் தலைவருக்கு போட்டோ போன் கால்கள் வர ஆரம்பித்தன. அவ்வளவு சீக்கிரத்தில் விஷயம் உலகம் முழுக்க பரவிவிட, எல்லா நாட்டுத் தலைவர்களிடமிருந்தும் அனுதாபச் செய்திகள்.

"எங்கள் நாட்டு மக்களும் நானும் உங்களது துக்கத்தில் பங்கெடுத்துக் கொள்கிறோம்."

"மிஸ்டர் தாமுவின் குடும்பத்தாருக்கு எங்கள் பரிவான விசாரணையைச் சொல்லுங்கள்."

செய்திகள் பல்வேறு திசைகளிலிருந்து வர வர, தலைவர் அமைதியாகி விட்டார். எவ்வளவு அவமானம்! உலக அரங்கில் நம் திறமையில் ஒரு சறுக்கலாகி விட்டதே!

எல்லோரையும் அனுப்பிவிட்டு, தம் ஆலோசகர்களில் ஒருவரான மிஸ்டர் சக்தியை வரவழைத்தார்.

"சக்தி! மிஸ்டர் தாமுவின் கான்பிடன்ஷியல் ரிப்போர்ட் ரெடியா? என் சந்தேகம் அவர் மீதுதான்."

"சார்! லாஜிக் சரியாக வரவில்லை. உள்ளே இருப்பது அவர் மகனல்லவா?"

"எல்லா கோணத்தையும் யோசித்து

---

"திருடப்போன இடத்துல பீரோ சாவிய கேட்டு மிரட்டினது வம்பாப் போச்சு!"

"ஏன்?"

"பீரோ வாங்கிக் கொடு. சாவிய தர்றோம்னுட்டாங்க!"

– அம்பை தேவா





"பிழைக்க எவ்வளவோ வழி இருக்கும் போது, நீ திருட்டுத் தொழிலை தேர்ந்தெடுக்க என்ன காரணம்?"

"நம்மால 4 போலீஸ்காரங்க குடும்பம் பிழைச்சிட்டுப் போகட்டுமேன்னுதான்!"

— சீர்காழி வி. ரேவதி

விட்டேன். மகன் என்ற உறவையும் மீறி இப்படிச் செய்ய ஒரு காரணமிருக்கிறது. உனக்கு அது தேவையில்லை. நான் கேட்டதற்கு மட்டும் பதில் சொல்!"

"சார்! ஆறு மாதங்களாக அவரை உளவு பார்த்ததில் அவரிடம் தவறு எதுவுமில்லை."

தலைவர் சக்தியை ஊடுருவிப் பார்த்தார்.

"பின்னால் உங்கள் ஸ்டேட்மென்ட் பொய்யென்று நிரூபிக்கப்படுமானால் உங்கள் பெயர் சென்ஸஸ் லிஸ்ட்டிலிருந்து நீக்கப்படும், தெரியுமல்லவா?"

சக்தி என்று விளிக்கப்பட்ட அவர் தலை தாழ்த்தினார்.

"தெரியும் சார்! நான் பார்த்த உண்மையைத்தான் சொல்லுகிறேன். இரண்டு மாதங்களுக்கு முன்பு கூட வெளிநாட்டுக் கும்பல் ஒன்று டூரிஸ்ட் என்ற போர்வையில் அவரிடம் நெருங்கி பேரம் பேசியது. மிஸ்டர் தாமு அவர்களை ரோபோக்களை விட்டு அடித்துத் துரத்தினார். அவருடைய ஒவ்வொரு நடவடிக்கையும் கண்காணிக்கப்படுகிறது.

"இல்லை... சரி.. சரி.. பார்ப்போம்."

"சார்!" – சற்று தயங்கினார்.

"உம் சொல்லுங்கள். எனக்குக் கோபமில்லை. சொல்ல வந்ததைச் சொல்லுங்கள்!"

"தப்பாக நினைக்கக் கூடாது சார்! அவர் உங்கள் நெருங்கிய நண்பரல்லவா?"

"நட்பு வேறு. அரசியல் வேறு. அத்துடன் இந்தப் பதவிக்கு கடினத்தன்மை அத்தியாவசியமாகிறது. இல்லையேல் எதிரிகள் சுலபத்தில் என்னை வீழ்த்தி விடுவார்கள். என் கனவுகளைச் சாதிக்கும் வரை நான் விழ மாட்டேன். இந்த நாடு வல்லரசானது போதாது. பொருளாதாரத்தில் மேம்பட வேண்டும். மக்கள் ஒவ்வொருத்தரையும் உழைக்கப் பழக்கவேண்டும். சோம்பேறிக்கு இங்கு இடமில்லை. இது என் உயிர் மூச்சு" – அவர் கண்கள் மின்ன பேசிக் கொண்டேயிருந்தார்.

மிஸ்டர் சக்திக்கு நெருப்பின் மேல் நிற்பதைப் போலிருந்தது. தலைவரின் அந்தரங்கங்களைத் தெரிந்து கொண்டவர்களுக்கு எப்போதும் தலைக்கு மேல் லேசர்கள்.

அப்போது ஒரு சீக்ரெட் ஏஜெண்ட் அவசரமாய் வந்து ஒரு குறிப்பைத் தந்து விட்டுச் சென்றான். அதைப் பிரித்துப் பார்த்து 'ஆ!'வென்று அலறினார். அவ்வளவுதான். சிறிது நேரத்தில் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தார்.

தலைவர் யாராலும் புரிந்து கொள்ள முடியாத ஓர் அதிசய மனிதர். இந்திய நாடே அவர் கோபத்தைக் கண்டு அடங்கு கிறது. உலக நாடுகள் அடுத்து என்ன செய் யப் போகிறாரோ? என்று அவர் தந்திரங் களைக் கணிக்க முடியாமல் மூளையைக் கசக்கிக் கொண்டிருக்கிறது. இவர் இதோ இப்பொழுது சிறு குழந்தையை போல தேம்பித் தேம்பி அழுது கொண்டிருக்கிறார். சக்தியால் தன் கண்களை நம்ப முடியவில்லை. இவருக்கு அழுகை கூட வருமா?

"சார்.. சார்! ப்ளீஸ்!"

நிமிர்ந்து அவரைப் பார்த்து விட்டு கண்களைத் துடைத்துக் கொண்டார். அடுத்து ரிமோட்டில் அந்த அறையின் கதவை உள்புறம் பூட்டி விட்டார்.

"உட்காருங்கள் சக்தி!"

"இல்லை சார். இல்லை சார்! நான் நிற்கிறேன்" – அவர் அவசரமாக மறுத்தார்.

"இல்லை. கொஞ்ச நேரத்திற்கு நாம் இந்தப் பாசாங்குகளையெல்லாம் கழற்றி வைத்து விடுவோம். நாம் இருவரும் மனிதர்கள். பரிவைத் தேடும் சராசரி மனிதர்கள். உட்காருங்கள்."

யோசனையாய் அவரைப் பார்த்தபடி உட்கார்ந்தார்.

"என் மன ஆறுதலுக்காக உங்களிடம் சற்று பேசப் போகிறேன். நாம் பேசப் போகும் விஷயங்கள் ஆஃப் த ரெக்கார்ட். ஸ்ட்ரிக்ட்லி கான்ஃபிடன்ஷியல். எந்தச் சூழ்நிலையிலும் வெளிவரக்கூடாது."

## குவிஸ் போட்டி – 7 முடிவு!

### சரியான விடைகள்:

**1) 1903 2) கிர்க் பாட்ரிக் மாக்மிலன் 3) ரோல்ஸ் ராய்ஸ் 4) எமிட்டென் 5) கல்கத்தா 6) அப்போலோ -11 7) டெட்ராய்ட் 8) சுற்றுப்புறச் சூழல் பாதுகாப்பு**

சரியான விடைகளை ஏராளமான வாசகர்கள் எழுதியிருந்தார்கள். அவர்களுள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு ரூ.200 பரிசு பெறும் அதிர்ஷ்டசாலி:

**எல். துர்கா தேவி,**
**அண்ணா நகர்,**
**மங்கைநல்லூர் அஞ்சல்,**
**மயிலாடுதுறை வட்டம்.**

## பிஸி டைரக்டர் இவர்தான்!

**கமாண்டர், ஹலோ இன்ஸ்பெக்டர், மார்ஷல், சிம்சிலா என்று பல்வேறு டி.வி. சானல்களிலும் ஒளிபரப்பாகிக்**



**கொண்டிருக்கிற பல டி.வி. தொடர்களின் இயக்குனர் கௌதம் அதிகாரி. அதிக பட்ச டி.வி. தொடர் எபிசோட்களை இயக்கியவர் என்ற வகையில் லிம்கா புத்தகத்தில் சாதனையாளராக இடம் பெற்றிருக்கிறார். கடந்த பதினோரு வருடங்களில் இவர் இயக்கிய எபிசோட்களின் எண்ணிக்கை பனிரெண்டாயிரம்.**

**"காலை ஏழுமணிக்கு ஆரம்பித்தால், பிற்பகல் இரண்டு மணிவரை ஒரு தொடரின் இயக்கம். இரண்டு மணி முதல் இரவு பத்து மணிவரை அடுத்த வேலை. அப்புறம் மூன்றாவது ஷிப்ட் வேலை விடியற்காலை ஐந்துமணிவரை. இப்படி மூன்று ஷிப்ட் வேலை பார்த்த நாட்கள் பல உண்டு!"என்கிறார் இந்த (கௌதம்) அதிகாரி.**

**— சி.எம்.**

சக்தி அவசர அவசரமாகத் தலையாட்டினார்.

"என் குடும்பத்தைப் பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது இல்லையா? எனக்கொரு மகன் உண்டு. சரண். என் மனைவி? இல்லை. அவள் இப்போது என்னுடன் இல்லை. நாங்கள் பிரிந்து பல வருடங்களாகி விட்டன. ஹூம் இதுபோன்ற தலைமைப் பதவியிலிருப்பவர்களுக்கு குடும்பம் கூடாது சக்தி! எனக்கு இருபத்தி நாலு மணி நேரம் கூடப் போதவில்லை. அப்புறம் அவளுக்கென்று, சில மணிகளைக் கூட ஒதுக்க முடியவில்லையென்றால் யார்தாம் இந்த பந்தத்தில் ஒட்டிக் கொண்டிருப்பார்கள்? பிய்த்தெறிந்து விட்டுப் போய் விட்டாள்" – முகத்தை அழுந்தத் துடைத்தார்.

"என் மகனுக்கென்று சில கட்டளைகள் இருக்கின்றன. அவன்தான் என் மகன் என்று எந்தச் சூழ்நிலையிலும் அவன் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளக் கூடாது. பெரிய பதவியிலிருப்பவர்கள் அவனுக்குச் சலுகைகளை அளித்து அவன் மூலம் என்னை நெருங்க முயற்சி செய்வார்கள். அதை அனுமதிக்க மாட்டேன். என் மகன் தன் சுய முயற்சியால் படித்து மேலுக்கு வர வேண்டும். இதுதான் என் ஆசை. என்னை முழுமையாய்ப் புரிந்து கொண்ட ஒரே ஜீவன் அவன்தான் சக்தி! அவன் எங்கிருக்கிறான் தெரியுமா? நம் ஆர்மியில், ஒரு சாதாரண சிப்பாய். அவன் தகுதிக்குக் கிடைத்த பதவி. அவன்... அவன்... நேற்று பார்டரில் சீனாவுடன் நடந்த சின்ன ஃபைரிங்கில் போய் விட்டான். சரண் போய் விட்டான்."

மீண்டும் அவர் குலுங்கிக் குலுங்கி அழுதார். சில நிமிஷங்கள்தான்... சக்தி நெகிழ்ச்சியாய் அவரைப் பார்த்துக் கொண்டிருக்க, தலைவர் எழுந்தார். முகத்தை அழுத்தித் துடைத்தார். அறைக்குள்ளே சிறிது நேரம் குறுக்கும் நெடுக்கும் நடந்தார். நடந்து சென்று, ஜாடியிலிருந்த குளிர்ந்த நீரை எடுத்துக் குடித்தார். அவ்வளவுதான். இப்போது இவர் பழைய தலைவர். எதிரியை ஊடுருவும் திட்சண்யமான பார்வை, எதிரிக்கு கலக்கத்தை ஏற்படுத்தும் கடுகடு முகம் எல்லாம் நொடியில் வந்து விட்டது. இதற்கிடையில் வெளியில் யாரோ தலைவரைப் பார்க்கக் காத்திருப்பதாக சிக்னல்கள் வந்து போயின.

"ஓ.கே. மிஸ்டர் சக்தி! சொன்னது நினைவிருக்கட்டும். ரகசியம் வெளியில் கசிந்தால்!" – ஆட்காட்டி விரலை உயர்த்தி எச்சரித்தார்.

"ஜாக்கிரதையாக இருப்பேன் சார்!" – விறைப்பாய் சல்யூட் வைத்து விட்டு வெளியேறினார். இன்னொரு உதவியாளர் அவசரமாக உள்ளே ஓடி வந்து,

"சார்! எஸ்.ஏ.எஸ். கமான்டரிடமிருந்து போன்" – அவர் செல்லுலாரை நீட்ட, காதில் வாங்கி கண்ணால் ஸ்கிரீனைப் பார்க்க எஸ்.ஏ.எஸ். கமான்டர் திருத்தமான, நறுக்கிய மீசையுடன் அசட்டுத்தனமாய் வழிந்தார்.

"சொல்லுங்கள்!"

"சார்! சூர்யாவை ட்ரேஸ் பண்ணி விட்டோம்."

(தொடரும்)



# உனக்காக எல்லாம் உனக்காக

**பா**த்திரம் புதுசு; சரக்கு பழசு என்று சுமார் லட்சம் சினிமாக்களுக்கு பன்ச் லைன் கொடுத்திருப்பார்கள். உடைக்க வேண்டாமா இந்த மரபை? வரிந்து கட்டிக்கொண்டு பாத்திரமும் பழசு; சரக்கோ அரதப் பழசு என்று எழுத வைக்க முழு மூச்சுடன் உழைத்திருக்கிறார் உள்ளத்தை அள்ளித் தந்தவர்.

அதே கார்த்திக், அதே ரம்பா (அதே ரக நடனங்களுடன்) அதே கவுண்டமணி (அதே கடித்துப் பிறாண்டும் நகைச்சுவையுடன்) அதே ஜெய்கணேஷ் காம்பினேஷனில் அதேமாதிரி ஆரம்பிக்கிறது படம்.

ராமாயணத்தில் மட்டுந்தானா அண்ணலும் அவளும் நோக்கியவுடன் வர வேணும் காதல்? இந்த 'ரம்பாயண'ங்களுக்கும் ஃபார்முலா சாலப் பொருந்துகிறது. ஒரு பூ மூட்டை மாதிரி எங்கோ உப்பரிகையிலிருந்து அம்மணி தவறி விழுவாராம். அருமை அண்ணன் அவர் கிழே விழாமல் கையில் ஏந்திக் கொள்வாராம். உடனே வந்துவிடும் ஒய்யாரக் காதல்!

இதென்ன கலாட்டா என்று யாரும் கேட்டு விடக் கூடாது. பிறகு சுந்தர். சி, அருணகிரி நாதர் கதையைத் துணைக்குக் கூப்பிட்டு விடக் கூடும்.

லட்ச ரூபாய் செலவில் பிறந்தநாள் விழாக் கொண்டாடும் பணக்கார உதவாக் கரை கிராமத்து இளைஞனாக வருகிறார் கார்த்திக். எல்லோரும் திட்டித் திட்டி அந்த கொழ கொழ மொழியை முக்காலே மூணு வீசம் தவிர்த்திருப்பது மிகப் பெரிய ஆறுதல். (இன்னொரு ஆறுதல், சொந்தக் குரலில் பாடாதிருப்பது)

ரம்பாவைக் காதலித்து, வம்பான விவகாரங்களில் சிக்கிக்கொண்டு, (எல்லாம் சந்தர்ப்பவசமய்யா) இரண்டு மூன்று பெண்களுக்குக் கணவர் அல்லது 'கட்டிக்கப் போகிறவர்' என்பதாக முடிச்சுகள் விழ, உச்சக் கட்டத்தில் எல்லா முடிச்சும் அவிழ்வதோடு சுபம் கார்டு போடுகிறார்கள்.

நகைச்சுவைப் படங்கள் ரொம்ப நல்லதுதான். அடிதடி மசாலாக்களுக்கு ஆரோக்கியமான மாற்றுங்கூட. ஆனால், கையால் கிச்சுகிச்சு மூட்டி சிரிப்பு வராத பட்சத்தில் உலக்கையால் குத்தி சிரித்தே ஆக வேண்டும் என்றால் எப்படி?

கவுண்டமணி ரிடையராகியே தீர வேண்டும். அவரது உரத்த குரல் வசனங்களைக்கூடச் சகித்துக் கொள்ளலாம்; இந்த வயதில் டான்ஸெல்லாம் ஆடி, ரசிகர்களின் ராத்தூக்கத்துக்கு பங்கம் விளைவிப்பது கருணையுள்ளவர்கள் செய்யக் கூடிய காரியமல்ல. அவர் பாஷையிலேயே வேண்டுகோள் விடுப்பதென்றால், 'அட சாமி! போதும்டா! வேணாமடா சாமி!'

யு.கே. செந்தில்குமாரின் கேமராவுக்கும் யுவன் சங்கர் இசைக்கும் பெரிய வித்தியாசமில்லை. இரண்டும் மூட வைக்கிறது. ஒன்று கண்ணை; மற்றது காதை. இருவரும் இடது கையால் வேலை பார்த்திருக்கிறார்கள்.

கார்த்திக்கின் அப்பாவாக வரும் வினுசக்கரவர்த்தி மட்டுந்தான் பாராட்டும்படியாக உழைத்திருக்கிறார். எப்படிப்பட்ட உழைப்பு என்பதை விரைவில் கண்டு அனுபவித்து விடுவீர்கள்—

உலகத் தொலைக் காட்சிகளிலேயே முதன் முறையாக – ஏதாவது ஒரு சேனலில்.

— ஔரங்கசீப்



• ரயிலில் டாகுமெண்டரி

# ரயிலில்

## போகுமிடம் வெகுதூரமில்லை

"**வா**ராய்... நீ வாராய்" என்று 'வர்ஷா' – முதல்வரின் பங்களா – கோபினாத் முண்டேவைப் பார்த்து கண்சிமிட்டிக் கொண்டிருக்கிறது. முண்டேவும் 'சி.எம்.' கனவுகளை கண்களில் தேக்கிக் கொண்டு 'வர்ஷா'வைக் காதலோடுதான் பார்க்கிறார். ஆனால்... அதற்கு 28ல் குறைந்தது 14.5 சீட்டுகளையாவது கைப்பற்ற வேண்டும்; அதிலும் பி.ஜே.பியின் கை ஓங்கியிருக்க வேண்டும்; மைத்துனர் பிரமோத் மகாஜனின் ஒத்துழைப்பு வேண்டுமானால் கிடைத்துவிடும்; ரிமோட் கண்ட்ரோல்காரர் ஒப்புக் கொள்ள வேண்டுமே? பிஜேபிகாரர்கள் அதற்குள் அமைச்சரவைப் பட்டியலையே தயாரித்து, கோட்டைகள் கட்டுகையில்... '14.5' கிடைக்காமல் போனால்? ஷரத் பவாருடன் கைகோத்துக் கொண்டு, 'வர்ஷா'வை முற்றுகையிடுவார்களா என்றால்... "ஊஹூம்... வாழ்ந்தாலும் வீழ்ந்தாலும் சிவசேனையுடன்தான்" என்கிறார் முண்டே. உண்மையில் முண்டேயின் பங்களாவான 'ராம்டெக்', 'வர்ஷா'விலிருந்து கூப்பிடு தூரம்தான். இரண்டுமே 'மலபார் ஹில்'லில்தானிருக்கின்றன. தனியாக நடந்தால் பொடிநடையில் அடைந்து விடலாம். கூடவே ஒரு சுமையையும் தூக்கிக் கொண்டு நடந்தால்...? மன ·க்கோட்டை வேறு. மனக்கோட்டை வேறாயிற்றே?

## போலீசுக்கே குல்லாய்!

**ஆ**யிரக்கணக்கான கணபதிகள் 'விசர்ஜனுக்கு'ப் போகும் கணபதி விழாவின் இறுதி நாளன்று, எல்லோரும் அடித்துப் பிடித்துக் கொண்டு இரண்டு மணிக்கே வீடு வந்து சேர்ந்தனர். ஊர்வலத்தில் மாட்டிக் கொண்டால் அதோகதிதான் என்ற பயம்தான் காரணம். ஆனால் வேறுவழியில்லாமல் மாலை வரை மேஜை தேய்த்தவர்கள், கலவரத்துடன் நடுங்கிக் கொண்டே தெருக்களில் காலை வைத்தால்... என்ன ஆச்சர்யம்! போலீசார் திரள் திரளாக நின்று கொண்டு, பொது மக்களுக்குத் தங்குதடையில்லாமல் போக்குவரத்துக்கு வழி அமைத்துக் கொடுத்தனர். ஊர்வலத்தினரின், காதைச் செவிடாக்கும் சப்தத்திலும், குலால்பொடியின் அபிஷேகத்திலும், விதவிதமான கணபதிகளின் படையெடுப்புக்குமிடையே பல மணி நேரங்கள் நின்று போக்குவரத்தைச் சரிசெய்வது சாமானியமா? மும்பை போலீசின் திறமைக்கும் பொறுமைக்கும் "ஹேட்ஸ் ஆஃப்" சொல்லலாமென்று பார்த்தால்...

இதென்ன... இருக்கிற "ஹேட்டை" எடுத்து வீசுகிறார்களே காவல் துறையினர்?

பழைய காந்தி குல்லாய்க்குப் பதிலாக புதிதாக க்ரீட குல்லாய் போட்டு பெருமைப் படுத்தலாம் என்ற நல்ல நோக்குடன்தான் டி.ஜி.பி. மெனக்கெட்டு 80 லட்சம் செலவழித்து, 'பாப்புலர் ஸோலா ஹாட்' கம்பெனிக்காரர்களிடமிருந்து, நவீன குல்லாய்களை வாங்கி, தமது துறையினருக்கு விநியோகித்திருக்கிறார். ஆனால் இவர்களுக்கு மிடுக்கு சேர்ப்பதற்குப் பதிலாக, 'ஹோட்டல் வெயிட்டர், பாண்ட்வாலா, ஜோக்கர்' போன்ற இடக்கு முடக்கான விமர்சனங்களை அல்லவா சேர்த்திருக்கிறது? போதாக்குறைக்கு, இரண்டே மாதத்துக்குள் நூல் நூலாகப் பிரிந்து, நைந்து, நொந்து காணப்படுகிறது! போலீஸ் தலையிலேயே கைவைத்திருக்கிறார்களே... இந்த மும்பை பிசினஸ்வாலாக்கள் கில்லாடிகள்தான்!

## லேடீஸ் ஸ்பெஷல்

"தினமும் ரயிலேறுமுன், உங்கள் பெண்கள் எல்லாம் புடவையை இழுத்து சொருகி, தாலியை வாயில் கவ்வி, காதணியை ஒரு திருகு திருகி விட்டு ஏறுகிறார்களே; இது உங்கள் இந்தியப் பாரம்பரியத்தில் தோய்ந்த சம்பிரதாயமா?" என்று ரொம்ப சீரியஸாக ஜெர்மனியிலிருந்து வந்திருக்கும் திருமதி பாரதி வென்னர் கேட்கும் போது, அந்த 'லேடீஸ் ஸ்பெஷல்' மகளிர் விதிர் விதிர்த்தனர். பொங்கி வரும் சிரிப்பை அடக்கிக் கொண்டு, 'இது திருடர்களிடமிருந்து எங்களைக் காப்பாற்றிக் கொள்ள எடுக்கும் நடவடிக்கைகள்' என்று எப்படிச் சொல்வது எனத் திணறித்தான் போய் விட்டனர். அவர், டோம்பிவிலியிலிருந்து CST செல்லும் இந்த லேடீஸ் ஸ்பெஷல் ட்ரெயினைப் பற்றிய டாகுமெண்டரி எடுக்க வந்திருக்கிறார் என்று தெரிந்ததும், 'ரிலாக்ஸாகி' விட்டார்கள். இரண்டு வாரம் தங்களுடன் வென்னரை ரயிலில் 'அப் டவுன்' பண்ண வைத்து, ட்ரெயினில் கறிகாய் நறுக்கி, ஸ்வெட்டர் பின்னி, அந்தாக்ஷரி பாடி, நெயில் பாலீஷ் போட்டு, தலைவாரி பூ முடித்தல் போன்றவற்றைச் செய்வது எப்படி என்பதை உற்சாகத்துடன் கற்றுக் கொடுத்திருக்கிறார்கள். நடு நடுவே மாக்ஸி, கைக்குட்டை, ஸாரி பின், வெண்டைக்காய், சீதா ஃபல் வியாபாரம் செய்யும் கலையையும் புகட்டியிருக்கிறார்கள். வென்னர் குஷியாகி விட்டார்; "எங்கள் ஊர் ரயில்களில் பயணிப்பவர்கள் 'உர்'ரென்ற முகத்துடன் எதையோ பறிகொடுத்தது போலிருப்பார்கள்; நீங்கள் இவ்வளவு சந்தோஷமாயிருக்கிறீர்களே?" என ஆச்சரியப்பட்டிருக்கிறார். "ம்..க்கும்... உங்களூர் பெண்களுக்கு அனுபவிக்க 'week end' இருக்கும்; எங்களுக்கு 'weak end' தானே?" என அவர் காதில் விழா வண்ணம் முணுமுணுக்கிறார்கள் இந்த ஸ்பெஷலான லேடீஸ்!

# பயணிப்பதில் இத்தனை சந்தோஷமா?

## சீக்கியர் சீற்றம்

இனிமேல் சர்தார்ஜி ஜோக்ஸை அவ்வளவு எளிதாக அவிழ்த்து விட முடியாது போலிருக்கிறதே? லோகல் கேபிள்காரர்கள் காட்டிய C-நியூஸில், 'சர்தார்ஜிகளைப் பற்றி ஏன் எல்லோரும் கேலி பேசுகிறார்கள்' என்று பொதுமக்களிடம் ஒரு சர்வே எடுத்து, வெளியிட்டிருக்கிறார்கள். அவர்கள் தெரிவித்த கருத்துக்கள் இவர்களை மிகவும் கேவலப்படுத்துவதாக இருக்கவே, ஒரு 25 சீக்கியர்கள், அந்தக் கேபிள் சானலின் அலுவலகத்துக்குச் சென்று, எல்லாவற்றையும் உடைத்து நொறுக்கி கலாட்டா செய்திருக்கிறார்கள். சிரோமணி குருத்வாரா பிரபந்தக் கமிட்டிக்காரர்கள் கூட்டமெல்லாம் போட்டு போலீஸ் ஸ்டேஷன் வரை சென்று விட்டார்கள். C-நியூஸ் எடிட்டர் சுனில் தேஷ்பாண்டே, பிரபல தினசரிகளில் மன்னிப்புக் கோரும்படியாயிற்று. ஹூம்... சர்தார் மிரண்டால் ம..வி. கொள்ளாது...?

— ஜெயஸ்ரீ ராஜ்

# டுப்பியின் குடும்பம் அலமு: அரஸ்





Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi

Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.

Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.

Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1900/- (Air Mail)

Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 950/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / MS (S) M4392 /99* Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka